# சங்க இலக்கியத்தில் ஊர்திகள்

தமிழ்ப் பல்கலைக்கழக முனைவர் (Ph.D) பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**க.சுமித்ரா**

சேர்க்கை எண் 1657/2009





அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்-613 010


மார்ச்சு 2014

**முனைவர் இரா. இந்து**
*உதவிப் பேராசிரியர்*
*அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறை*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்-613 010.*

# நெறியாளர் சான்றிதழ்

*தமிழ்ப் பல்கலைக்கழக அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறையில் முனைவர் பட்ட மாணவி செல்வி க.சுமித்ரா* **சங்க இலக்கியத்தில் ஊர்திகள்**' *என்ற தலைப்பில் மேற்கொண்டுள்ள இவ்வாய்வேடு என் மேற்பார்வையில் 2009-2011 ஆம் கல்வியாண்டில் முனைவர் பட்டத்திற்காக ஆய்வாளரின் சொந்த முயற்சியால் எழுதப்பட்டது எனவும், இதற்கு முன்னர் இவ்வாய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை எனவும் சான்றளிக்கிறேன்.*

*தஞ்சாவூர்* — *(இரா. இந்து)*
*14.03.2014* — *ஆய்வு நெறியாளர்*

*துறைத்தலைவர்*

**க. சுமித்ரா,**
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறை,*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்-613 010.*

## ஆய்வாளர் உறுதிமொழி

‘**சங்க இலக்கியத்தில் ஊர்திகள்**’ *என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு தமிழ்ப் பல்கலைக்கழக அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறையில் பயின்ற காலத்தில் என் சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டதென்றும், இதற்கு முன்னர் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

*தஞ்சாவூர்* *(க. சுமித்ரா)*
*14.03.2014* *ஆய்வாளர்*

# நன்றியுரை

*தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள இசைவளித்த நிருவாகத்தினருக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை முதலில் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*இலக்கிய நுட்பங்களையும், இலக்கண முறைமைகளையும் புலப்படுத்தி என்னை ஆற்றுப்படுத்திவரும் அறிவியல்தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் **முனைவர் அர.கமலதியாகராசன்** அவர்களுக்கும், அறிவியல்தமிழ் மற்றும் தமிழ்வளர்ச்சித் துறையின் மேனாள் தலைவர் மற்றும் மூத்த பேராசிரியர் **முனைவர் கு.அண்ணாதுரை** அவர்களுக்கும், மேனாள் தலைவர் மற்றும் பேராசிரியர் **முனைவர் நே.ஜோசப்** அவர்களுக்கும், மேனாள் தலைவர் மற்றும் பேராசிரியர் **முனைவர் சா.கிருட்டினமூர்த்தி** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.*

*என் ஆய்விற்கு நெறியாளராக அமைந்தும், இவ்வாய்வேடு சிறப்புற அமையத் தேவையான விளக்கங்களையும் கற்றுக் கொடுத்துத் தாய் போன்று பாசத்தோடும், கனிவோடும் உதவிய அறிவியல் தமிழ் மற்றும் தமிழ் வளர்ச்சித் துறைப் பேராசிரியர் **முனைவர் இரா.இந்து** அவர்களுக்கு என் நன்றியைப் புலப்படுத்தி மகிழ்கிறேன்.*

*ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் பெற்றோர் **கலியமூர்த்தி–மணிமேகலை** ஆகியோரை இந்த இனிய வேளையில் நன்றியுடன் வணங்கி மகிழ்கிறேன்.*

*இவ்வாய்வு சிறப்பாக வருவதற்கு என் பெற்றோரைப் போன்று ஆக்கமும் ஊக்கமும் அளித்து வழிநடத்திய என் சகோதரி **க.சுமதி** அவர்களுக்கு என் நன்றியைத் தெரித்துக் கொள்கிறேன்.*

*என் முன்னேற்றத்திற்குத் துணை நல்கிய **திரு அ.சங்கர்** அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் அன்புமிகு உடன்பிறப்புகள் **ஜெயக்குமார், கஸ்தூரி, ராஜப்பன், சுதா, திருமேனி, காயத்ரி, ராகவி, நிவேதா** ஆகியோருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் ஆய்வுக்கு முழு ஒத்துழைப்புக் கொடுத்த **முருகேஸ்வரி, நித்யா, சதீஷ், இந்துராணி, ஜெயராணி** உள்ளிட்ட அனைத்துத் தோழமை நெஞ்சங்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*– க. சுமித்ரா*

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத். | - அகத்திணையியல் |
| அகம். | - அகநானூறு |
| என்.சி.பி.எச். | - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் |
| ஐங். | - ஐங்குறுநூறு |
| உரை. | - உரையாசிரியர் |
| கலி. | - கலித்தொகை |
| கழகம் | - திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| களவு. | - களவியல் |
| கற்பு. | - கற்பியல் |
| குறள். | - திருக்குறள் |
| குறிஞ்சி. | - குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - குறுந்தொகை |
| சிலம்பு. | - சிலப்பதிகாரம் |
| சிறு. | - சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | - சீவக சிந்தாமணி |
| திருமுருகு. | - திருமுருகாற்றுப்படை |
| திருவிளை. | - திருவிளையாடற் புராணம் |
| திவாகரம். | - திவாகர நிகண்டு |
| தொல். | - தொல்காப்பியம் |
| நற். | - நற்றிணை |
| நாவா சாத். | - நாவான் சாத்திரம் அல்லது நாவாய் சாத்திரம் |
| ப. | - பக்கம் |
| பக். | - பக்கங்கள் |
| பட்டினப். | - பட்டினப்பாலை |
| பதி. | - பதிப்பாசிரியர் |
| பதிப். | - பதிப்பாசிரியர்கள் |

| | |
|---|---|
| பதிற்று. | - பதிற்றுப்பத்து |
| பரி. | - பரிபாடல் |
| பா. | - பாடல் |
| புறத். | - புறத்திணையியல் |
| புறம். | - புறநானூறு |
| பெருங். | - பெருங்கதை |
| பெரும். | - பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - பொருநராற்றுப்படை |
| பொருள். | - பொருளதிகாரம் |
| மணி. | - மணிமேகலை |
| மதுரை. | - மதுரைக்காஞ்சி |
| மரபு. | - மரபியல் |
| மூ.நூ. | - மூல நூலாசிரியர் |
| மொ.பெ. | - மொழிபெயர்ப்பாளர் |
| மலை. | - மலைபடுகடாம் |
| Ed. | - Editor |
| p. | - page |
| pp. | - pages |
| vol. | - volume |

# பொருளடக்கம்

# முன்னுரை

*சங்க இலக்கியத்தின் தலைமைச் சிறப்பு, குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் என்னும் ஐவகை நிலப்பகுப்புகளும் அவற்றை ஒட்டிய மக்கள் பிரிவுகளும், திணை, துறை சுட்டுகின்ற பழக்கவழக்கங்களும், மாந்தர் ஒழுகலாறுகளும் ஆகும். குறிஞ்சி நிலத்தில் வாழ்வைத் தொடங்கிய குன்றக்குரவர்-தமிழர், எவ்வகையில் படிப்படியாகச் சமுதாயத்தில் பல்வேறு திருப்புமுனைகளைத் தோற்றுவித்தனர் என்பதையும், சமுதாயத்தைக் கட்டமைத்துக் கடலையும் ஆற்றையும் கடந்து ஆளுமை புரிந்தனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பதிவு செய்துள்ளன. வேளாண்மை, வணிகம், போர்த் தொழில், கட்டடக்கலை, அணை, புணை, தெப்பம், ஓடம், நாவாய், கப்பல் கட்டுதல் போன்ற தளங்களில் தமிழர் மேம்பட்டுத் திகழ்ந்தமையையும் சங்க நூல்கள் அறுதியிடுகின்றன.*

*ஐவகை நில மக்களும் அவர்தம் தொழில்களும் ஒன்றுடன் ஒன்று மயங்கிக் கிடந்த பான்மையையும், வாணிபம் தழைத்து, ஊர்களில் ஊடுருவி ஊர் அங்காடிகள் உலக வாணிபத்தோடு இணைந்தமையையும் சங்கப் படைப்புகள் புலப்படுத்துகின்றன. அவ்வகையில் தத்தம் தொழில் கருதியும், வணிக நோக்கத்தை அடியொற்றியும் பழந்தமிழர்கள் போக்குவரத்தை மேற்கொண்டிருந்தனர். மூன்று பக்கமும் கடல் சூழ்ந்த தமிழகம், இயற்கையாகவே கடல் வாணிபத்தில் செழிப்படைந்திருந்தது. கிரேக்கம், ரோம், அரேபியா, சாவகம், கடாரம் முதலான நாடுகளுக்கான வாணிபத் தொடர்புக்குப் பல்வேறு வகை ஊர்திகள் பயன்பட்டுள்ளன. நேர்மையும், நாணயமும் மிக்க வாணிப முறையில் ஊர்திகளின் இன்றியமையாமையைக் கண்டறியச் சங்கப் பனுவல்கள் பெரிதும் வாய்ப்பளிக்கின்றன.*

*தமிழரசுகளிடம் வல்லமை மிகுந்த கப்பற்படை இருந்தது. கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் பண்டங்களை ஏற்றிக் கொண்டு கப்பல்கள் துறைமுகங்களில் தங்கின. பல்வேறு நாடுகளிலிருந்து முத்து, பவளம், மிளகு போன்றவற்றை வாங்க அயல்நாட்டவர் குவிந்தனர். பண்டமாற்றாகப் பொன், வெள்ளி, கலைப் பொருள்களை அவர்கள் தமிழருக்குத் தந்தமையைச் சங்க*

*நூல்கள் சுட்டுகின்றன. இதன் அடிப்படையில் நிலவழிப் பயன்பாட்டு ஊர்திகளும், நீர்வழியிலான ஊர்திகளும் தமிழர் வாழ்விற்கு அரண் செய்துள்ளன. சங்க இலக்கியச் சமுதாயம் போக்குவரத்திற்கு ஏற்றவாறு கட்டமைக்கப்பட்டிருந்தமையையும், பல்வேறு ஊர்திகள் போக்குவரத்திற்குத் துணைநின்றமையையும் தகுந்த தரவுகளுடன் ஆய்வுலகிற்கு அறிமுகப்படுத்தும் முயற்சியை இவ்வாய்வு முன்னிலைப் படுத்துகிறது.*

**ஆய்வுக் களம்**

*‘**சங்க இலக்கியத்தில் ஊர்திகள்**’ என்பது தலைப்பாகவும், ஆய்வுப் பரப்பாகவும் அமைகிறது.*

**ஆய்வு நோக்கம்**

*சங்கச் சமுதாயத்தில் திணை, சாமை விளைவித்துத் தேனெடுத்த குறிஞ்சியும், ஆனிரை மேய்த்துக் கலத்துப் பால், தயிர், வெண்ணெய் விற்ற முல்லையும், உழவின் மேன்மையை உணர்த்த வந்த மருதமும், வணிகச் சிறப்புக்கு வழிவகை செய்த நெய்தலும் விரவியிருந்தன. இத்திணைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட பாலையும் ஐவகைப் பகுப்புகளில் அடங்கியிருந்தது. ஐந்திணைகளிலும் தொழில்சார், சாரா நடைமுறைக்கு ஊர்திகள் அடிப்படை செய்தமையை அடையாளங்காட்டும் நோக்கத்தை இவ்வாய்வு பெற்றமைகிறது.*

**ஆய்வுக் கருதுகோள்**

*பலதிறப்பட்ட ஊர்திகள், சங்க மாந்தரின் வாழ்வியலைக் கருவாகக் கொண்டு உருவாக்கப்பட்டமையையும், அவற்றின் பயனால் தமிழர்கள் பெற்ற வசதி வாய்ப்புகளையும் உறுதிசெய்யும் கருதுகோளை இவ்வாய்வு மையப்படுத்துகிறது.*

**ஆய்வு முன்னோடி**

*செந்துறைமுத்து (சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள் - 1989), கா.அப்பாத்துரைப் பிள்ளை (சங்க இலக்கிய மாண்பு-1980), ந.சுப்பிரமணியன் (சங்க கால வாழ்வியல் - 1986), அ.இராகவன் (நம் நாட்டுக் கப்பற்கலை - 1968), வே.சா. அருள்ராஜ் (சங்க இலக்கியத்தில் கலங்கள் - 1994), தி.வ.பழனியப்ப பிள்ளை (கப்பல் சாத்திரம் - 1950), மயிலை சீனி.வேங்கடசாமி (பழங்காலத்*

*தமிழர் வாணிபம் - 1974), கா.சுப்பிரமணிய பிள்ளை (பழந்தமிழர் நாகரிகம் - 2009), அ.தட்சிணாமூர்த்தி (தமிழர் நாகரிகமும் பண்பாடும் - 1999) போன்ற நூல்களும், தமிழ் வளர்ச்சிக் கழகக் கலைக்களஞ்சியங்கள் (1958-1962), தமிழ்ப் பல்கலைக்கழகக் களஞ்சியங்கள் (1983-2009) போன்ற களஞ்சியத் தொகுப்புகளும் முன் ஆய்வுகளாகக் கருதத்தக்கன.*

**ஆய்வு எல்லை**

*பாட்டும் தொகையுமாகிய பதினெட்டுச் சங்க இலக்கியத் தொகுப்பும் உரையும் ஆய்வின் வரையறையாகக் கொள்ளப்படுகின்றன.*

**ஆய்வுச் சான்று**

*பதிப்பாசிரியர்கள் பலரைக் கொண்டு, சென்னை நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் நிறுவனத்தார் 2007 இல் மூன்றாம் அச்சாக வெளியிட்டுள்ள சங்க நூல்கள் அனைத்தும் மூலம் மற்றும் உரையுடன் ஆய்வின் முதன்மைச் சான்றாக அமைகின்றன.*

*சங்கப் படைப்புகளோடு தொடர்புடைய பிற நூல்கள், களஞ்சியங்கள், அகராதிகள், நிகண்டுகள், கருத்தரங்கக் கட்டுரைகள், இதழ்கள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாகத் திகழ்கின்றன.*

**ஆய்வு அணுகுமுறை**

*சங்க மாந்தரின் வாழ்வியலைச் சமுதாயப் பாங்கில் விவரிப்பதால் விளக்கமுறை ஆய்வும், நிலவழி-நீர்வழி ஊர்திகளின் வகைப்பாட்டைத் திரட்டித் தருவதால் தொகுப்புமுறை ஆய்வும், சங்ககாலப் போக்குவரத்தைப் பல படிநிலைகளில் மதிப்பிடுவதால் மதிப்பீட்டுமுறை ஆய்வும் பின்பற்றப்படுகின்றன.*

**ஆய்வுப் பயன்**

- *சங்கத் தமிழரின் பெருவாழ்வைச் சமுதாயப் பின்னணியில் ஆராய்ந்து அம்மக்களின் அரிய மாண்பைப் புலப்படுத்தல்.*
- *சங்க நூல் தொகுப்பின்வழி, பழந்தமிழர் பயன்படுத்திய பல்வேறு போக்குவரத்து ஊடகத்தைச் சான்றுகளுடன் பதிவு செய்தல்.*

- *சங்க மாந்தரின் நடைமுறையில் நிலவழி ஊர்திகளின் வினைநுட்பத்தை ஆய்வுலகம் அறியச்செய்தல்.*
- *சங்கப் படைப்புவழிப் புலனாகும் நீர்வழி ஊர்திகளின் செல்வாக்கைச் சான்றுடன் மதிப்பிடல்.*

**ஆய்வு அமைப்பு**

**'சங்க இலக்கியத்தில் ஊர்திகள்'** *என்னும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை, துணைநூற்பட்டியல், பின்னிணைப்புத் தவிர நான்கு இயல்களைப் பெற்றமைகிறது.*

1. *சங்க இலக்கியத்தில் சமூகக் கட்டமைப்பு*
2. *சங்க இலக்கியத்தில் போக்குவரத்துப் பதிவுகள்*
3. *சங்க இலக்கியத்தில் நிலவழி ஊர்திகள்*
4. *சங்க இலக்கியத்தில் நீர்வழி ஊர்திகள்*

**முன்னுரை**

*ஆய்வுப் பொருண்மை, நோக்கம், கருதுகோள், ஆய்வு முன்னோடி, எல்லை, முதன்மைச் சான்று, துணைமைச் சான்று, ஆய்வு அணுகுமுறை, பயன், ஆய்வு அமைப்புப் போன்றவை இப்பகுதியில் அமைகின்றன.*

**இயல் – 1 சங்க இலக்கியத்தில் சமூகக் கட்டமைப்பு**

*சங்க காலக் கலாச்சாரத்தின் வடிகாலாகச் சங்க நூல்கள் திகழ்ந்தமை, பழந் தமிழர்களின் உணவுப் பழக்கவழக்கங்கள், சங்கத் தமிழர் பயன்படுத்திய கருவிகள், உழவு மேலாண்மை, சங்க கால எல்லைகள், சங்கச் சமுதாயத்தில் இன வேற்றுமையின்றி ஒருமையுணர்வுடன் திகழ்ந்த தமிழரின் வாழ்வியல் பண்பாடு போன்றவை இவ்வியலில் விளக்கப்படுகின்றன.*

**இயல் – 2 சங்க இலக்கியத்தில் போக்குவரத்துப் பதிவுகள்**

*சங்க கால இயற்கை அமைப்பு, நில வகைப்பாடு, மக்கள் பிரிவினர், வேட்டைச் சமூக வாழ்க்கையைப் பழந்தமிழர் மேற்கொண்டிருந்தமை, தமிழர் குடியிருப்புகளில் காட்டப்பட்ட ஈடுபாடு, தொழில்முறையில் தமிழர்கள் அடைந்த செல்வாக்கு, ஐந்திணை மக்களின் பண்பாட்டுப் பதிவாகச் சங்கப் படைப்புகள் திகழ்கின்றமை, வாணிபப் போக்குவரத்தில் தமிழர்களின்*

முன்னறிவு தெளிவாகியுள்ளமை, பண்டமாற்றுமுறையில் தமிழரின் போக்குவரத்து மேம்பாடு அடைந்தமை, சங்க மக்கள் வாணிபப் போக்குவரத்தில் இடம்பெற்ற வாழ்வியல் மெய்ம்மைகள், தமிழரின் போக்குவரத்து நுட்பத்தை வரலாற்றாய்வாளர்கள் பதிவு செய்துள்ளமை, உள்நாட்டு வாணிபத்திலும் அயலக வாணிபத்திலும் பழந்தமிழர் துய்த்துள்ள போக்குவரத்து வசதிகள் போன்றவை இவ்வியலில் குறிக்கப் படுகின்றன.

**இயல் – 3 சங்க இலக்கியத்தில் நிலவழி ஊர்திகள்**

பழந்தமிழகத்தில் விளங்கிய நிலவழி அமைப்புப் பதிவுகள், நிலவழி ஊர்திகளின் தேவையும் பெருக்கமும், நிலவழி ஊர்திப் பயன்பாட்டில் தமிழரின் செயல்பாடுகள், நிலவழி ஊர்தி உருவாக்கத்தினால் எழுந்த விளைவுகள், சமூக மாற்றத்திற்கான காரணியாக நிலவழி ஊர்திகள் இடம்பெற்றமை, இன்றைய நிலவழி ஊர்திகளுக்குச் சங்க நூல்கள் அரண் அளித்தமை, அறிவியல் பின்னணியில் அமைந்த நிலவழி ஊர்திகள், இக்கால ஊர்திகளுடன் அக்கால ஊர்திகளை ஒப்பிடலில் கிடைத்த முடிவுகள் போன்றவை இவ்வியலில் வழங்கப் படுகின்றன.

**இயல் – 4 சங்க இலக்கியத்தில் நீர்வழி ஊர்திகள்**

தொல்காப்பியம் தரும் நீர்வழி ஊர்திகள் பற்றிய தரவுகள், சங்கப் பதிவுகளில் நீர்ப் போக்குவரத்திற்குப் பயன்பட்ட படகுகளின் பல்வேறு பெயர்கள், மிதவை முதல் கலம் வரை பல்வேறு வடிவங்களில் பயன்கருதி உருவாக்கப்பட்ட நீர்வழி ஊர்திகள், படகுப் போக்குவரத்தில் தமிழர்கள் கையாண்ட மரபுவழி உத்திகள், நெய்தல் நிலம் போக்குவரத்திற்குத் துணைநின்ற பாங்கு, கப்பல் கட்டுமானம் குறித்த பல்வேறு தொழில்நுட்ப நூல்கள் தமிழ் மொழியில் உருவானமை, பண்டமாற்று முறையில் தலைசிறந்து விளங்கிய தமிழர்களின் நேர்மையும் நாணயமும், கப்பற் பயணத்திற்கு ஏற்ற காலம், கப்பல் செலுத்தும் பொழுது, கலைநுட்பத்துடன் கப்பல்கள் வடிவமைக்கப்பட்டமை போன்றவை இவ்வியலில் இடம்பெறுகின்றன.

**முடிவுரை**

இவ்வாய்வின் வழியே பெறப்பட்ட மெய்ம்மைத் தரவுகள், நிரல்பட 'முடிவுரை' என்னும் பகுதியில் அமைகின்றன. எதிர்கால ஆய்வுப் பரப்புக் குறித்த சிந்தனையும் இறுதியில் இடம்பெறுகிறது.

**துணைநூற்பட்டியல்**

*ஆய்விற்குத் தோன்றாத் துணையாக விளங்கிய நூல்கள், அகராதிகள், நிகண்டுகள், களஞ்சியங்கள், இதழ்கள், கருத்தரங்கப் பங்கேற்பு உரைகள், ஆய்வேடுகள் முதலானவை அகரவரிசையில் இப்பகுதியில் அமைக்கப்படுகின்றன.*

**பின்னிணைப்பு**

*ஆய்விற்கு இன்றியமையாத-ஆய்விற்குள் பதிவுசெய்ய வாய்ப்பில்லாத தரவுகள் பின்னிணைப்பாகத் திகழ்கின்றன.*

# இயல் - 1

## சங்க இலக்கியத்தில் சமூகக் கட்டமைப்பு

*சங்க காலம் தமிழர் வாழ்வினை எடுத்துக்காட்டும் இலக்கியமாகும். அரசியல் பண்பாடு, கலை, வாணிபம், அயல்நாட்டுத் தொடர்பு முதலிய அனைத்துத் துறைகளிலும் தமிழர் புகழ்பெற்றுத் திகழ்ந்தமை சங்க இலக்கியத்தால் அறியப்படும். அக்காலம் அளித்த இலக்கியங்களே பாட்டும் தொகையுமாகும். பிற்காலப் புலவர்போல் பிறர் பனுவல்களைக் கற்றறிந்து அவைபோல் எழுதவேண்டும் என்னும் முனைப்புத் திட்டமிட்டு உருவாகவில்லை எனலாம். தாம் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் உந்துதலால் உருவாகிய உணர்ச்சிப் பாடல்களே சங்க நூல்களில் உள்ளவை. இலக்கியம் என்பது தன்னைத் தோற்றுவித்த சமுதாயத்தின் சுயசரிதை என்பர் ஹட்சன். இவர்கருத்துச் சங்க இலக்கியத்திற்குப் பெரிதும் பொருந்துவதைப் பெறமுடிகிறது.*[1]

**சமூகம் - சொல்லாய்வு**

*சமூகம் என்பது பற்றிப் பல கருத்துக்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. கூடிவாழும் ஒழுக்க நெறியே சமூகமாகும். சமூகம் என்பதற்கு அகராதி நூல் 'இலக்கியம்' அறிவியல், அரசியல் முதலான பயன்பாட்டு நோக்கத்தை வளர்ப்பதற்காக ஒன்றுகூடும் தனிநபர்களின் கூட்டமைப்பே எனக் குறிக்கிறது.*[2]

**சமூகம் - பொருளாய்வு**

*சமூகம் என்பதன் விளக்கம் மிகப் பழங்காலச் சமூகங்கள் அடைந்து வந்த பல்வேறு காலப் பரிணாம வளர்ச்சி பற்றியும் விளக்குவதே ஆகும். மனிதன் தோன்றிய காலம் முதல் சமூக வாழ்க்கையை மேற்கொண்டிருந்தான் என்று சமூகவியலறிஞர் வால்டேர் குறிப்பிடுவர்.*[3]

*மனிதன் தனக்கு வேண்டிய உணவினைத் தயாரித்துக் கொள்ளக் கற்களைப் பயன்படுத்தினான். வேட்டையாடும் சமூகத்தின் கடைக்கட்டமே மனித குலத்தின் குழந்தைப் பருவம் என்பர்.*[4] *வேட்டைச் சமூகமே உணவு*

*தேடுதலின் அடிப்படை இனக்குழு தோன்ற அடிப்படையானது. சமூகவியல் அறிஞர் எங்கெல்ஸ், "மனிதன் வெப்பமண்டலக் காடுகளில் உள்ள அடர்ந்த மரங்களுக்கு இடையில் வட்டாக வசித்து வந்தனர்"[5] என எடுத்துக் காட்டுவர். காடுகளில் கிடைக்கக்கூடிய பழங்கள், கொட்டைகள், இலை, கீரை, பூ, காய் முதலியவற்றைப் பழந்தமிழர் உணவாகக் கொண்டனர். கறிவேப்பிலை உணவாகப் பயன்பட்டமை பெரும்பாணாற்றுப்படை சுட்டுகின்றது.*

**உருப்புற பசுங்காய்ப் போழொடு கறிகலந்து**
**கஞ்சக நறுமுறி அளைஇ பைந்துணர்** (பெரும். **307-308**)

*குப்பைக் கீரையைப் பறித்து உப்பில்லாமல் உண்டமையைச் சிறுபாணாற்றுப்படை சுட்டுகின்றது.*

**குப்பை வேலை உப்புஇலி வெந்ததை**
**மடவோர் காட்சி நாணி கடை அடைத்து**
**இரும்பேர் ஒக்கலொடு ஒருங்கு உடன் மிசையும்**
**அழிபசி வருத்தம் வீட மொழிகவுள்** (சிறு. **137-140**)

*மன்னருக்குரிய அடையாளங்களாகப் பூக்களும் இருந்துள்ளன என்பது இயற்கை நெறிப்பட்டு வாழ்ந்த சமூகத்தின் அடையாளமே ஆகும். மலைபடுகடாமில் மரம், செடி, கொடி என பலவகைத் தாவர வகைகளையும் சேர்த்தே கூறுவதைக் காணமுடியும். ஐவன நெல், வெண்ணெய், கரும்பு, இஞ்சி, வாழை, பெருமூங்கில் நெல், நாவற்கனி, தேமாங்கனி ஆகியவற்றை உணவாகப் பயன்படுத்தினர். மேலும் நீண்ட தொலைவு மணங்கமழும் நறுஞ்சுவையுடைய பழங்களையும் உண்டனர் என்று இவ்விலக்கியம் குறிப்பிடுகின்றது.*

**பால்வார்பு கெழீஇ பல்கவர் வளி போழ்பு**
**வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்**
**வேல் ஈண்டு தொழுதி இரிவுற்றென்ன**
**கால் உறு துவைப்பின் கவிழ்க் கனைத்து இறைஞ்சி**

குறை அறை வாரா நிவப்பின் அறை உற்று
ஆலைக்கு அலமரும் தீம் கழைக் கரும்பே
புயற் புனிறு போகிய பூ மலி புறவின்
அவற் பதம் கொண்டன அம்பொதித் தோரை
தொய்யாது வித்திய துளர்படு துடவை
ஐயவி அமன்ற வெண் காற் செறுவில்
மை என விரிந்தன நீள் நறு நெய்தல்
செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றிக்
காயம் கொண்டன இஞ்சி மா இருந்து
வயவுப் பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை
காழ்மண்டு எஃகம் களிற்றுமுகம் பாய்ந்தென
ஊழ்மலர் ஒழிமுகை உயர்முகம் தோய
துறுகல் சுற்றிய சோலை வாழை
இருகு குலை முறுகப் பழுத்த பயம் புக்கு
ஊழ் உற்று அலமரும் உந்தூழ் அகல்அறை
காலம் அன்றியும் மரம் பயன் கொடுத்தலின்
காலின் உதிர்ந்தன கருனி நாவல்
மாறு கொள ஒழுகின ஊறு நீர் உயவை
நூறொடு குழீஇயின கூவை சேறு சிறந்து
உண்ணுநர்த் தடுத்தன தேமா புண் அரிந்து
அரலை உக்கன நெடுந்தாள் ஆசினி
விரல் ஊன்று படுகண் ஆகுளி கடுப்ப,
குடிஞை இரட்டும் நெடு மலை அடுக்கத்துக்
கீழும் மேலும் கார் வாய்த்து எதிரி
சுரம்செல் கோடியர் முழவின் தூங்கி
முரஞ்சு கொண்டு இறைஞ்சின அலங்கு சினைப் பலவே

(மலை. 114-144)

இவ்வாறு வேட்டைச் சமூகத்தின் உணவுச் சேகரிப்பு நிலையை உணரலாம். கிழங்கும் உணவாகப் பயன்பட்டமையினைப் பின்வரும் சங்க இலக்கியக் குறிப்புச் சுட்டுகின்றது.

**தடியும் கிழங்கும் தண்டினர் தழீஇ** **(மலை. 425)**

பனங்கிழங்கைப் பண்டைத் தமிழர் சுட்டுத் தின்றதை,

**சுடுகிழங்கு நுகர** **(புறம். 225)**

எனத் தொகைநூல் எடுத்துரைக்கின்றது. எனவே வேட்டைச் சமூகத்தின் தொடக்க நிலையில் செடி, கொடி, தாவரங்கள் உணவாக இருந்திருப்பினும் இந்நிலை பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் நீடித்திருக்கக்கூடும் எனக் கொள்ளலாம்.

**வேட்டைச் சமூகம்**

வேட்டையாடும் சமூகத்தின் இடைக்கட்டத்தில் மனிதன் மீன்களை உணவாகப் பயன்படுத்தினான். தொடக்கநிலையில் காய், கனி, கிழங்கு என்பன எப்பருவத்திலும் கிடைக்கமாட்டாது என உணர்ந்து இந்நிலைக்கு மாற்றம் அடைந்தான். முதன்முதலில் கரடுமுரடான பட்டை தீட்டப்படாத கற்கருவிகள் பயன்படுத்திய காலம் இதுவெனக் கொள்வர். குண்டாந்தடி, ஈட்டி ஆகிய ஆயுதங்கள் உருவாக்கப்பட்ட பிறகு கிடைத்த இறைச்சியை அனைவரும் பகிர்ந்து உண்டனர். வேட்டை உணவைப் பாதுகாத்து வைக்க தனித்தனியே பகிர்ந்து கொண்டனர். நெருப்புக் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு முதியவர்கள் நெருப்புக் காப்பாளராக இருந்துள்ளனர்.[6]

வேட்டைச் சமூகத்தின் உச்சநிலையில் வில், அம்பு கண்டுபிடிக்கப்பட்ட பிறகு காட்டு விலங்கின் இறைச்சி வாடிக்கையான உணவாகக் கருதப்பட்டது. பட்டை தீட்டப்படாத கற்கருவிகளைவிட அம்பு கொடிய விலங்குகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளவும் பயனாக அமைந்தது. வில்லும் அம்பும் பழந்தமிழருக்கு ஆயுதமாக அமைந்தமையைப் பின்வரும் சங்க இலக்கியம் காட்டும்.

**வில் அலைத்து உண்ணும் வல்லாண் வாழ்க்கை** **(அகம். 31:13)**

*பண்டைக்கால ஆடவர் கொடிய விலங்குகளைத் தம் வில்லினால் வீழ்த்தும் வல்லமை பெற்றவர்கள் என்பதை இப்பாடலால் அறியலாம். குன்றவன் ஒருவன் தன் தினைக் கதிர்களை ஆண் பன்றியும், பெண் பன்றியும் மேய்வதைக் கண்டு மறைந்திருந்து வில்லினால் கொன்று கொணர, அதனை மனையோள் தம் குடிமுறைக்கேற்பப் பகுத்தளித்து மகிழ்ந்தாள் என்பதைக் கீழ்வரும் நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.*

**பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு**
**கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்**
**கல்அதர் அரும்புழை அல்கி கானவன்**
**வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றைப்**
**புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி**
**குடிமுறைப் பகுக்கும் நெடு மலை நாட (நற். 336)**

*இவ்வாறாக வேட்டையாடும் சமூகம் தேடி அலைந்து பெற்ற உணவினைத் தானும் உண்டு எஞ்சியதைத் தன் குடியினருக்கும் பகுத்தளித்து மகிழும் நிலை அன்றைய மனிதனின் தனிச் சிறப்பாகும். கூட்டாக உணவைச் சேகரித்து வேட்டையாடும் நிலையிலிருந்து உணவு விளைவிக்கும் சமுதாயமாக மாறியபோது காடுகளை அழித்தல், காட்டில் வாழும் ஆநிரைகளை வீட்டிற்குக் கொண்டுவந்து பழக்குதல், கிடைத்த தானியங்களை விளைவித்து அவற்றை உணவாக்கிக் கொள்ளுதல் போன்ற சமூகமாக மாறியது. "காட்டில் வாழ்ந்த விலங்குகளை வீட்டில் காவலுக்குப் பயன்படுத்திய விலங்குகளுள் நாய் முதன்மை வகிக்கிறது" என்று கூறுவர்.[7] அதன் பின்னர் கால்நடைகளைப் பழக்கிக் கூட்டங்கூட்டமாக வளர்த்து வேளாண்மைக்குப் பயன்படுத்தினான் என்பர்.[8] கால்நடைக்காகப் பயிரிட்டு வந்த பயிர் பச்சைகளைத் தாமும் உண்ணமுடியும் என அறிந்து உணவு உற்பத்தியில் ஈடுபட்டுள்ளனர். மரத்தால் ஆன கொழு நீக்கப்பட்டு இரும்பால் ஆன கொழு பயன்பட்டது. மாடு உற்பத்தி ஒருவனின் செல்வத்தின் அளவைக் காட்டியது. வேளாண்மை செய்முறையைப் பல வகைகளில் தமிழர்கள் கையாண்டுள்ளனர். உழுவதற்கு 'ஏர்' எனும் ஒருவகைக் கலப்பை பயன்படுத்தப்பட்டமையைக் கீழ்க்காணும் சங்கப் பாடல் வரிகள் உறுதி செய்கின்றன.*

**.. . . . . . . செஞ்சா லுழவர்**

**நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்**

**பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்**

**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி (பெரும். 196-199)**

*ஏனல் உள்ள நிலத்தில் ஆழப்பதிந்து நிலத்து மண்ணை மேல் சீராக மாற்றுவதற்குப் பயன்படும் ஒரு கருவி இப்பாடலில் பயின்றுவருகிறது. 'பிடிவாயன்ன மடிவாய் நாஞ்சில்' எனும் அடி, கொழு ஒன்று இருபுறமும் மடிந்திருந்தமையையும் அது மண்ணை எளிதில் மென்மையாக்கியதையும் ஆழ உழுவதற்குப் பயன்பட்டதையும் விளக்குகின்றது.*

**தொழில்**

*பண்டைக் காலத்தில் ஏர் மட்டுமன்றி மண்வெட்டி போன்ற கருவிகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தானியங்களை விளைவித்து உண்ணும் சமூகத்தில் வேளாண்மை ஓர் உயரிய கூட்டுத் தொழிலாக இருந்தமையால் தனித்தன்மை வாய்ந்த கைவினைஞர்களை உருவாக்கிற்று. உணவு உற்பத்தி பெருக வழிமுறை செய்தது. இதனால் குயவர், கல்தச்சர், தச்சர் போன்றவர்கள் உருவாயினர். இனக்குழுக்களில் பொருள் உற்பத்தி அதிகரித்த நிலையில் அப்பொருள்களைச் சேமித்து வைக்கும் சமூகமாக மாறியது.*

*இயற்கையில் கொட்டிக்கிடந்த உணவுப் பொருள்களை உண்டு நிலையற்ற வாழ்க்கை வாழ்ந்த மனிதன் சேமிக்கும் சமூகமாக மாறிய நிலையில் நாகரிகத்தையும் மாற்றிக் கொண்டனர். நாகரிக வளர்ச்சி அன்றைய பொருளாதாரக் கூட்டுமுயற்சியாய் அமைந்தது. மரத்தால் ஆன பானைக் காலம் மாறிக் களிமண்ணால் ஆன மண்பானைக்காலம் நாகரிகத்திற்கு வழிகோலியது. இதனால் உணவுப் பண்டங்களையும் தண்ணிரையும் சேமித்து வைக்க மண்பானைகள் பயன்பட்டன. மண்பானைகளைப் பயன்படுத்தும் காலத்தை மண்பானைக் காலம்* (Pottery age) *என்று குறிப்பிடுவர்.*[9]

முந்தைய இரண்டு சமூகங்களைவிட இச்சமூகத்தில் தொழில் திறமையிலும், வேளாண்மை உற்பத்தியிலும் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டன. இதன் விளைவாகப் பல கைவினைஞர்கள் வாழ்வை நிகழ்த்தினர். உற்பத்தித் தேவையினால் உழைப்பாளர்கள் எண்ணிக்கை உயர்ந்து அரசு என்கின்ற நிறுவனம் உருவாயிற்று. பல புதிய திருப்பங்கள் தோன்ற இம்முயற்சி அடிகோலிற்று. தேவைக்கு மேல் வணிகரைத் தோற்றுவித்தது. இவ்வாறான சமூகத்தில் குடும்பம், சமயம் முதலான நிறுவனங்கள் தோன்றுவது இயற்கையானது. இந்நிறுவனங்கள் தனிமனித நிலைக்காகவும், தனிமனித நிலைப்பாடுகள் சமூக வளர்ச்சிக்காகவும் உள்ள வலைப்பின்னல் போல மாறின.

**சமூக உருவாக்கக் களன்கள்**

சமூகம் தோன்றலும், வளர்தலும், அழிதலும் வரலாற்றில் நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. எந்த உயிரும் பிற உயிர்களின் துணையின்றி வாழ்தல் இயலாது. அவ்வாறு மனிதன் பிறப்பிலிருந்தே பிற உயிர்களைச் சார்ந்து வாழ்ந்த பண்பைக் கடைப்பிடித்துள்ளான். பிறரோடு உரையாடியும், பழகியும், கண்டும், கேட்டும், உறவாடியும், வேறுபாடு கொண்டும் வாழ்வதற்குச் சமூகப் பழக்கம் தேவைப்படுகிறது. இத்தகைய பண்பைப் பிறப்பின் வழியே அறியமுடியாது. அவன் பிறரைச் சார்ந்து வாழ்வதனால் பண்புகளைப் பெறுகின்றான். தனியே வாழ்வதனால் வரும் துன்பத்தையும் உணர்ந்து கொள்கிறான். மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் உணவு முதன்மைப் பங்காற்றுகிறது. அன்றைய நாளில் பசியினால் துன்பப்பட்டுள்ள மனிதன் உணவைத் தேடி அலைந்தும் திரிந்தும் வாழ்ந்தான். சமூகம் என்பதன் அடிப்படைப் பதிவாக உயிர் வாழ்வதற்காகப் போராடும் மக்களின் தனித்தன்மையான ஒரு குழு என்பர். தமக்குத் தாமே அமைத்துக்கொண்ட அக்குழுவின் நிலைப்பாட்டையே ஒவ்வொரு தனிமனிதனும் பெற்றுள்ளான். இக்குழுவமைப்பில் தோன்றியது முதல் முதுமை வரைக்கும் மற்றவரைச் சார்ந்தும் கூட்டுறவோடும் வாழ வேண்டியவனாகவே மனிதன் உள்ளான்.

சமூகம் என்பது தனிமனித வாழ்க்கையை மிகக் கடந்து நிலவும் ஒன்றாகும். ஒரு சமூகம் என்பது செயல்பாடு மிக்க ஒரு குழுவமைப்பாகும். தனிமனிதர் பலர் சேர்ந்து சமூகம் உருவாக்கப்பட்டிருப்பினும் சமூகம் என்ற நிலையிலேயே அது தொழிற்படுகிறது. சமூக அமைப்பில் தனிமனிதனின் நலன்கள் சமூக நலன்களுக்குக் கீழாகவே அமைகின்றன.

**சமூகம் – திறனாய்வு**

கூடிவாழும் மக்கள் கூட்டமே சமூகம் என்னும் வரையறைக் கொள்கையை அனைத்துச் சமூகவியல் அறிஞர்களும் ஏற்றுக்கொண்ட போதும் சமூகம் என்பதற்குப் பல கோட்பாடுகளை வகுத்து வைத்துள்ளனர். கிறித்துப் பிறப்பதற்கு முன்பே சமூகம் பற்றித் தாம் சிந்தித்த கோட்பாடுகளைச் சமூகவியலார் இவ்வுலகிற்கு அளித்துச் சென்றுள்ளனர். மோரிசு சின்சு பெர்கு என்னும் சமூகவியலார், சமூகம் என்பது மனித உறவுகள் பின்னிப் பிணைந்து அமைந்திருப்பதே ஆகும் என்கிறார்.[10] மெக் ஈவர் மற்றும் பேஜ் ஆகியோர் சமூகத்தைச் சமூக உறவுகள் பின்னிப் பிணைந்துள்ள வலைப்பின்னல் என்கின்றனர். தனிச்சிறப்புற்ற ஒரு சமூகம் எவ்வாறு இயங்க வேண்டும் என்பதைக் கிரேக்க அறிஞர் பிளேட்டோ, சமூகம் என்பது விரிவுபட்ட மனம்; அம்மனத்தில் வாழ்வதற்கு ஏற்ற தேவைகள் பல தோன்றுகின்றன. ஆகையால் மனிதர்கள் தேவையின் அடிப்படையில் தங்களுக்குள் ஓர் சமூக அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு கூடி வாழ்கின்றனர்[11] என்பர். தனிமனித நிலைக்குச் சட்டமும் நீதியும் தேவை என்பதை இவர் வலியுறுத்தியுள்ளார். மனிதன் தன்னுடைய பற்றுகளைத் தனித்திருந்து தன்னிச்சையாக அடையமுடியாது. பிறருடைய ஒத்துழைப்பு இருந்தால் மட்டுமே அடையமுடியும். எனவே இவற்றைப் பெற மனிதன் பிறரோடு சேர்ந்து சமூகத்தை அமைத்துக் கொள்கிறான் எனலாம்.

ஆதிமனிதன் விலங்குகளைப் போல் சமூகம், அரசியல், சட்டம் எதுவும் இல்லாமல் இயற்கையில் தனி வாழ்க்கையை மேற்கொண்டிருந்தான் எனவும், அவனை எந்தச் சக்தியும் இணைந்து வாழத் தூண்டவில்லை எனவும் கூறுவர். மனித இயல்புகள் சமூகத் தொடர்பினால் ஏற்பட்டவையல்ல. மனிதன் தன் உரிமைகளைக் காத்துக் கொள்வதற்கு கூடி

வாழ்ந்ததன் விளைவு சமூகம் உருவாயிற்று என்று கொள்வர். இயற்கையின் நிலையில் வாழ்ந்த மனிதன் தேவையை உணர்ந்து ஒவ்வொருவரும் இணங்கி வாழக் கற்றுக்கொண்டான் எனவும் கருத்துரைப்பர்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வால்டேர் என்பவர் சமூகம் பற்றி ஆய்வு நடத்தினார். இவர் மனிதன் எக்காலத்திலும் கூட்டு வாழ்க்கையை மேற்கொண்டிருந்தான் என்பர். அரிசுடாட்டிலைப் போலவே இவரும் மனிதன் கூட்டமாக வாழும் இயல்புடையவன் என்றும், அவன் தன்னிடத்திலும், தன் குழந்தைகளிடத்தும் தன்னோடு உழைப்பவர்களிடத்திலும் அன்பு வைத்திருக்கிறான். இவ்வித அன்பு சமூகத்தின் அடிப்படைத் தேவை என்றும் எடுத்துக் காட்டுவர்.[12]

பத்தாம் நூற்றாண்டின் பின்பகுதியில் வாழ்ந்த காரல் மார்க்சு, எங்கெல்சு போன்றோர் 'ஒருங்கிணைந்த சுய கட்டுப்பாட்டு அமைப்பு' என்ற முறையில் சமுதாயம் பற்றிய அறிவியலை உருவாக்கினர். அவர்கள் உருவாக்கிய சமூக அறிவியலே வரலாற்றின் பொருள்முதல்வாதமாகும். காரல் மார்க்சு சமூகமே பொருளாதார அடிப்படையில் அமைந்தவை போலச் சுட்டுவர். ஒரு மனிதனுடைய பொருளாதார நிலையே அவனுடைய நம்பிக்கைகளுக்கும் அடிப்படைக் காரணம் ஆகும்.[13] இவர் கூற்றைப் போலவே எங்கெல்சு, 'டூரிங்கிற்கு மறுப்பு' என்னும் நூலில் "செயலூக்கமிக்க சமூகச் சக்திகள் இயற்கைச் சக்திகளைப் போலவே வேலை செய்கின்றன. நாம் அவற்றைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் அவை கண்மூடித்தனமாகவும், நாசகரமாகவும் செயல்பட்டுவிடும். நாம் அவற்றின் செயல்களைப் புரிந்து அவற்றின் திசைகளையும் பயன்களையும் கிரகித்துக் கொள்வது நம்முடைய இலட்சியத்தைப் பொறுத்தே உள்ளது[14] என்பர். சமூகத்தின் நற்பயனை அடைய வேண்டுமெனில் சமூகச் சக்திகள் அனைத்தும் நன்கு புரிந்து செயல்பட்டால்தான் முடியும். இல்லையெனில் சமூகம் நற்பயனை அடைய வாய்ப்பற்று போய்விடும் என்பதை இக்கூற்று வெளிப்படுத்துகிறது.

சம்னர் என்னும் அமெரிக்கச் சமூகவியல் அறிஞர், ஒரு சமூகத்தின் பழக்க வழக்கங்கள், ஒழுக்கங்கள் ஆகியவை முறையாக அமைந்து தனிமனிதனுடைய செயல்களை உருவாக்குகின்றன என்றும், அவற்றிலிருந்து சமூக நிறுவனங்கள் தோன்றுகின்றன என்றும் கூறுவர்.[15] பிறர் தன்னிடத்தில் எதிர்பார்க்கும் நடத்தை தன் உள்ளத்தில்தான் இருக்கிறது என்ற உணர்வு இருந்தால் ஒழுக்கமும் நடத்தையும் மனச்சான்றும் ஒருவனிடம் தோன்றிவிடும் என்று கூறுவர்.

**வானுயர் தோற்ற மெவன் செய்யும் தன்னெஞ்சம்**
**தானறி குற்றப் படின் (குறள். 272)**

**மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற (குறள். 34)**

தனிநபரின் ஒழுக்கமும் பிறரிடம் நடந்துகொள்ளும் விதமுமே மதிப்பைத் தேடிவரும் கருவி என உணரமுடிகிறது. ஜி.எச்.கூலி என்பவர் சமூகம் செய்தித் தொடர்பினால் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டுள்ளது என்றும் முதல் நிலைக் குழுவின் வழியே மனிதனுடைய அறிவு உருவாக்கப்படுகிறது என்றும் கூறுகிறார்.[16] சமூகம் கட்டுக்கோப்பாக நிலைத்து நிற்கக்கூடியது. தனிமனித நிலைக்காகவே செயல்படக்கூடியது என்ற வகையில் சமூகம் பற்றிப் பல அறிஞர்களின் கூற்றுகள் சான்றளிக்கின்றன. இவ்வாறாகச் சமூகம் மனிதனின் தேவைக்காகவும், பாதுகாப்பிற்காகவும், இன்பத்திற்காகவும், நலத்திற்காகவும், வசதிக்காகவும், வாழ்க்கைக்காகவும், பிற தேவைகளுக்காகவே அமைந்துள்ளது. மற்றவர்களுடன் கூடி வாழும் போதுதான் அவர்களிடைய சமூக உறவு தோன்றுகிறது என்பது புலனாகிறது.

**சமூக அமைப்புகள்**

மனிதத் தேவைகளை நிறைவுசெய்வதற்குத் தேவைப்படுகின்ற பலதரப்பட்ட செயல்களை நிறைவேற்றவும் நிர்வகிக்கவும் மனித சமூகம் ஒழுங்குபடுத்துகின்ற பல குழுக்களே சமூக அமைப்பு (Social structures) என்பர். சமூக அமைப்பு என்ற சொல் சமூகவியலில் பன்முறை பயன்படுத்தப்பட்டாலும் இதற்கென்று பொதுவான ஏற்றுக்கொள்ளப்-

பட்ட பொருள் ஏதும் இல்லை. இது சமூகவியலில் ஓர் அடிப்படைப் பொருளை உணர்த்துகின்றது. சமூக அமைப்பு என்பது குறித்து ஆங்கில அகராதி நூல், “சமூகங்கள் அவைகளுக்கு இடையில் உள்ள எண்ணில் அடங்காச் சமூகக் குழுக்கள், அவைகளது சமூகச் சுதந்திர அமைப்புப் போன்றவை பல ஆண்டுகளாக உள்ளன. பல்கலைக்கழகத்தில் முதலாமாண்டு, இரண்டாமாண்டு மாணவர்களிடையே உட்பிரிவு இருப்பது போல இவை நிலையானவை அல்ல. குறிப்பிட்ட தனிநபர்களின் சுயவிருப்பத்திற்கேற்பவும் வழிமுறைக்கேற்பவும் உருவாக்கப்படும் அமைப்பு” எனக் குறிக்கின்றது.[17] சமூக நிலையமைப்பு என்றும் சமூகக் கட்டமைப்பு என்றும் சமூக அமைப்புகள் வகைப்படுத்தப்படும். சமூகக் கட்டமைப்பில் குழுக்கள், நிறுவனங்கள், சங்கங்கள் நிலையமைப்புகள் போன்றவை இடம்பெற்றிருக்கும்.

சமூகக் கட்டமைப்பில் அடிப்படையானவை சமூகக் குழுக்களாகும். இவை பொதுவான நோக்கங்களை முழுமையடையச் செய்வதற்காகத் தன்னுணர்வு உள்ள தனிநபர்களின் அமைப்பு எனக் கூறுவர்.[18] குழுவின் தலைமைப் பொறுப்பை ஏற்று ஏழுத் தலைவராகவும் தனிநபரே இருப்பர். ஒவ்வொரு தனி நபரும் தங்களுடைய தகுதிநிலை மதிப்பீட்டின்வழி தலைமை வாய்ந்தவராகக் கருதப்படுவர். பண்டைக்கால இனக்குழுச் சமுதாயத்தில் தலைவனே அனைத்துப் பொறுப்பையும் ஏற்று நடத்தியுள்ளான் என்பதற்குச் சங்க இலக்கியப் பாடலை விளக்கிக் காட்டுவர்.

“இனக்குழுத் தலைவன் நள்ளி வேட்டையாடச் சென்றான். காட்டில் கலைஞர் உணவின்றி வருந்தியதைக் கண்டான். வேட்டையாடிய விலங்கைத் தானே சமைத்து அவர்களுக்குப் பரிமாறி மகிழ்ந்தான்.”[19] இனக்குழு மக்களிடம் நிலவிய இயல்பான பெருந்தன்மையின் வெளிப்பாடாக நள்ளியின் செயல் அமைந்தது. ஆகவே குழுத்தலைவனே அனைத்துப் பொறுப்புகளையும் ஏற்று நடப்பவனாகிறான். குழுவில் தனிநபர் உறுப்பினராவதின்வழி ஒவ்வொரு தனிநபரும் தன்னுடைய அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இருப்பிடம் போன்றவற்றை நிறைவுசெய்து

கொள்ள முடிகிறது. நிறுவனம் என்னும் அமைப்பு, சமூகத் தேவைகளை நிறைவேற்றுவதைத் தங்களுடைய முதன்மை நோக்கமாகக் கொண்டு செயல்படுகிறது. சங்கம் என்னும் சமூக அமைப்பு ஒழுங்குபடுத்தப்பட்ட பெரிய அல்லது சிறிய குழுவைக் குறிக்கும்.[20]

சமூக கட்டமைப்பின் ஒரு கூறாக விளங்கும் சமூக நிலையமைப்பில் குறிக்கோள், பங்கு, பதவி, தகுதிநிலை - நெறிகளும் வழக்குகளும் அதிகாரங்கள் போன்றன தனித்தனிச் செயல்பாடுகளைக் கொண்டன என்பது சமூகவியலாய்வாளரின் கூற்று. இவ்வாறாகத் தனிநபர்களின் விருப்பத்திற்கேற்பவும் வழிமுறைக்கேற்பவும் சமூக அமைப்புகள் செயல்பட்டு வருகின்றன எனவும், குழுக்கள் நிறுவனம் போன்ற அமைப்புகளைத் தன்னுள்ளே கொண்ட ஓர் ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்புகளாகவும் அவை விளங்குகின்றன எனவும் உணரலாம்.

**வரையறைகள்**

சமூகம் சரியான ஒழுங்குடனும் அதற்கென்று விதிக்கப்பட்ட விதிமுறைகளுடனும் இயங்கச் சமூகத்தால் ஒப்புதல் அளிக்கப்பட்டவையே வரையறைகள் ஆகும். சமூகவியலார் இதனைச் சமூக ஒழுங்கு எனக் கூறுவர். எர்பர்ட் இசுபென்சர், "சமூகத்தில் அதன் ஆக்கக் கூறுகளிடையே ஒரு நிலையான இணக்கம் நிலவிடும் வண்ணம் அமையும் நிலைமையே சமூக ஒழுங்கு"[21] என்பர். வகுக்கப்பட்ட வரையறைகளிலிருந்து நிலை மாறும்போதுதான் ஒழுங்குக் கட்டுப்பாடு விதிக்கப்படுகிறது.

மனித சமுதாயங்களிடையே இணக்கமான உறவை ஏற்படுத்தும் காரணகிளாகக் குடும்பம், உறவுமுறை, சாதி, மதம், கல்வி நிறுவனங்கள், சட்டம், அரசு முதலியன விளங்குகின்றன. இவற்றில் குடும்பமே அனைத்தையும் ஏற்று நடத்தும் நிறுவனமாக விளங்குகின்றது. "திருமணத்தின் மூலம் பிணைக்கப்பட்டு ஒரு குடியிருப்பில் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள் போன்ற உறவுமுறைகளின் பொதுப் பண்பைப் படைத்தும், பாதுகாத்தும் வளர்ச்சியுறுவதே குடும்பமாகும் என அகராதி நூல் ஒன்று சுட்டும்.[22] குடும்பம் தன் உறுப்பினர்களை

*வரையறைக்கு உட்படுத்தி ஒழுங்குக் கட்டுப்பாட்டைச் சொல்லிக் கொடுக்கும் நிறுவனமாக விளங்குகின்றது. பண்டைய சமூகத்தில் பெண்களுக்கு விதிக்கப்பட்டு வந்த வரையறை எல்லை கருதப்படுகிறது.*

*எங்கெல்சு பண்டைய கிரேக்க குலம் பற்றிக் குறிப்பிடுகையில் பெண்கள் குலத்துக்கு வெளியேமணம் செய்து கொள்ளவேண்டுமெனின் இருக்கின்ற நபரின் ஒப்புதல் மட்டுமன்றி குலத்தின் எல்லா உறுப்பினர்களின் ஒப்புதலையும் பெற வேண்டுமென்ற குடும்ப வரையறையை அந்நாளில் கொண்டிருந்தனர் என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.*[23] *திருமணம் என்ற நிகழ்ச்சியே நாகரிக குடும்பத்தின் தொடக்கமாக அமைகின்றது. குழுமணம், இணைமணம், நாகரிகமற்ற நிலைகளிலிருந்து சமூகம் வரையறுக்கப்பட்டுப் பாலுணர்வுக்கும் உறவுக்கும் வழிவகுக்கும் வகையில் ஒருவன்-ஒருத்தி வாழ்க்கை முறை தோன்றியிருக்கும் என கருதப்படுகின்றது. ஒரு தலைவன் தன் தலைவியோடு இவ்வாறு இருத்தல் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.*

**உவர் நீங்கு கற்பின் எம் உயிர் உடம் படுவி**
**முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇ**
**பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்**
**உறுவளி ஆற்றச் சிறுவரை திற என,**
**ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்**
**உறைகழி வாளின் உருவுபெயர்ந்து இமைப்ப**
**மறைதிறன் அறியாள் ஆகி, ஒய்யென**
**நாணினள் இறைஞ்சி யோளே-பேணி,**
**பரூஉப்பகை ஆம்பற் குரூஉத்தொடை நீவி**
**கரும்புஇமிர் ஆய்மலர் வேய்ந்த**
**இரும்பல் கூந்தல் இருள்மறை ஒளித்தே (அகம். 136:20-29)**

*மனைவியன்றி வேறு ஒருத்தியைத் தலைவன் மணத்தலும், பரத்தையரோடு உறவு கொள்ளுதலும் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன. எனவே*

குடும்பம் என்னும் வரையறை சங்க இலக்கியத்தில் விலகி நின்று, தனிமனித ஒழுக்கம் சார்ந்து அமைவதும் புலனாகிறது.

**கோட்பாடுகள்**

சமூக உறுப்பினர்களை நெறிப்படுத்தி அதன் வாயிலாகச் சமூகத்தில் ஒருமித்த நடத்தையை உருவாக்கும் ஆற்றலைக் கோட்பாடுகள் கொண்டுள்ளன. ஒவ்வொருவரும் தத்தம் விருப்பத்திற்கேற்ப நடந்து கொள்ள உரிமையும் இருந்தால் குழப்பமான நிலை ஏற்படும். தனிமனிதனுடைய வாழ்வுக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு இராது. எங்கும் சீர்குலைவும், கட்டுப்பாடற்ற நிலையும்நிலவும். ஆனால் முன்னோர் வகுத்த கோட்பாடுகளின்படி தனிமனிதனிடம் நெறிப்படுத்தும்போது ஓர் ஒழுங்கு நிலவும். அகஸ்ட்டு கோம்டே, சி.எச். எட்வர்டு, எ.இராசு போன்ற அறிஞர்கள் சமூக ஒழுங்கை வலியுறுத்தி அவற்றை சமூகக்கட்டுப்பாட்டுக் கோணத்தில் நோக்கியுள்ளமையைக் களஞ்சிய நூல் ஒன்று சுட்டுகின்றது.[24] இவ்வாறு சமூகக் கட்டுப்பாடு தனிமனிதனின் நடத்தையின்மீது விதிக்கப்பட்டு அவர்கள் வாழ்க்கை செம்மையுற நெறிப்படுத்துகிறது எனலாம்.

சங்க காலத்தில் குடும்ப அமைப்புகளிலும், சாதியமைப்புகளிலும் கோட்பாடுகள் எழுந்தன என்பதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன. பண்டைத் தமிழர் குடும்ப வாழ்வு பற்றி உயர்ந்த கொள்கைகளைக் கொண்டிருந்தனர். அறம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியன்று. வாழ்க்கை முழுவதுமே அறமாகக் கொள்ளப்பட்டது. இதன் அடிப்படையில் அது இல்லறம் எனப்பட்டது. திருவள்ளுவர்,

**அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று** (குறள். 49)

எனக் கூறுவது எண்ணத்தகும். துறவத்தை எவரும் விரும்பவில்லை. மாறாக இல்லறத்தைச் செம்மையுற ஆற்றினர். தொல்காப்பியர்,

**காமம் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமம் சான்ற மக்களோடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்**

**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (தொல். பொருள். கற்பு. 51)**

*எனச் சுற்றம், குழந்தை மனைவியோடு கூடி இல்லறம் துய்த்தலே சிறப்பைத் தரும் என வலியுறுத்தியுள்ளார். கணவன் மனைவி என்னும் உறவு ஒரே நாளில் ஏற்படுவதன்று. பல பிறவிகளைத் தொடர்ந்து வருவது என அந்நாளில் கொள்ளப்பட்டது. முன்னைப் பிறவிகளில் கணவன் மனைவியாக வாழ்ந்தவர்களே ஊழின் வலிமையால் மீண்டும் கூடுகின்றனர் என்ற கொள்கையைச் சங்க இலக்கியம் சுட்டுகிறது.*

**இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியா எம் கணவனை**
**யான் ஆயர் நின் நெஞ்சு நேர் பவளே (குறு. 49)**

*என்பது அறியத்தகுந்தது. காதல் என்பது வெறும் உடற்காமம் அன்று; அதனையும் கடந்து மனத்தளவில் உயர்ந்து நிற்பது; மனைவியின் உடலழகு வற்றி நரை மூதாட்டியாக ஆனபோதும் அவளை உள்ளன்போடும் போற்றுவது கணவனின் கடமையாகக் கருதப்பட்டது.*

**அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்**
**பொன்னேர்மேனி மணியின் தாழ்ந்த**
**நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்**
**நித்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர (நற். 30)**

*எனச் சங்கப் பாடல் ஒன்று இயம்புகின்றது. மனைவி தன் கணவனையே உயிராகக் கொண்டு வாழ வேண்டும். அவன் நலனே தன் நலன் எனக் கருதிடல் வேண்டும். கணவன் வீடு வறுமையுற்றதாயினும் தன் பிறந்த வீட்டை எண்ணாது பெருமையோடு வாழவேண்டும் என்று சங்க இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. பண்டைத் தமிழகத்தில் சட்ட அடிப்படையில் ஆடவர் மகளிரிடையே சமூகச் சமத்துவக் கோட்பாடு இருக்கவில்லை.[25] இன்றைய நாளில் சமத்துவம் இருபாலர்க்கும் உரியதாகிவிட்டது. பெண்களுக்குரிய பண்புகளாகத் தொல்காப்பியர்,*

**அச்சமும் நாணும் மடனும்முந் துறுத்தல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப (தொல். பொருள். களவு. 7)**

*என்று அச்சம், நாணம், மடம் போன்றவை பெண்களுக்கே உரிய குணமாகும் என்கிறார். பாரதியார்,*

**நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்**

**(பாரதியார் கவிதைகள், 24:4)**

*என்றும், தமிழ்ப் பெண்கள் அனைவரும் விலகி வீட்டிளோர் பொந்தில் வளர்வதை விரைவில் ஒழிக்க வேண்டும் என்றும்* ***(பாரதியார் கவிதைகள் 24:8)*** *பெண்களின் சமத்துவக் கோட்பாட்டுக்கு அடிப்படை அமைத்தார். அன்றைய நாளில் கற்பென்பது மகளிர்க்கு நற்பண்பாகக் கருதப்பட்டது. பருவமடைந்த பெண்கள் வீட்டில் அடைக்கப்படுவார்கள்.*

**யாங்கு ஆகுவள் கொல் பூங்குழை என்னும்**

**அவல நெஞ்சமொடு உசாவாக்**

**கவலை மாக்கட்டு இப்பேதை ஊரே (குறு. 159:5-7)**

*வீட்டில் உள்ள முதிய மகளிர் இவர்களைக் கண்காணிப்பர்.*

**முப்படை முது பதி தாக்கு அணங்கு உடைய (அகம். 7:6)**

*கற்பென்பது அந்நாளில் ஒரு தெய்வீகப் பண்பாகப் பேசப்பட்டது. பாரதியார் கற்பைப் பற்றி பின்வருமாறு கூறுகிறார்.*

**கற்பு நிலையென்று சொல்லவந்தார் இரு**

**கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்**

**(பாரதியார் கவிதைகள், 23:5-6)**

*கற்பென்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான ஒன்று. அது பெண்களுக்கு மட்டும் உரியதன்று என்று சமத்துவக்கோட்பாட்டை வலியுறுத்திக் கூறியுள்ளார். ஆகவே சங்க காலத்திலும் சங்க காலத்தை அடுத்துவந்த காலக்கட்டங்களிலும் சமுதாய அமைப்பிற்கேற்றவாறே சமூகக் கோட்பாடுகள் மனிதனை நெறிப்படுத்தியிருக்கின்றன என்பதை அறிய முடிகிறது.*

**சங்கச் சமூகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**

*மனிதப் பண்பாட்டைத் தலைமுறை தலைமுறையாகக் கொண்டு செல்லும் ஆற்றல் மொழிக்கு உண்டு. மொழியே விலங்குகளிலிருந்து மனிதனை இனம்பிரித்து வழிநடத்தும் கருவி எனலாம். மனிதக் குரங்குகள்*

*மற்றைய விலங்குகளிலிருந்து அறிவுமிக்கவையாக இருப்பினும் அவை தம் தேவைக்கேற்ப ஒன்றை வடிவமைத்துக் கொள்ளும் அறிவாற்றலைப் பெறவில்லை. மனித இனமே தாம் பெற்ற அறிவினால் வழிமுறைதோறும் ஒரு வளர்ச்சியை உண்டுபண்ணும் ஆற்றலைப் பெற்றுள்ளது என ஜான் எம் செப்பர்டு என்ற அறிஞர் கருதுவர்.*[26] *ஆகவே மொழியே அறிவை வளர்க்கிறது என்பதைப் பெறமுடிகிறது.*

*மொழி இல்லையெனில் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றின் வளர்ச்சியும் இல்லை. இதனை உணர்ந்த அறிஞர் பெருமக்களும் ஒவ்வொரு மொழியும் குறிப்பிட்ட சில துறைகளில் வளர்ந்திருப்பதையும் வேறு துறைகளில் வளர்ச்சி குறைந்திருப்பதையும் அம்மொழிச் சொற்களே காட்டும் எனக் கூறுவர். நேரத்தை உணர்த்த அமெரிக்க மொழியில் பல சொற்கள் உள்ளமை, தீவினையைக் குறிக்கச் சீனமொழியில் சொல் இன்மை, பிலிப்பைன்சில் ஓர் இன மக்களின் மொழியில் வெகுளி அல்லது சினம் குறித்த சொல் இல்லாமை ஆகியவற்றை எடுத்துக் காட்டுவர். இவ்வெடுத்துக்காட்டுகள் அந்தந்த மொழியினரின் பண்பாட்டை எடுத்துக்காட்டுகின்றன. மூவேந்தர்கள் என வழங்கப்பட்ட சேர, சோழர், பாண்டியர் முதலியோரால் ஆளப்பட்ட மூன்று நிலப்பகுதிகளையும் மொழியடிப்படையில் தமிழ்நாடு எனப் பிரித்தனர்.*

**வையக வரைப்பில் தமிழகம் கேட்ப (புறம். 168:18)**
**தண்டமிழ் வேலித் தமிழ் நாட்டகம் (பரி. 8:3)**

*என்பன உரிய சான்றுகளாகும்.*

**சங்க காலத்தின் வரலாறு**

*சங்க காலம் பற்றிப் பல்வகையான கருத்துக்கள் நிலவுகின்றன. பாண்டிய நாட்டின் தலைநகரங்களாகிய தென்மதுரை, கபாடபுரம், மதுரை ஆகியவற்றில் விளங்கிய முச்சங்கங்கள் பற்றிச் செவிவழியாகவும் இலக்கியம் வழியாகவும், கல்வெட்டுகள், செப்பேடுகள் வழியாகவும் அறியலாம். சங்கம் என்பதற்குக் களஞ்சிய நூல் பின்வருமாறு பொருள் விளக்கம் தருகிறது.*

*தனி மனிதர்களால் கூட்டாகச் சேர்ந்து ஒரு குறிப்பிட்ட குறிக்கோளினை அடைவதற்காக அமைக்கப்படுகின்ற அமைப்புச் சங்கம்* (Association) *எனப்படுகிறது. இதற்குக் கழகம் என்ற பொருள் வழக்கு உண்டு. இதனை மெக்ஐவர்* (Maciver) *எனும் சமூகவியலறிஞர் பொதுப்படையான ஓர் ஆர்வத்தைக்* (interest) *கூட்டான ஆர்வங்களை* (Group of interest) *அடைவதற்காக அமைக்கப்படும் ஒரு குழு போன்றதே சங்கம் என வரையறுத்துக் கூறுவதனைத் தொகுத்துக் கூறுகிறது.*[27]

**சங்கம்-சொல்லாய்வு**

*'சங்கம்' என்ற சொல் தமிழ்ச்சொல் அன்று; அது வடசொல்லாகும். சகரக் கிளவி மொழிக்கு முதலில் வராது என்பது தொல்காப்பிய இலக்கணக் கூற்று. சங்க இலக்கிய அறிஞர் கா.அப்பாதுரைப்பிள்ளை சங்கம் என்ற சொல்லைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டு கூறியமையைக் கீழ்வரும் சான்று பகரும்.*

*"சங்கம் என்ற சொல்லே வடசொல் எனச் சிலர் நையாண்டி சொல்வதுமுண்டு. இந்தியா என்ற பெயர் வெளியாரால் கொடுக்கப்பட்ட காரணத்தினால் இந்தியா வெளியார் நாடாய் விடாது. சங்கம் தமிழ்ச்சொல் அன்று என்பதற்கும் சரியான சான்று எதுவும் இல்லை. வடமொழியில் அச்சொல் உண்டாயினும் வேறு எந்த ஆரிய மொழியிலும் அது இல்லை. ஆகவே அது ஆரியத் தொடர்பற்ற இந்தியச் சொல், அதாவது தமிழ்ச் சொல் என்பதில் ஐயமில்லை."*[28]

*சங்கம் என்ற சொல்லாட்சி கூட்டம் என்ற பொருளில் சங்க நூல்களில் இடம்பெறவில்லை எனவும் முதன்முதலில் அப்பர் தேவாரத்தில்தான் இடம்பெற்றுள்ளது எனவும் உரைப்பர். பரிபாடலில்,*

**நெய்தலுங் குவளையும் மாம்பலுஞ் சங்கமும் (பரி. 8:3)**

*என்று பேரெண்ணைக் குறிக்கும் வகையில் இச்சொல் இடம்பெறக் காணலாம். மணிமேகலையில் இச்சொல்*

**வலம்புரிச் சங்கம் வறிது எழுந்து ஆர்ப்பப்**

**புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க (மணி. 7:113-114)**

*என்று சங்கம் பற்றிய சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. முச்சங்கங்களைப் பற்றிய முழுமையான தகவல்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய இறையனார் களவியல் உரையில் காணப்படுகின்றன. அவ்வுரை முச்சங்கங்கள் இருந்தன என்றும், அவை பாண்டியர்களால் தோற்றுவிக்கப்-பட்டன என்றும், அவை ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நிலவின என்றும் கூறுகின்றன.*[29]

*சமணம், பௌத்தம் ஆகியன தமிழ்நாட்டில் செல்வாக்கு உற்றபின் தோன்றிய தமிழ் அமைப்புச் சங்கம் என்ற பெயரால் வழங்கப்பட்டது எனவும், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றிய சங்கமே முதலில் தோற்றுவிக்கப்பட்டது எனவும் கருத்துக்கள் நிலவுகின்றன. சங்க காலம் என்பது கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு என்பர்.*[30] *சிலர் கி.பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுக் காலமே சங்க காலம் என்றும் கூறுவர்.*[31] *அறிஞர் பலரின் கருத்துக்களை ஆராய்ந்த பேராசிரியர் ந.சுப்பிரமணியன் சங்க காலத்தைக் குறித்து, "எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் பதினெண்கீழ்க்கணக்கும் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களும் பல்லவர் காலத்துக்கு முற்பட்டவை. அதாவது கிறித்து ஆண்டிற்குச் சில நூற்றாண்டுகள் முன்னும் பின்னுமானவை. தொல்காப்பியத்தை இவற்றிற்குச் சிறிது முந்தியதாகக் கொள்ளலாம்"*[32] *என்பர்.*

*எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, இலக்கணப் பெருநூலான தொல்காப்பியம் என்பன சங்க இலக்கியம் என்று கருதி வந்துள்ளனர். இம்மரபு இறையனார் அகப்பொருள் உரையிலிருந்து தொடங்குகின்றது. இரா.இராகவையங்கார் அவை, அவையம், புணர்கூட்டு ஆகிய சொற்கள் சங்க நூல்களில் காணக்கிடக்கையை எடுத்துக்காட்டிச் சங்கம் குறித்த செய்திகள் கற்பனையல்ல என்பர்.*[33]

*பல்லவர்கள் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு கி.பி. முந்நூறில் ஆளத் தொடங்கினர் எனவும் இப்பல்லவரைப் பற்றிய குறிப்புச் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை எனவும் பல்லவர் ஆட்சி காஞ்சியில் தோன்றிய கி.பி. முந்நூறு நூற்றாண்டின் சங்கத்தின் இறுதி எல்லை எனவும் பேராசிரியர் மா.இராசமாணிக்கனார் கருதுகிறார்.*[34] *ஆகவே சங்க காலம் என்பது கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகள் முடிய எனக் கொள்ளலாம். கி.பி. இரண்டு அல்லது மூன்று வரையிலான அறுநூறு ஆண்டுகளைச் சங்க காலம் எனப் பொதுவாகக் கருதுவர்.*

*சங்கம் பற்றி அறியப் பழங்கால இலக்கியங்கள் சான்று தருகின்றன. மதுரைக்காஞ்சியில்*

**தொல் ஆணை நல் ஆசிரியர்**
**புணர் கூட்டு உண்ட புகழ் சால் சிறப்பின்**
**நிலம் தரு திருவின் நெடியோன் போல (மதுரை. 761-763)**

*என்று குறிப்பிட்டுள்ள அடிகள் ஆசிரியர் பலர் கூடியிருந்த பேரவையைக் குறிக்கின்றன. இதற்கேற்பவே பனம்பாரனாரின் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம்*

**நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து (தொல். பாயிரம். 9)**

*என்கிறது. புணர் என்பதும், அவையம் என்பதும் சங்கம் என்ற சொல்லைக் குறிக்க வந்தவையாகும்.*

**தமிழ்நிலை பெற்ற தாங்குஅரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை (சிறு. 66-67)**

*என்று மதுரையில் தமிழ்ப் புலவர்கள் வீற்றிருந்த தெருவைக் குறிப்பதைக் காணலாம்.*

**நிலன் நாவில் திரிதருஉம் நீள்மாடக் கூடலார்**
**புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்டும் பொழுதன்றோ**
**(கலி. 35:17-18)**

*எனவரும் அடிகள் மதுரைச் சங்கத்தில் தமிழாய்ந்த புலவர்களையும் அவர்கள் புதிது புதிதாகப் பாடும் செய்யுள் திறத்தையும் குறிக்கின்றன எனலாம். மேலும் கலித்தொகையில்*

**பொது மொழி பிறர்க்கின்றி முழுதாளும் செல்வர்க்கு**
**மதி மொழி யிடல்மாலை வினைவர் போல் வல்லவர்**
**செது மொழி சீத்த செவி செறுவாக**
**முது மொழி நீரா புலன் நா உழவர்**
**புது மொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர (கலி. 68:1-5)**

*எனவும் செய்தி வருகின்றது. இப்பாடலில் அரசனுக்கு அமைச்சரைப் போல் பல நூல் கற்ற புலவர்கள் இருந்தனர் என்றும் அவ்வரசனுக்கு அவர்தம் செவி வாயிலாகவும் சான்றோர் பாக்கள் நீராகவும் ஏராகவும் கொண்டு நிலத்தை உழுது உண்ணும் புலவரென்றும் அவர்கள் புதிய பாக்களை யாப்பவரென்றும் அப்பாக்களைக் கொள்ளை கொண்டது மதுரை என்றும் கூறுவதைக் காணலாம். இதேபோல் மதுரையில் மூன்று முரசுகளுடன் முத்தமிழும் ஆளப்பட்ட செய்தியைப் பாடல்கள் உணர்த்துகின்றன.*

**இமிழ் குரல் முரசம் மூன்றுடன் ஆளும்**
**தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே (புறம். 58)**

*இவ்வாறு மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்தது என்பதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் கிடைக்கின்றன. பல்வேறு இலக்கியப் பகுதிகள் காட்டும் சான்றுகளோடு வரலாற்று நோக்கிலும் சங்க காலத்தை அறியத்தக்க ஆவணங்கள் உள்ளன.*

**சங்க சமூகத்தின் எல்லைகள்**

*சங்கச் சமூகம் விரிந்து பரந்த நில அமைப்புகளைப் பெற்றும் மூவேந்தர் ஆளும் நாட்டெல்லைகளைக் கொண்டும் விளங்குகிறது. தமிழக எல்லைகளை வரையறுத்துக் கூறும் சங்கப் பாடல்கள் இல்லை என்றே கூறலாம். எனினும் பனம்பாரனார் எழுதிய தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில் தமிழக எல்லைகள் கூறப்பட்டுள்ளன.*

**வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்**

**தமிழ்கூறு நல்லுலகத்து** **(தொல். பாயிரம் 1-2)**

*என்பதால் பாடலுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள் குமரி என்பதைக் குமரியாறு என்றே பொருள் கொண்டனர்.*

*கடல் கொள்வதன் முன்பு பிற நாடும் உண்மையின் தெற்கும் எல்லை கூறப்பட்டது. கிழக்கும் மேற்கும் பிற நாடு இன்மையின் கூறப்படாவாயின என்னும் இளம்பூரணர் உரையும் அறியத்தகுந்தது.*

**நெடியோன் குன்றமு தொடியோள் பெளவமும்**

**தமிழ் வரம்பறுத்த தண் புனல் நன்நாட்டு** **(சிலம்பு. 8:1-2)**

*என்று தமிழக எல்லைகளை இளங்கோவடிகள் வரையறுக்கின்றார். இவ்வாறு பழந்தமிழர் வடக்கில் வேங்கடமும் தெற்கில் குமரியும் கிழக்கிலும் மேற்கிலும் கடலும் எல்லைகளாகக் கண்டனர். இவற்றுக்கு மறுதலையாக*

**வடாஅது பனி படு நெடு வரை வடக்கும்**

**தெனாஅது உரு கெழு குமரியின் தெற்கும்**

**குணாஅது கரை பொரு தொடு கடற் குணக்கும்**

**குடாஅது தொன்று முதிர் பெளவத்தின் குடக்கும்**

**கீழது முப் புணர் அடுக்கிய முறை முதற் கட்டின்**

**நீர் நிலை நிவப்பின் கீழும் மேலது**

**ஆனிலை உலகத்தானும் ஆனாது** **(புறம். 6:1-7)**

*என நாட்டின் எல்லைகளையும் விண்ணுலகையும் பாதாளத்தையும் எல்லைகளாகக் கூறுவதனைக் காணலாம். மேலும்,*

**தென்குமரி வட பெருங்கல்**

**குண குட கடலா எல்லை** **(புறம். 17:1-2)**

*தென்திசையிலும் வடதிசையிலும் கடற்பரப்பை எல்லைகளாகக் கொண்டு விளங்குவதனைப் புறநானூற்றுப் பாடலின்வழி உணரலாம்.*

**வடதிசை எல்லை இமயம் ஆக**

**தென்ன அம்குமரியொடு ஆயிடை அரசர்** **(பதிற்று. 43:7-8)**

என்றும் சங்க இலக்கியங்கள் தமிழக எல்லைகளை வரையறுக்கின்றன.

சங்கச் சமூகம் முப்பெரும் வேந்தர்களால் ஆளப்பட்டது. அவர்களின் ஆளுகைக்குட்பட்ட பகுதிக்குச் சேர, சோழ, பாண்டியர் நாடுகள் எனப் பெயர் வழங்கியது. மூவேந்தர் ஆண்ட நாட்டெல்லைகள் குறித்து ஆ.வேலுப்பிள்ளை இன்றைய தமிழ்நாடும் கேரளமென்ற மாநிலமும் மைசூர், ஆந்திரப்பிரதேசம் என்ற மாநிலங்களின் தெற்குப் பகுதிகள் சிலவும் அன்றைய தமிழர்களிடம் இருந்தன என்றும், கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த அசோகப் பேரரசன் காலத்திலேயே தமிழகம் சேர, சோழ, பாண்டிய நாடுகளாகப் பிரிந்துவிட்டதற்குச் சான்று உண்டு எனவும், தமிழ்நாட்டின் ஒரே நில எல்லையாக இருந்த வடக்குப் பகுதியிலும் தமிழருடைய திராவிடச் சகோதரரான தெலுங்கரும் கர்நாடகத்தில் வாழ்ந்தனர் என்றும் தமிழக எல்லைகளின் பழமையை வரையறுக்கின்றார்.[35]

தமிழ் வழங்கும் நிலத்தை வரம்பாகக் கொண்டு சங்கச் சமூகத்தின் எல்லையினைத் 'தமிழ்கூறு நல்லுலகம்' எனக் குறித்தனர். தொல்காப்பியர் காலத்தில் விளங்கிய தமிழக எல்லைகளை வரையறுக்கும் வேலியாய்த் தமிழ்மொழி விளங்கியது. இவ்வாறு தமிழ்மொழி சிதையாது வளர்ந்து சிறந்ததற்கு நிலைக்களமாக விளங்கிய இடம் வடக்கே வேங்கடமலைத் தொடரையும், தெற்கே குமரியாற்றையும் எல்லைகளாக உடைய தமிழகமே என்று மொழி அடிப்படையில் எல்லை காணுவர்.[36]

வேங்கடமலைக்கு வடக்கே உள்ள நிலப்பகுதிகளில் ஆங்காங்கே தமிழ் மொழி பேசப்பட்டிருப்பினும் அவ்விடங்களில் தமிழ் சிதைந்தும் மாறுபட்டதால் அந்நாடுகளைத் தமிழ் கூறும் நல்லுலகமாகத் தமிழ்ச் சான்றோர் கருதாமல் விட்டிருக்கலாம் என்றும் கொள்ளலாம். தமிழ் மொழியை வேலியாகக் கோலிய பெருமை தமிழ்நாட்டிற்கே உரியது என்பதை,

**தண்தமிழ் வேலித் தமிழ் நாட்டகமெல்லாம்** **(பரி. 9:1)**

*என்று பரிபாடல் வரிகள் எடுத்துக்காட்டுகின்றன. கருவூர்க் கந்தையப் பிள்ளைச் சாத்தனார்,*

**வையக வரைப்பில் தமிழகம் கேட்ப**

**பொய்யாச் செந் நா நெளிய ஏத்திப்**

**பாடுப என்ப பரிசிலர் நாளும் (புறம். 168)**

*எனத் தமிழக எல்லையின் சிறப்பை எடுத்துக் கூறுவர். பண்டைத் தமிழகப் புலவர் பலரும் நட்பையும் காதலையும் நீரும்நிலனும் விசும்புமாகப் பரந்த உலகத்தோடு ஒப்பிட்டு எண்ணும் உளப்பாங்கினைப் பெற்றிருந்தனர் என்பதை,*

**நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆர் அளவுவின்றே சாரல்**

**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே (குறு. 3)**

*எனவரும் பாடல் அடிகள் சுட்டுகின்றன. பழந்தலைவன் தலைவியின்பாற் கொண்ட அன்பு பாராட்டலில்,*

**பெயல்கால் மறைத்தலின் விசும்பு காண லரே**

**நீர் பரந்து ஒழுகலின் நிலம் காணலரே (குறு. 355)**

*என்னும் நிலமாகிய அன்பின் எல்லைகள் அறியப்பட்டன. வேங்கட மலையும், தென்குமரியும் நாட்டெல்லைகளாக அறியப்பட்டதோடு அன்பின் மிகுதிக்கு நீரும் நிலனும் விசும்பும் பண்டைய தமிழருக்கு எல்லைகளாகக் கருதப்பட்டுள்ளமையையும் சங்கச் சான்றுகளின்வழி அறியலாம்.*

**நகரமைப்பு**

*சங்ககால நகர மக்கள் தூய்மையைப் பெரிதும் போற்றினர். நகரம் என்பதற்குக் களஞ்சிய நூலார் மிகுதியான மக்கள் வாழுகின்ற நிலப்பகுதி நகரம் எனப்படுகிறது. இது பொதுவான சாலை வசதிகளையும், திட்டமிடப்பட்ட ஒழுங்கில் அமைந்த போக்குவரத்தையும் மக்கள் குடியிருக்கின்ற அருகருகே அமைந்த உறுதியான வீடுகளையும் கொண்டிருக்கும். இருப்பினும் நகரம் (city) என்பதைத் திட்டவட்டமாக*

வரையறுத்துக் கூறுதல் எளிதன்று[37] என்று நகரம் என்பதற்கு விளக்கம் தருவர். இவற்றைப் போலவே சங்கச் சமூகத்திலும் வான்முட்டும் நெடுநிலை மாடங்களும் களிறுகள் நுழைவதற்கேற்ற வாயில்களைக் கொண்ட அரண்மனைகளும், நெடுந்தெருக்களும் இருந்தன.

நகரம் என்ற சொல் பண்டைக்காலத்தில் அரண்மனைகளுக்கும் கோயில்களுக்கும் பெருமனைகளுக்கும் வழங்கி வந்திருக்கின்றது என்பதை அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.

**கடிநகர் புனைந்து கடவுள் பேணி (அகம். 136)**

பேரூர்களைக் குறித்துச் சங்க இலக்கியங்கள் கீழ்வருமாறு சுட்டுகின்றன.

அ. செல்வக் குழந்தைகள் சிறுதேர் உருட்டி விளையாடும் வீதிகளும் பசியறியாத வீடுகளும் மிகுந்து காணப்பட்டன.

ஆ. மக்கள் திரளான விழாக்கள் காணப்பட்டன.

இ. வறட்சிக்காணா சோலைகள் காணப்பட்டன.

ஈ. கள் சமைக்கும் இல்லங்களைக் கொண்டன.

உ. தெருக்களில் சிவபெருமானின் கோயில் எழுப்பப்பட்டது.

**தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை (பெரும். 253)**
**மல்லல் பேர்ஊர் மடியின் மடியா (பெரும். 254)**
**பேர்ஊர் துஞ்சும் யாரும் இல்லை (நற். 132)**

இவ்வாறான பேரூர்களின் இயல்புகள், செல்வச் செழிப்புமிக்க குடியிருப்புகள் பழங்காலத்தில் இருந்தன என்பதைச் சங்க இலக்கியங்களின்வழி அறியலாம்.

### சமூகப் பண்புகள்

சமூகம் என்பது கூடிவாழும் ஒழுக்க நெறியாகும். சங்க காலத்தில் மக்கள் கூடுவதைத் திரள் என்றே குறித்து வந்துள்ளனர். திரள் என்பது ஒருங்கிணைந்த மக்கள் கூட்டம், கூட்டு வாழ்க்கைக் குழு என்ற அடிப்படையில் வழங்கப்பட்டது. திரள் என்ற சொல் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் காணப்படுகின்றது. நன்னன் வேன்மாறனின் கோபுர

*வாயில்முன் காணப்படும் பல்வேறு கையுறைப் பொருள்களில் முத்துகளையுடைய யானைத் தந்தங்களின் திரள்கள் இருந்தன.*

**குருஉப்புலி பொருத புண்கூர் யானை**

**முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள் (மலை.517-18)**

*என்றும்,*

**நீர்த்திரள் கடுக்கு மாசுகில் வெள்ளி (அகம். 142)**

**அரைசேர் யாத்த வெண்திரள் வினைவிறல்**

**எழூஉத் திணிதோள் சோழர் பெருமகன்**

**விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி**

**குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்**

**செம்புஉறழ் புரிசைப் பாழி நூறி**

**வம்ப வடுகர் பைந்தலை சவட்டி**

**கொன்ற யானைக் கோட்டின் தோன்றும் (அகம். 375)**

*என்றும் வருவனவற்றைக் காணலாம். திரள் என்பது ஒன்றாகச் சேர்ந்திருத்தல் என்ற அடிப்படையில் வந்துள்ளமையை மேற்கண்ட சான்றுகளின்வழி அறியலாம். பண்டைக்கால மக்கள் ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்திருந்த நிலையை மதுரைக்காஞ்சி விளக்குகிறது. மதுரையில் நீர்த்துறைகள்தோறும் பல்வேறுபட்ட பூத்திரள்களையுடைய பூந்தோட்டங்களால் சூழப்பட்டு நெடுங்காலமாகப் பாண் சாதியினர் குடியிருந்தனர் என்பதில் பூந்திரள்களில் பாண்சாதி மக்கள் கூடிவாழ்ந்த நிலை புலனாகின்றது.*

*பழஞ்சமூக மக்கள் திரளில் திருவிழாக்கள், போர் புரிதல், திருமணம், ஈமச்சடங்குகள், விளையாட்டு போன்ற பொழுதுபோக்குகள் போன்றவற்றின் அடிப்படையில்மக்கள் கூட்டம் கூடியது எனலாம். திருவிழா என்ற சொல் பண்டைய நாளில் சாறு என்றே வழங்கப்பட்டது. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் நாட்டில் கரும்பாற் கட்டப்பட்டுச் செந்நெற் கதிரால் வேயப்பட்ட கூரை, விழா கொண்ட களம் போலத் தோன்றியது என்பதை*

**அலங்கு செந்நெற் கதிர் வேய்ந்த**

**ஆய் கரும்பின் கொடிக் கூரை**
**சாறு கொண்ட களம் போல** **(புறம். 22)**

*என்னும் புறநானூற்றுப் பாடலின்வழி அறியலாம்.*

**கரும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடி** **(புறம். 32)**

*பழந்தமிழ்ச் சமூகத்தின் அடிப்படைப் பண்புகளைச் சங்க இலக்கியங்களில் பெறமுடிகின்றது. அச்சமூகத்தின் தொன்மைச் சின்னங்களாய்த் திகழும் பழக்க வழக்கங்கள், தனிமனித நடத்தை ஒழுகலாறுகள் ஆகிய பண்பாட்டுக் கூறுகளைப் பதிவு செய்துள்ளன. சங்கப் படைப்புகள் ஒரு சமூகத்தை அடையாளம் கண்டுகொள்ளத்தக்க வகையில் சில அடிப்படையான பண்புக் கூறுகள் காணப்படுகின்றன. அவற்றைச் சமூகத்தின் தனித் தன்மைகள் எனலாம். சமூகத்தின் விழுமிய உணர்ச்சிகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. ஆநிரைகளைக் களவுசெய்து அவற்றின் இறைச்சியை அறுத்து உண்ணுதல், பகைவர் நாட்டிற்குத் தீயிடுதல், பகைவர் வயலிடங்களில் கழுதை ஏர் பூட்டி உழுது வெள்வரகு விதைத்தல், யானைப் படை கொண்டு நீர்நிலைகளை அழித்தல், மகளிர் கூந்தலை அறுத்துக் கயிற்றால் முறுக்கிக் காவல்மரத் துண்டுகளைக் கட்டியிழுத்தல் ஆகியன நீர்நிலைக் காலத்திற்குரிய தனிப்பண்புகளாகும்.*

**சங்க சமூகத்தின் பண்பு நலன்கள்**

*சங்க காலப் பண்புகள் எல்லாச் சமூகத்திலும் இருந்திருக்கலாம். இப்போதும் சில வீரநிலைக் காலத்துக்குரிய பண்புக் கூறுகள் காணப்படுவதும் அதன் அடிப்படையாகும். அக்காலத்தின் உயர் பண்புகளாகக் கருதப்பட்டவற்றில் போர்க்குணமும் ஒன்றாகும். பழந்தமிழ் மன்னர்கள் தம்மினும் வலிமை குறைந்தவரோடு போர் செய்வதில்லை. தம் மேல் படைகளை எறிந்தாரையும் தங்கள் இறைவன் அவர்கள் தமக்கு நிகராகாமையால் எதிரே சென்று படை எறியமாட்டான் என்று சங்கப் பாடல் ஒன்று குறிப்பிடுகிறது.*

**எறியா ரெறிதல் யாவண தெறிந்தோர்**
**எதிர்சென் றெறிதலுஞ் செல்லான தனால்** **(புறம். 301:8-9)**

பண்டைய மன்னர்கள் தமக்கு இணையான படை வலிமை கொண்டவரிடையே மட்டும் போர்புரியும் குணம் கொண்டவர்கள் என்பதை இப்பாடலால் அறியலாம். சங்கச் சமூக மக்களின் உயர்ந்த பண்புநலன் குறித்துப் புறநானூற்றுப் பாடல் விவரிக்கின்றது.

**உண்டால் அம்ம இவ்உலகம் ‘இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது’ எனத்**
**தமியர் உண்டலும் இலரே, முனிவு இலர்**
**துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சி**
**புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் பழிஎனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர், அயர்விலர்**
**அன்ன மாட்சி அணையர் ஆகி**
**தமக்கு என முயலா நோன்தாள்**
**பிறர்க்கு என முயலுநர் உண்மையானே (புறம். 182)**

இந்திரனுக்குரிய அமிழ்தம் கிடைத்ததாயினும் அதனை இனிதென்று கொண்டு தாமே தனித்து உண்ணார். பிறர்க்கும் பகிர்ந்தளித்து உண்பர். பிறர் அஞ்சத்தகும் முயற்சியால் விளையும் துன்பங்களுக்குத் தாமும் அஞ்சிச் சோம்பியிருத்தலும் இல்லை. அதனால் புகழ் கிடைப்பதாயினும் தம்முடைய உயிரையும் கொடுப்பர். பழிதரும் செயலாயின் உலகத்தையே பரிசாகக் கொடுத்தாலும் முயலமாட்டார். சான்றோர்களின் இத்தகைய உயர்குணப் பண்புகளை அன்றைய சமூகம் பெற்றிருந்தது.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் அவரவர்க்கியைந்த நிலையில் அந்நாளில் கடைப்பிடிக்கப்பட்டது. குறவர்கள் தம் இல்லங்கட்கு வந்த விருந்தினர்க்குத் தினைமாவை அளித்துத் தாமும் உண்பர். இல்லத்தலைவியின் பண்பு

**அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின் (நற். 142)**

என நற்றிணைப் பாடலில் உணரமுடிகிறது.

*வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் தம் குறிக்கோளாகக் கருதினர்.*

**வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்**
**சிறியவன் செல்வம் போல் சேர்ந்தார்க்கு நிழல் இன்றி**
**யார் கண்ணும் இகந்து செய்து இசைகெட்டான் இறுதி போல்**
**வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின் (கலி. 10)**

*தம் மனதுக்கியைந்த ஒருவனோடு உடன்போக்குச் செல்லும் முறையை அறமெனக் கருதுவதும் அன்றைய சமூகத்தின் தனித்தன்மைகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.*

**பொலம்பிறைச் சென்னி நலம்பெறத் தாழச்**
**செவ்வாயக் குதலை மெய்பெறா மழலை**
**சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப (மணி. 3:136-138)**

**விளையாடு சிறுதேரீர்த்துமெய் வருந்தி**
**அழளித் துஞ்சு மைம்படைத் தாலிக்**
**குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்**
**காவற் பெண்டிர்கடிப்பகை யெறிந்து**
**தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவும் (மணி. 7:55-59)**

*சங்க காலச் சமூகப் பழக்கவழக்கமாக நடுகல் அமைத்து வழிபடுதல் போன்றவையும், ஆண் குழந்தை வீரச்சிறுவனாயிருந்த தருணத்தில் அவன் காலில் வீரக்கழலை அணிதலும் பிறந்த ஐந்தாம் நாள் அவனுக்கு ஐம்படைத்தாலி என்னும் தாலியைச் சூட்டுவதும் சங்க சமூகத்தின் பழக்க வழக்கங்கள் ஆகும். இவற்றைக் கால வளர்ச்சியில் அவர்கள் கற்றுக் கொண்ட பல்வேறு கால அனுபவம் எனலாம்.*

**சமூக ஒழுக்கம்**

*சங்க காலம் ஒரு பொற்காலமெனக் கருதப்பட்டதற்குக் காரணம் அன்றைய சமூகத்தால் ஒப்புதல் அளிக்கப்பட்ட வரையறைகள் ஆகும். ஒழுக்கத்தை அனைத்து மக்களும் பின்பற்றி வாழ்ந்தமையே இதன்*

அடிப்படை ஆகும். அரசு நிறுவனங்களாக இருப்பினும், குடும்ப அமைப்பாக இருப்பினும் தாம் விதித்திருந்த எல்லையை அக்கால மக்கள் மீறவில்லை. அகவாழ்வின் ஒழுக்கத்தை ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என ஏழு வகையாக வகுத்திருந்தனர். தொல்காப்பியர்,

**கைக்கிளை முதலாகப் பெருந்திணை யிறுவாய்**

**முற்பட கிளந்த எழுதிணை என்ப (தொல். பொருள். அகத். 1)**

என்று குறிப்பிடுகிறார். அகத்திணைக் கூறுபாடுகள் ஏழிற்கும் புறத்திணைக் கூறுபாடுகள் எழுதிணையாக வரையறுத்தனர். அன்பின் ஐந்திணையைக் களவு, கற்பு எனப் பிரித்து அதற்குத் தகுந்தாற்போல் ஆண், பெண் வாழ்க்கையை வகுத்திருந்தனர். ஒருவன் ஒருத்தியையும், ஒருத்தி ஒருவனையும் மணப்பது பண்டைய தமிழரின் சமூக வரையறையாகக் கருதப்பட்டது. இதையே கற்பு வாழ்க்கை என்றனர்.

**கற்பெனப்படுவது காரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள் வதுவே**

**(தொல். பொருள். கற்பு 1)**

என்ற தொல்காப்பியர் நூற்பா கற்பு வாழ்க்கைக்குச் சான்று தரும். களவு வாழ்க்கை அன்றைய சமூகத்தால் வரையறுத்துப் பேசப்படவில்லை. எனினும் ஆண், பெண் இருவர் உள்ளத்தும் நின்ற அன்பின் பெருக்கினால்தான் வேற்றுமையின்றி இருவரும் ஒருவராகி ஒழுகும் உள்ளப் புணர்ச்சியாகக் காதலொழுக்கம் கொண்டனர். இதை,

**அதுவே**

**தானே அவளே தம்மியர் காணக்**

**காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல் (நூ. 1)**

என்று இறையனார் களவியலுரை குறிப்பிடுகிறது.

**திருமணம்**

ஒரு பெண் பல ஆண்களை மணப்பதும், ஓர் ஆண் பல பெண்களை மணப்பதும் அன்றைய பண்பாடாக இருந்தது. இம்முறை இன்று திபெத் நாட்டில் உள்ளதாகக் குறிப்பிடுவர்.[38] ஒருவன் ஒருத்தியை மணம்புரிந்த

பின்னரும் அவன் பரத்தையரோடு உறவுகொண்ட செய்தியைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. ஆனால் பெண்களுக்கு விதிக்கப்பட்ட வரையறை எல்லைக்குட்பட்டதாகவே அமைந்தது. ஆதலால் பண்டைய சமூகம் விதித்திருந்த குடும்ப வரையறை பெண்ணிற்கு மட்டுமே வலியுறுத்தப் பட்டது என்பதை உணரலாம். ஓர் ஆடவன் தன் குலத்துக்கு வெளியே மணந்துகொள்ளல் ஆகாது என்ற நிலை அப்போது இல்லை என்பதை

**யாயும் ஞாயும் யார் ஆகியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே** **(குறு. 40)**

என்னும் குறுந்தொகைச் செய்யுளால் அறியலாம். அன்றைய மணஉறவு குலம் பார்த்துச் செய்யப்படவில்லை என்பதை இப்பாடல் காட்டுகின்றது. பெண் ஒருத்தி தமக்கு இயைந்த ஒருவனோடு உடன்போக்குச் சென்று விட்டால் அன்றைய சமூகம் அறம் கற்பித்து ஆறுதல் சொல்லும் நிலையைச் சங்க இலக்கியத்தில் காணலாம். பெண் கற்புடையவளாகத் திகழ்வது பழஞ் சமூகத்தின் பண்பாட்டுப் பதிவாகக் கருதப்படுகிறது. மனைவியிடம் கற்பென்னும் கலங்கா நிலைமை ஏற்படுமாயின் பெண்மையைவிட உயர்ந்தது இல்லை என்பதை

**பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்**
**திண்மை யுண்டாகப் பெறின்** **(குறள். 54)**

என்ற குறள்வழி உணரலாம்.

தெய்வத்தைத் தொழாதபோதும் கணவனையே தெய்வமாகத் தொழுது விடியலில் எழுகின்றவள் பெய் என்று சொல்ல மழை பெய்யும் என்பதை

**தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை** **(குறள். 55)**

எனக் கற்பிற்கு உயர்வு கற்பிக்கப்பட்டது. கற்பென்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான ஒன்றே எனப் பிற்காலக் கவிஞர்கள்

*குறிப்பிடுவர். பிறன்மனை நோக்காப் பேராண்மையுடையோர் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.*

**பெண்களின் நிலை**

*கணவன் இறந்துவிட்டால் மனைவி கைம்மை நோன்பு கொள்ள வேண்டும் என்பது வீரநிலைக் காலத்துக்குரியதாக இருக்கலாம். கணவனை இழந்துநிற்கும் மனைவியின் நிலையை ஒரு புலவர் பாடுகின்றார்.*

**குய் குரல் மலிந்த கொழுந் துவை அடிசில்**
**இரவலர்த் தடுத்த வாயில் புரவலர்**
**கண்ணீர்த் தடுத்த தண் நறும் பந்தர்**
**கூந்தல் கொய்து குறுந் தொடி நீக்கி**
**அல்லி உணவின் மனைவியொடு இனியே**
**புல்லென்றனையால் வளம் கெழு திருநகர்**
**வான் சோறு கொண்டு தீம் பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**தனித் தலைப் பெருங் காடு முன்னிய பின்னே (புறம். 250)**

*கணவனை இழந்த தலைவியின் தலை முடி கொய்யப்பட்டது. அவள் கையில் அணிந்த குறுவளையல்கள் கழற்றப்பட்டன. அல்லியோடு கலந்த சோறு உணவாகக் கொடுக்கப்பட்டது என்பதைச் சங்கப் பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**கோட்பாடுகள்**

*சங்கச் சமூகம் தம் உறுப்பினர்களை நெறிப்படுத்தி அவர்கள் வாழ்வை மேம்படுத்தவும் அவர்களிடையே ஒருமித்த நடத்தையை ஏற்படுத்தவும் தனிமனிதக் கோட்பாடுகள் பயன்பட்டன. பழஞ்சமூக மக்கள் தங்கள் குடும்ப வாழ்க்கையில் உயர்ந்து வாழ நெறிமுறைகளைக் கொண்டுள்ளனர். அன்றைய குடும்ப நிலைக்கு அறம் பெரிதும் பயன்பட்டது. இதன் அடிப்படையில் இல்லறக் கோட்பாடுகள் தோன்றின. கணவன்-மனைவி சுற்றத்துடன் குழந்தையும் கூடி இல்லறம் துய்த்தல் என்ற சிறப்பைத் தரும் அடிப்படையையே கோட்பாடுகள் உணர்த்தின.*

*கணவன் மனைவி மேற்கொள்ளும் அறம், பொருள், இன்பம் போன்ற நன்னெறிகளைத் தவறாமல் கடைப்பிடித்தால் குடிப்பெருமை உயர்வடையும் என்பதையும் வலியுறுத்தின. இதனைத் தொல்காப்பியத்தில்*

**நன்னெறிப் படரும் தொன்னலப் பொருளினும்**

**(தொல். பொருள். கற்பு. 5)**

*என அறியலாம்.*

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**

**பண்பும் பயனும் அது (குறள். 45)**

*என்பதற்கேற்ப இல்லறம் சிறக்க அன்பும்அறனும் மிகத் தேவை என்பதைச் சங்கச் சமூக மக்கள் அறிந்து வைத்திருந்தனர். இதனை உணர்ந்த முதுகண்ணன் என்பவர் சோழன் நலங்கிள்ளிக்கு அறம், பொருள், இன்பங்களின் பெருமைகளை எடுத்துரைப்பதனை,*

**அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்**

**ஆற்றும் பெரும நின் செல்வம்**

**ஆற்றாமை நிற் போற்றா மையே (புறம். 28)**

*என்பதால் பெறலாம். இல்லற வாழ்விற்கு அறத்தின்வழி ஆற்றும் பொருளும் இன்பமும் சிறப்படையும் என்பதை இப்பாடலால் உணரலாம்.*

*சங்கச் சமூகத்தில் கணவன் தவறுசெய்தால் அவனை வெறுத்தல் மனைவியின் இயல்பாகக் கொள்ளப்படவில்லை. அன்பினால் அவனைத் திருத்தவேண்டும் என்று பெண்களுக்கு அறிவுரைக்கப்பட்டது என்பதனை*

**முட்கால் இறவின் முடங்குபுறப் பெருகிளை**

**புணரி இருதிரை தரூஉம் துறைவன்**

**புணரிய இருந்த ஞான்றும்**

**இன்னது மன்னோ நல்நுதல் கவினே (குறு. 109)**

*என்ற குறுந்தொகைப் பாடலின்வழி அறியலாம்.*

*குடும்ப வாழ்வு குழந்தையின்றி முழுமைபெறுவதில்லை என்ற கோட்பாட்டைச் சங்க சான்றோர் கொண்டிருந்தனர். குழந்தைப்பேற்றின் இனிமையை வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.*

**எழுபிறப்பும் தீயவை தீண்டாப் பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின் (குறள். 62)**

**குழலினிது யாழினி தென்ப தம்மக்கண்**
**மழலைச் சொற் கேளா தவர் (குறள். 66)**

**அமிழ்தினும் ஆற்ற லினிதே தம்மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ் (குறள். 64)**

*இல்லறம் நல்லறமாகத் திகழக் குழந்தைப்பேறு முதன்மையானது என வள்ளுவரின் இல்லறக்கோட்பாடு விளக்குகிறது.*

**வருணம்**

*இந்தியாவில் வருணாசிரமம் என்பது பார்ப்பனர்களால் ஏற்படுத்தப்பட்டு அதுவே பல சாதிகள் தோன்ற வடிகாலாகவும் அமைந்தது. நிறம் என்ற பொருளில் வருணம் என்ற சொல்லை ஆள்வர். தொடக்கத்தில் இரு வருணங்களே இருந்தன என்று கூறுவர். சிந்துசமவெளி காலத்தில் தொழில்முறையில் சாதிப் பகுப்புகள் இருந்தாலும் பிறப்பு அடிப்படையில் சாதிகள் தோன்றவில்லை.[39] அதனாலேயே ஔவையார் கொடையாளரை மேலோர் என்றும், கொடாதாரைக் கீழோர் என்றும் நெறிப்படுத்தியுள்ளார்.*

*தொல்காப்பியத்திலும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களிலும் நால்வகை வருணங்கள் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. ஆனால் அவ்விலக்கியங்களில் சாதியைக் காட்டித் தீண்டாமையை வலியுறுத்தவில்லை. வருண வேறுபாடுகள் தொல்காப்பியர் காலத்திலேயே நுழைந்துவிட்டன.*

**அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்**
**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
**இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் (தொல். பொருள். புறத். 74)**

*தொல்காப்பியத்தின் இந்நூற்பா அந்தணர்களின் இறப்பினைக் குறிப்பிடுவதை உணரலாம். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் போன்றோர் ஆற்றவேண்டிய கடமைகள் குறித்தும் அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுகலாறுகள் குறித்தும் தொல்காப்பிய மரபியல் நூற்பாக்கள் விவரிக்கின்றன.*

**வேளாண் மாந்தர்க்கு குழுதா ண்ல்லது**

**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி**

**(தொல். பொருள். மரபு. 625)**

**வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே**

**நிகழ்ச்சி அவர்கட் டாகலான (தொல். பொருள். மரபு. 638)**

*நால்வகை வருணத்திலும் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பகுப்புகள் இருந்துள்ளன.*

**அன்ன ராயினும் இழிந்தோர்க் கில்லை**

**(தொல். பொருள். மரபு. 629)**

*அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய கடமைகள் வணிகர்க்கும் வேளாளர்க்கும் இல்லை என்ற அடிப்படையில் தொல்காப்பியம் செல்கிறது.*

*சங்க காலத்திற்கு அடுத்துவந்த திருவள்ளுவர் காலத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய பகுப்புகள் இருந்தன.*

**அந்தணர் நூற்கு அறத்திற்கும் ஆதியாய்**

**நின்றது மன்னவன் கோல் (குறள். 543)**

**ஆயபயன் குன்று அறுதொழிலோர் நூல்மறப்பர்**

**காவலன் காவா னெனின் (குறள். 560)**

*எனவரும் குறள்கள் அந்தணரையும் அவர்கள் புரியும் அறுதொழிலையும் குறிப்பிடுகின்றன. அந்தணரும் அவர்கள் புரிந்த அறுதொழிலும் வள்ளுவர்க்கு உடன்பாடாக இருந்தமையாலே அவர்களின் நூலும், பணியும் நன்மைபயப்பன எனக் குறிப்பிடுகிறார். மேலும் மேல், கீழ் என்று பகுக்கும் நிலை வள்ளுவர் காலத்திலும் இருந்தது.*

**மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்துங்**
**கீழல்லார் கீழல் லவர்** **(குறள். 973)**

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்** **(குறள். 972)**

**ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்** **(குறள். 133)**

*இக்குறட்பாக்கள் பிறப்பால் உயர்வு, தாழ்வு இல்லை என்ற கருத்தையே உணர்த்துகின்றன.*

**சங்ககாலச் சமூகநிலை**

*சங்ககாலப் பொதுச் சமூகநிலை மன்னராட்சியின் கீழ் அடங்கிற்று. ஆயினும் மன்னனே அனைத்து ஊர்களையும் செங்கோலாட்சி செய்ய முடியாத நிலையில் அன்றைய கிராமப்புற அமைப்பு அமைந்திருந்தது. மக்கள் தங்கள் குறைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்ள உருவானவையே ஊர்களாகும். ஊரில் நடைபெறும் சிக்கலைத் தீர்த்து வைப்பதே இவற்றின் முதன்மைக் கடமையாகக் கருதப்பட்டது. ஊரில் உள்ள முதியோர் அனைவரும் ஒன்றாகக் கூடி மக்களுக்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்தனர். பண்டைச் சமூகத் தலைவன் தலைவியை நாடி நின்றமையைக் கலித்தொகைப் பாடல் காட்டுகிறது.*

**பல உறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை**
**மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என்செய்யும்**
**நினையுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே**
**சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை**
**நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என் செய்யும்**
**தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே**
**ஏழ்புணர் இன்இசை முரல்பவர்க்கு அல்லதை**
**பாழுளே பிறப்பினும் யாழ்க்கு அவைதாம் என்செய்யும்**
**குழுங்கால் நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே** **(கலி. 9)**

*அக்கால காதற் களவுநெறியை அச்சமூக முதியோர்கள் சமூக நிலையுரைத்து நின்றதனை இப்பாடல் சுட்டுகிறது.*

*தனிமனிதனுக்கு ஊர், நாடு போன்ற தலைமை தீமை செய்தால் அதனைப் பொதுச் சமூகம் தட்டிக்கேட்கும் நிலையை இலக்கியங்களில் காணலாம். சிலப்பதிகாரத்தில் கண்ணகி மதுரை நகரப் பெண்டிரையும் சான்றோர்களையும் விளித்துத் தனக்குற்ற கெடுதலுக்கு நீதிக் கேட்பதைச் சான்றாகக் கொள்ளலாம்.*

**பாய் திரை வேலிப் படுபொரு நீ அறிதி**
**காய்கதிர்ச் செல்வனே கள்வனோ என்கணவன்**
**கள்வனோ வல்லன் கருங்கயற் கண் மாதராய்**
**ஒள் எரி உண்ணும் இவ்ஊர் என்ற ஒருகுரல் (சிலம்பு. 18:50-53)**

*ஊர் என்பது உலகு என்பதும் ஊரிலுள்ள செல்வந்தர் அனுபவமுடையார், செல்வாக்குடையோர், அறிஞர் போன்றோரைக் குறிக்கின்றன. கிராமம் என்பதே இந்தியாவில் ஆட்சி நிர்வாகத்தின் அடிப்படைப் பகுதி என்பர். பொதுவாகக் கிராமம் தன் செயல்பாடுகளைத் தானே கவனித்துக் கொண்டது. ஊர் என்பதற்கு மக்கள் வசிக்கும் எல்லைகள் வரையறுக்கப்பட்ட இடம் என அகராதி நூல் விளக்கம் தருகிறது. ஊர் என்பது சேரியைவிடப் பெரிது என்பதை*

**ஊஉர் அலர் எழ சேரி கல்லென**
**ஆனாது அலைக்கும் அறன்இல் அன்னை (குறு. 262)**

*எனவரும் அடிகளால் அறியலாம். ஊரில் அனைவரும் கூடுகின்ற இடம் மரத்தடி நிழலாகும். பொதியில் மன்றம், ஊர், அவை என அவ்விடத்தைக் குறித்தனர். பொது என்ற சொல் 'இல்' என்ற சொல்லும் சேர்ந்து 'பொதியில்' என்றும், பொதுவான 'வீடு' என்றும் அதற்குப் பொருள் தருவர்.*

*இத்தகைய பொதியில் ஒன்றனையே மதுரைக்காஞ்சி குறிக்கிறது.*

**அவையிருந்த பெரும் பொதியில் மதுரை (மதுரை. 61)**

*சில பொதியில்கள் ஊரின் முன்பகுதியில் அமைந்திருந்தன.*

**முன்னூர்ப் பொதியில் சேர்ந்த மென்னடை (புறம். 390)**

இதனைப் புறப்பாட்டு வரியாலும் அறியலாம். மன்றம் என்பது ஊரவை கூடுகின்ற இடத்தைக் குறித்தது. இந்த அவையங்களுக்குச் சிறந்த முறையில் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கத் தேர்தல் நடைபெற்றது.

**கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்**

**பொறி கண்டு அழிக்கும் ஆவண மாக்களின்** (அகம். **77:8-9**)

இச்செயல் மிகச் சிறந்த ஓர் ஊரின் சமூக அமைப்பையே காட்டுகின்றது.

சங்க காலக் கிராமச் சமூகத்தின் பொதுத் தன்மைகளில் குறிப்பிடத்தக்கன, புகழுக்கு விரும்புதலும், பழிக்கு நாணுதலும் ஆகும். உலகம் நிலைத்திருப்பதன் காரணம் இத்தகைய பண்பாளர், சான்றோர் வாழ்வதேயாகும்.

சங்கத் தலைவன்-தலைவியர் பாத்திரங்கள் அன்பின் பிறப்பிடமாக அடையாளப்படுத்தப்பட்டன. குறிஞ்சிப்பாட்டில் தலைவனுடன் ஏனை உலகத்தில் சேர்வது தமக்கும் உண்டெனக் கூறப்பட்டதை அறியலாம்.

**ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கு என**

**மான் அமர் நோக்கம் கலங்கிக் கையற்று** (குறிஞ்சி. **24-25**)

தலைவி இவ்வாறு கூறுவதிலிருந்து அக்காலத்தில் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்தமையை உணரலாம். அன்றைய மக்கள் நல்லனவற்றை நாடுதலும் உயர்ந்த நோக்கத்தைப் பெறுதலும் தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர் என்பதையும் பெறலாம். சங்க கால சமூகத்தின் உருவாக்கத்தையும் அவற்றின் வளர்ச்சி நிலையையும் சங்கப் படைப்புகள்வழியும், சமூகக் கட்டமைப்பு வழியேயும் உணரமுடிகிறது.

**தொகுப்புரை**

- சங்க இலக்கியம் என்பது தமிழரின் வாழ்வினை எடுத்துக் காட்டும் அரிய பதிவாக விளங்குகின்றன. தாம் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் வழி உருவாகிய உணர்ச்சிப் பாடல்களே சங்க இலக்கியமாகும்.

- பல்வேறு காலப் பரிணாம வளர்ச்சி பற்றியும் விளக்குவது சமூகம் ஆகும். மனிதன் தோன்றிய காலம் முதல் சமூக வாழ்க்கையே மேற்கொண்டிருந்தான் என்பதையும் பழங்காலத்தில் வில்லும் அம்பும் ஆயுதமாகப் பயன்பட்டதையும், பிறகு காட்டில் விலங்கின் இறைச்சியை வாடிக்கையான உணவாக மேற்கொண்டதனையும் அவற்றை ஒன்றுகூடி உண்ணும் நிலை ஒரு தனிச்சிறப்பாகவும் கருதப்பட்டமையைச் சங்கநூல் வாயிலாக அறியலாம்.
- பண்டைக்காலத்தில் ஏர் மட்டுமல்லாது மண்வெட்டி போன்ற கருவிகளும் பயன்படுத்தப்பட்டிருந்தன என்பதனையும் தானியங்களை விளைவித்து உண்ணும் சமூகத்தில் வேளாண்மை ஓர் உயரிய கூட்டுத்தொழிலாக இருந்தது என்பதையும் பெறமுடிகிறது.
- தச்சர், குயவர், கல்தச்சர் போன்றோர் உருவானமையால் உற்பத்தி நிலைகளில் சேமித்து வைக்கும் சமூகமாகச் சங்க காலம் மாறியிருந்தமையை உணரலாம்.
- சங்க காலத்தில் எல்லைகள் பரந்துவிரிந்த சில அமைப்புகளைக் கொண்டு விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.
- சங்க இலக்கியம், தமிழக எல்லைகளை வரையறுத்த பாங்கை பாடல்கள் கொண்டு மதிப்பிட முடிகிறது.
- மனித சமுதாயங்களிடையே இணக்கமான உறவை ஏற்படுத்துவன குடும்ப உறவுமுறை, சாதி, மதம், கல்வி, சட்டம் என்பதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.
- சமூகம் தோன்றலும், வளர்தலும், அழிதலும் ஆகிய இச்செயல்கள் நாகரிகத்தின் வளர்ச்சி வரலாற்றில் நிகழ்ந்து கொண்டே உள்ளமையைச் சங்க இலக்கியச் சமூகக் கட்டமைப்புத் தெளிவு படுத்துகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. சோ.ந.கந்தசாமி, **தமிழிலக்கியச் செல்வம்,** தொகுதி-1, ப. 38.
2. New Webster's Dictionary of English Language, p. 921.
3. **கலைக்களஞ்சியம்,** தொகுதி-10, ப. 240.
4. எர்னஸ்ட் பார்க்கர் மோ (மூ.நூ.), வள்ளுவன் கிளாரன்ஸ் (மொ.பெ.), **சமூக அரசியல் கொள்கையின் அடிப்படைகள்**, ப. 341.
5. எங்கெல்ஸ் (மூ.நூ.), நா.தர்மராஜன் (மொ.பெ.), **குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்**, ப. 37.
6. மேலது, ப. 38.
7. கி.ர.அனுமந்தன், **பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு**, ப.35.
8. நா.வானமாமலை, **மார்க்சிய சமூகவியல் கொள்கை வரலாறு**, ப. 23.
9. கி.ர.அனுமந்தன், **பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு**, ப. 35.
10. **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி எட்டு, ப. 618.
11. மேலது, ப. 519.
12. மேலது, ப. 624.
13. மேலது, ப. 627.
14. எங்கெல்ஸ் (மூ.நூ.), நா.தர்மராஜன் (மொ.பெ.), **குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்**, ப. 331.
15. **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி எட்டு, ப.626.
16. மேலது, ப. 627.
17. **MacMillan Student Encyclopaedia of Sociology**, p. 367.
18. பல்கலைக்கழகத்தார், **சமூகவியல் கொள்கைகள்**, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ப. 89.
19. கா.சுப்பிரமணியன், **சங்ககாலச் சமுதாயம்**, ப. 50.
20. பல்கலைக்கழகத்தார், **சமூகவியல் கொள்கைகள்**, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ப. 89.
21. **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி எட்டு, ப. 514.
22. **Encyclopaedia Britannica**, Vol. 5, p. 54.
23. எங்கெல்ஸ், **டூரிங்கிற்கு மறுப்பு**, பக். 161-162.
24. **வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி எட்டு, ப. 516.

25. *ந.சுப்பிரமணியன்,* **சங்ககால வாழ்வியல்**, *ப. 347.*

26. John M.Shepherd, **Sociology**, p. 58.

27. **கலைக்களஞ்சியம்**, *தொகுதி-6, ப. 420.*

28. *கா.அப்பாத்துரைப் பிள்ளை,* **சங்க இலக்கிய மாண்பு**, *ப.26.*

29. *நக்கீரர் (உரை.),* **இறையனார் களவியலுரை**, *பக். 5-6.*

30. S.Krishnaswamy Iyengar, **Some Contribution of South India to Indian Culture**, p. 15.

31. K.Nilakanda Sastri, **A History of South India**, p. 34.

32. *ந.சுப்பிரமணியம்,* **சங்ககால வாழ்வியல்**, *ப. 34.*

33. *ரா.ராகவய்யங்கார்,* **தமிழ் வரலாறு**, *பக். 51-52.*

34. *மா.இராசமாணிக்கனார்,* **தமிழ்மொழி இலக்கிய வரலாறு**, *ப. 43.*

35. *ஆ.வேலுப்பிள்ளை,* **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்**, *ப. 13.*

36. *செந்துறைமுத்து,* **சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள்**, *ப. 3.*

37. **வாழ்வியற் களஞ்சியம்**, *தொகுதி-2, ப. 141.*

38. *வி.பொ.பழனிவேலனார்,* **பண்டைத் தமிழர் வாழ்வியல் வரலாறு**, *ப. 11.*

39. *கோசாம்பி (மூ.நூ.), எஸ்.ஆர்.என்.சத்யா (மொ.பெ.),* **பண்டைய இந்தியா-அதன் பண்பாடும் நாகரிகமும்**, *ப.144.*

# இயல் - 2

## சங்க இலக்கியத்தில் போக்குவரத்துப் பதிவுகள்

*பழங்காலத்தில் மனிதர் வாழ்ந்த பகுதியை அறிவதற்குச் சங்க இலக்கியங்கள் மிகவும் பயன்படுகின்றன. நிலத்தின் இயற்கையமைப்புக்குத் தக்கபடி அக்காலத்து மக்கள் வாழ்ந்து ஐந்துவிதமாக அமைந்திருந்தது. குறிஞ்சி நிலம், முல்லை நிலம், நெய்தல் நிலம், பாலை நிலம் என்னும் நிலப்பிரிவின்படி அவர்களுடைய வாழ்க்கையும் ஐவகையாக இருந்தது. இந்நில மக்களின் வாழ்க்கை நெறி, போக்குவரத்திற்குத் தொடக்கம் செய்த படிநிலைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.*

*சங்க காலம் கி.பி. 250க்கு முற்பட்ட காலம் ஆகும். அக்காலத்துத் தமிழர் வாழ்க்கைக்கும் இக்காலத்துத் தமிழர் வாழ்க்கைக்கும் மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. இப்போதுள்ள நாகரிகம் அக்காலத்தில் இல்லை. அக்காலத்தில் வாழ்ந்த இடத்துக்கும் சூழ்நிலைக்கும் தக்கபடி மனித நாகரிகமும் வாழ்க்கையும் உயர்ந்தும் தாழ்ந்தும் இருந்தன.*

**மனித வாழ்விடங்கள்**

*மேற்குத் தொடர்ச்சி மலைகளும் கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் தமிழ்நாட்டில் அமைந்துள்ளன. இத்தகைய மலைகளின் மேலும் மலைச்சாரல்களிலும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். மலைகளுக்குக் கீழே இருந்த காடுகளும், காடுசார்ந்த இடங்களும் முல்லைநிலம் என்று பெயர் பெற்றன. ஆறுகள் பாய்கிறதும் அல்லது ஏரி குளங்கள் உள்ளதுமான சமவெளிகள் மருதம் என்று பெயர் பெற்றன. கடற்கரையோரமாக இருந்த நிலங்கள் நெய்தல் நிலம் என்று பெயர்பெற்றன. கடற்கரையான நெய்தல் நிலத்தில் வசித்தவர் வாழ்க்கை துயரம்மிகுந்து இருந்தது. அவர்கள் நாள்தோறும் கடலில் நெடுந்தொலைவு சென்று மீன்பிடித்து வாழ்க்கையை நடத்தினர். இந்த நால்வகையான இயற்கை நிலம் அல்லாத வறண்ட பரப்பு,*

*பாலைநிலம் என்று பெயர்பெற்றது. இங்கு இயற்கையாக மக்கள் வாழவில்லை. அவர்களுடைய வாழ்க்கை விலங்கின வாழ்க்கை போன்று இருந்தது. இவ்வாறு இயற்கையாக அமைந்த வெவ்வேறு சூழ்நிலைகளில் வசித்த அக்காலத்துத் தமிழர் மக்களுடைய வாழ்க்கை வெவ்வேறு வகையாக இருந்தது. அவர்களுடைய தொழிலும் உணவும் உடையும் பண்பாடும் வெவ்வேறு விதமாக இருந்தன.*[1]

**நிலப்பாகுபாட்டில் மக்கள் பிரிவுகள்**

*பழந்தமிழகத்தில் காணப்பட்ட ஐவகை நிலப் பாகுபாடுகளுக்கேற்ப மக்கள் பிரிவுகள் இருந்தன. இந்நிலப்பகுதிகளில் பல்வேறு நாகரிக நிலைகளில் வாழ்ந்த மக்கள் பிரிவுகளைக் காணமுடிகிறது. "முதன்முதலில் மக்கள் வாழ்ந்த இடம் மலையுச்சியே ஆகும். இந்நிலப்பகுதிதான் மக்கள் விலங்குகளோடு விலங்காக வாழ்ந்து நாளடைவில் விலங்கு வாழ்வினின்றும் வேறுபட்டு நாகரிக வாழ்வைத் தொடங்கிய இடமாகக் கூறப்படுகிறது."*[2]

*தொடக்கக் காலத்தில் உணவைத் தேடும் நிலையில் வாழ்ந்த மக்களுக்குத் தேவையான காய்கள், கனிகள், கிழங்குகள் முதலான பொருள்களும் வேட்டைக்குரிய உயிரினங்களும் மலைப்பகுதிகளில் எளிதாகக் கிடைத்ததால் முதலில் குறிஞ்சி நிலத்தில் வாழத் தொடங்கினர். மலைப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் நாகரிகக் குறைவான நிலையிலும் மருதநிலப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் பண்பாட்டு முதிர்ச்சியடைந்த நிலையிலும் இருந்துள்ளனர். பி.டி.சீனிவாச ஐயங்கார், வரலாற்று முறையில் படிப்படியாக நாகரிகம் அடைந்திருந்த வளர்ச்சி நிலைகளைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வரிசைப்படுத்திக் காட்டுமிராண்டிகளாய் மலைப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் படிப்படியாக நாகரிகத்தில் வளர்ச்சியடைந்து செழிப்பான மருதநிலப் பகுதிகளில் நாகரிக நிலையில் வாழ்ந்தனர் என்று கூறுகின்றார்.*[3] *இக்காலத்தில் குறவர்கள், இடையர்கள், மீனவர்கள், எயினர்கள், உழவர்கள் ஆகியோர் அருகருகே வாழ்வது போன்று அக்காலத்திலும் வாழ்ந்தனர் என்று ந.சுப்பிரமணியம் குறிப்பிடுகின்றார்.*[4]

*திராவிடத்திற்கு முற்பட்ட தொன்மையான தமிழ் மக்கள் குன்றுகளிலிருந்தும் காடுகளிலிருந்தும் வளமான சமவெளிப் பகுதிகளுக்குச் சென்று வரலாற்று அடிப்படையில் இடப்பெயர்ச்சியை மேற்கொண்டனர். அல்லது புதிய கற்கால வேடர் நிலையிலிருந்து தொடங்கி இடைப்பட்ட ஆட்டுமந்தை மேய்ப்பாளர் நிலையைக் கடந்து நிலையான வாழ்க்கையை உடைய உழவர், மீன்பிடிப்பவர் நிலைக்கு வந்த வளர்ச்சியை இவ்வைந்து நிலத்திலுள்ள மக்கள் பிரிவுகள் வெளிப்படுத்துகின்றன.*[5]

*ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த மக்களுக்கு அவர்கள் வாழ்ந்த நிலத்தையும், செய்த தொழிலையும் வைத்துப் பெயர்கள் கூறப்படுவதை*

**பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய**
**திணை தொறும் மரீஇய திணை நிலைப் பெயரே**

**(தொல். பொருள். அகத். 2)**

*என்பதால் அறியமுடிகிறது. அந்தந்த நிலங்களில் வாழ்ந்த மக்களுக்கு வழங்கப்பட்ட பெயர்கள், அவர்கள் செய்த தொழில்கள் போன்றவற்றின் அடிப்படையில் பல்வேறு மக்கள் பிரிவுகளை அறியமுடிகிறது.*

**குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கை**

*குறிஞ்சி நில மலைப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் புனவன், கானவர், வேட்டுவர், குறவர், குன்றவர், வேட்டுவித்தியர், குறத்தி என்று குறிக்கப்பட்டனர். குறிஞ்சிநிலத் தலைவனை வெற்பன், பொருப்பன், சிலம்பன், நாடன் என்றும் தலைவியைக் கொடிச்சி என்றும் வழங்கினர். மலைப்பகுதிகளில் வாழ்ந்த இம்மக்கள் மலை வாழ்க்கைக்கேற்ற திண்ணிய உடல் வலிமையைப் பெற்றிருந்தனர். எனவே இவர்கள் 'மறம் பூண் வாழ்க்கையர்', 'வாட்குடிகள்' என்று சுட்டப்படுகின்றனர். குறிஞ்சி நிலம் மலைப்பகுதியாக உள்ளதால் விலங்குகள் உலவுகின்ற இயற்கையமைப்பைக் கொண்டது. இந்நில மக்கள் விலங்குகளுக்கிடையே அச்சம் தரக்கூடிய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். எனவே விலங்குகளை எதிர்த்துப் போராட வேண்டிய நிலையில் வலிமையுள்ளவர்களாக இருந்தனர். 'கான் உறை வாழ்க்கை' உடையவர்களாகிய இம்மக்கள் வில்லாற்றலில்*

*சிறந்தவர்களாக இருந்தனர். விற்பயிற்சி பெறுவதால் தோள் வலிமையும் பெற்றிருந்தனர்.*

**கொடுந்தொழில் வல்வில் கொலை இய கானவர் (திருமுருகு. 194)**

*இனக்குழு வாழ்க்கையை மேற்கொண்ட இந்நில மக்களின் முதன்மைத் தொழில் வேட்டையாடுதல், தினை பயிரிடுதல் ஆகும். தினைக்காவல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், பசுக்களைக் கவர்தல் போன்ற பிற தொழில்களையும் செய்தனர். விலங்குகள் வளர்த்தல், பயிரிடுதல் போன்றவற்றைவிட வேட்டைத் தொழில் மிகப் பழமையானதாகும் என்று வேட்டைத் தொழிலின் பழமைச் சிறப்புப் பற்றிக் களஞ்சியம் கூறுகின்றது.[6] பண்டைய மக்கள் முதன்முதலாக வேட்டையாடுதலையே மேற்கொண்டனர் என்று மானிடவியலாளரும் கூறுகின்றனர்.[7] வேட்டைத் தொழில் பழமையானதாக இருந்திருப்பதற்குக் காரணங்கள் உள்ளன. ஒரு தொழிலை நிலத்தின் அமைப்பு, மக்களின் நாகரிக நிலை, அறிவு முதிர்ச்சி, வாழ்க்கைத் தேவை, திறமை போன்றவைதான் உருவாக்குகின்றன. இன்றும் வேட்டையாடி உணவு சேகரித்து வாழும் பல்வேறு மக்களிடம் இனக்குழு அமைப்பு நிலவுகிறது. இந்நில மக்கள் வேட்டையாடுவதையும் உணவு சேகரிப்பதையும் வாழ்க்கைப் பொருளாதாரமாகக் கொண்டிருந்தனர். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த வேட்டுவர் என்ற ஒரு பிரிவினர் உணவுத் தேவைக்காக வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டிருந்தனர்.*

*மலைப்பகுதிகளில் வாழ்ந்த குறவர் இனத்தவர் வேட்டைத் தொழிலுடன் பயிர்ச் சாகுபடியைச் செய்தனர். எனவே இவர்கள் உணவு உற்பத்தியாளராக இருந்தனர். பழங்காலத்தின் இறுதிப் பகுதியில் வாழ்ந்த இம்மக்கள் பிரிவினர் கால்நடை வளர்ப்பையும், பயிர்த்தொழிலையும் மேற்கொண்டதாகத் தெரிகிறது. "இனக்குழு வாழ்க்கையை மேற்கொண்ட மலைவாழ் மக்களான கானவர் காலப்போக்கில் வேட்டுவர், குறவர் என்ற இரு பிரிவுகளாக மாறினர்."[8] வேட்டுவரும் குறவரும் தனித்தனிப் பிரிவினர் என்பதை*

**கோடு துவையாக் கோள் வாய் நாயொடு**
**காடுதேர் நசை இய வயமான் வேட்டு**
**வயவர்மகளிர் என்றி ஆயின்**
**குறவர் மகளிரேம் குன்றுகெழு கொடிச்சியே (நற். 276)**

*என்ற பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன. குறவர் இனத் தலைவியான கொடிச்சி, நாயின் துணையோடு வேட்டைத் தொழிலில் ஈடுபடும் வேட்டுவர் இனத்தவள் அல்லள் எனத் தெளிவாகிறது. இவ்வின மக்கள் வேட்டுவரைவிட உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டனர். குறிஞ்சி நில மலைவாழ் மக்களான வேட்டுவர் பழங்கற்காலப் பண்பாட்டு நிலையிலும் வாழ்ந்துள்ளனர்.*

**குறிஞ்சி நில மக்களின் தொழில்**

*குறிஞ்சி நிலத்தின் மக்கள் பருவமழையில் தினையையும் ஐவன நெல்லையும் அவரை போன்ற பருப்பு வகைகளையும் பயிரிடுவர்.[9] சிற்சில இடங்களில் வாழையையும் பயிரிட்டனர்.*

**இருங்கல் அடுக்கத் தென்னையர் உழுத**
**கரும்பெனக் கவினிய பெருங்குரல் ஏனல் (அகம். 302)**

**சிறுதினை கொய்த விருவி வெண்காற்**
**காய்த்த லவரை (ஐங். 286)**

**வாழை அம் சிலம்பில் துஞ்சும் நாடன் (அகம். 332)**

*குறிஞ்சி நில மக்கள் உயரமான மரங்களின் மீது ஏறித் தேனெடுப்பதும் சங்கப் படைப்புகளில் பதிவாகியுள்ளது.[10]*

**கலைகை யற்ற காண்பி னெடுவரை**
**நிலைபெய் திட்ட மால்பு நெறியாகப்**
**பெரும்பயன் றொகுத்த தேம்கொள் கொள்ளை (மலை. 315-317)**

**உணவு**

*பண்டைத் தமிழ் மக்கள் அவரவர் வாழ்ந்த நிலத்தில் விளையும் உணவுப் பொருள்களையும் இயற்கையாகக் கிடைக்கும் காய், கனி, கிழங்குகளையும் முதன்மையான உணவாகக் கொண்டனர். அந்நிலத்தின்*

*விலங்கினங்கள், பறவை இனங்கள் ஆகியவற்றின் உணவுக்கு ஏற்றவற்றையும் உணவாகக் கொண்டனர். பண்டமாற்றின் வழியே ஒரு நிலத்தில் மிகுதியாக விளைவதை அருகில் உள்ள நிலங்களில் மாற்றியும் உணவுப் பொருள்களைப் பெற்றுக் கொண்டனர். குறிஞ்சி நில மக்களுக்குத் தினையே முதன்மை உணவுப் பொருள். பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, கவலைக் கிழங்கு ஆகியனவும் தேனும் இயற்கை உணவுகளாகும்.*[11]

**தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறுவு மறுகவும்** (**பொருநர். 214-215**)

*பன்றி, முயல், மான் ஆகியவற்றின் இறைச்சியையும் உணவாகக் கொண்டனர்.*[12]

**இருள் துணிந்தன்ன ஏனம் காணின்**
**முளிகழை இழைந்த காடுபடு தீயின்**
**நளிபுகை கமழாது இறாயினர் மிசைந்து** (**மலை. 247-249**)

*என்பது கருதத்தக்கது.*

**உறையுள்**

*குறிஞ்சி நில மக்கள் சிறு குடிசைகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். அவற்றைக் குரம்பைகள் என்று வழங்கினர்.*

**குறிஇறைக் குரம்பைக் குறவர் மாக்கள்** (**புறம். 129**)

*குறிஞ்சி நிலத்து மக்கள் அந்நிலத்து மரங்களையே கொண்டு இருப்பிடத்தை அமைத்துக் கொண்டனர். குடிசைகளைத் தினைத்தாளில் வேய்ந்து கொண்டனர்.*

**இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை** (**குறிஞ்சி. 153**)

*மக்கள் தினைத்தாளியே குடிசைகளில் அமைத்ததனை குறிஞ்சி இன மக்கள் பழங்காலப் பண்பாட்டின் இறுதி நிலையிலும் வாழ்ந்ததாகக் கருத முடிகிறது.*

**முல்லை நில மக்கள் வாழ்க்கை**

முல்லை நிலப்பகுதி கால்நடைகளை மேய்ப்பதற்கான புல்வெளிகளைக் கொண்டுள்ளதால் கால்நடைகள் வளர்ப்பதை அடிப்படைத் தொழிலாகக் கொண்டு மக்கள் வாழ்ந்தனர். இவர்கள் கோவலர், ஆயர், இடையர், பொதுவர், அண்டர், கோவித்தியர், ஆய்ச்சியர், இடைச்சியர் என்று வழங்கப்பட்டனர். இந்நிலத்து மக்கள் பெயர்களாக முல்லையாளர், கோவலர், இடையர், பொதுவர், ஆன்வல்லோர், குடவர், பாலர், தொறுவர், கோவிந்தர், அண்டர், கோபாலர், ஆயர், அமுதர், ஆய்ச்சியர், தொறுவியர், பொதுவியர், குடத்தியர், இடைச்சியர் என்று நிகண்டு குறிப்பிடுகின்றது.[13]

இந்நிலத்து ஆயர் இன மக்களை pastor என்று களஞ்சியம் கூறுகின்றது.[14] கோவலர் என்பவர் ‘பசுக்களைக் காப்பவர்’ என்று பேரகராதி குறிப்பிடுகின்றது.[15] ஆவினம் ஆயரின் வாழ்விற்கு அடிப்படையாக அமைந்ததால் ‘ஆயர்’ எனப் பெயர் பெற்றனர். ‘ஆ’ என்னும் தமிழ்ச் சொல்லின் வடமொழி வடிவாகிய ‘கோ’ என்னும் சொல்லிலிருந்து கோவலர், கோபாலர், கோபதி என்னும் சொற்கள் தோன்றின. ஆயர் இன மக்களைக் குறிப்பிடுவதற்குத் தமிழில் ‘கோன்’ என்றும் சொல் உண்டு. கோலின் உதவியோடு கால்நடைகளைப் பராமரிக்கும் ஆயர் இன மக்கள் போன்று செங்கோலின் உதவியோடு அரசன் மக்களை நெறிப்படுத்துவதால் ஆயரும் அரசரும் ‘கோன்’ என்றே குறிப்பிடப்பட்டனர்.[16]

ஆயர் இன மக்கள் இடையர் எனவும் குறிக்கப்பட்டனர். குறிஞ்சி, மருதம் ஆகிய நிலப்பகுதிகளுக்கு இடைப்பட்ட பகுதியான முல்லையில் வாழ்ந்தமையால் இடையர் என்னும் பெயர் தோன்றியதாகக் கருதமுடிகிறது. ஆயரும் இடையரும் ஓரினக் குழுவின் இரு குலங்கள் என்ற கருத்து நிலவுகிறது.[17] இந்நிலம் காடு சார்ந்த பகுதியாக இருப்பதால் இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் ‘கானத்தண்டர்’ எனப்பட்டனர். இவர்களின் முதன்மைத் தொழில் ஆனிரைகள் மேய்த்தல் ஆகும். ஆயர் இன மக்கள் கால்நடை வளர்ப்பை மேற்கொண்டனர்.

**புல்லினத் தாயர்** **(கலி. 103:47)**

**நல்லினத் தாயர்** **(கலி. 113:10)**

**கோவினத் தாயர்** **(கலி. 103:37)**

*விதையர், முதையல் என்ற சொல்லாட்சிகள் ஆயர் இன மக்கள் கால்நடைகள் வளர்ப்போடு உழவுத் தொழிலும் செய்தனர் என்பதைப் புலப்படுத்துகின்றன. "உழவின் நிறைவு நிலை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களில் அமைகின்றது"[18] என உழவுத் தொழிலின் வளர்ச்சி நிலையைக் குறிப்பிடுவர். இவ்வினத்து மக்கள் உழவுத் தொழிலுக்கு முன்னோடியாக விளங்கினர்.*

*கோவலர் என்ற மக்கள் பிரிவினர் மேய்ச்சல் தொழிலை மேற்கொண்டனர். கால்நடைகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்லும்போது சீழ்க்கை ஒலியை எழுப்புவதால் வாய்மடிந்து காணப்படும். இதனால் 'மடிவாய்க் கோவலர்' எனப்பட்டனர். கையில் கோல் வைத்திருப்பதால் 'கொடுங்கோற் கோவலர்' எனக் குறிப்பிடப்பட்டனர். ஆயர் இன மகளிர் பால் பொருள்களைத் தயாரிப்பதிலும் அதை விற்பதிலும் பெரும் பங்காற்றினர். மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்ட இடையர் இன ஆண் மக்கள் நாடோடி வாழ்வை மேற்கொண்டிருந்தனர். உணவுதேடும் நாடோடி வாழ்விற்கும், உணவு உற்பத்தி செய்யும் மருதநிலப் பகுதிவாழ் மக்களின் நிலைத்த வாழ்விற்கும் இடைப்பட்டநிலையில் இடையர் இன மக்களின் வாழ்க்கை இருப்பதால், பற்றாக்குறைப் பொருளியல் நிலையில் இனக் குழுக்களாக வாழ்ந்துள்ளனர்.*

**முல்லை நில மக்களின் தொழில்**

*முல்லை நிலத்தில் ஆடு, மாடு, எருமைகள் வளர்க்கப்பெற்றன. இதுவே முதன்மையான தொழிலாகப் போற்றப் பெற்றது. பால், தயிர், மோர், வெண்ணெய், நெல் ஆகியவற்றை உற்பத்தி செய்து வந்தனர். முல்லை நில மக்கள் வரகு, உழுந்து முதலிய புன்செய் பயிர்களைப் பயிரிட்டனர்.*[19]

**முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு** **(அகம். 284:3)**

**இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்**
**அகல்இலை அகல வீசி (நற். 89:5-6)**

*நற்றிணைப் பாடலின்வழி இதனை அறியலாம்.*

**உணவு**

*முல்லைநில மக்கள் பாலுடன் கலந்த தினைச் சோற்றையும், அவரைப் பருப்புடன் கலந்த வரகுச் சோற்றையும் உணவாகக் கொண்டனர். பால்படு பொருள்களாகிய தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகியவை முல்லை நில மக்களின் உணவில் மிகுதியும் இடம்பெற்றிருந்தன. இறைச்சி கலந்த அரிசிச் சோற்றையும் முல்லை நில மக்கள் உண்டனர்.*

**பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவீர் (பெரும். 168)**

**குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றிப்**
**புகர் இணர் வேங்கை வீகண் டன்ன**
**அவரை வான் புழுக்கு அட்டி (பெரும். 193-195)**

**பகர்விரவு நெல்லின் பல அரி அன்ன**
**தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇ (மலை. 413-414)**

**உறையுள்**

*முல்லை நில மக்கள் மண்ணால் சுவர் எழுப்பி வரகுத்தாள் வேய்ந்த குரம்பையில் வாழ்ந்தனர். அம்மக்கள் வீட்டுச் சுவர்களில் கலப்பைகளைச் சார்த்தி வைத்திருப்பர்.*

**ஏனல் உழவர் வரகுமீது இட்ட**
**கான்மிகு குளவிய வன்புசேர் இருக்கை (பதிற்று. 30:22-23)**

**குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி**
**நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில் (பெரும். 188-189)**

*முல்லைநிலக் குரம்பைகளின் குறுகிய பந்தல் கால்களில் ஆடுகள் தின்பதற்கான தழைகள் தொங்கவிடப்பட்டிருக்கும். வாயிலின் பக்கத்தில்*

அடர்ந்த கொடிகள் வளர்ந்திருக்கும். கதவுகள் கயிற்றினால் இறுகக் கட்டப்பட்டிருக்கும். முல்லைநில மக்கள் கயிற்றால் பின்னப்பட்ட கட்டிலின் மேல் வைக்கோல் பரப்பி, அதன்மேல் ஆட்டுத்தோல் விரித்து உறங்குவர். வெள்ளாடுகளும் செம்மறியாடுகளும் முன்றிலில் கட்டப்-பட்டிருக்கும். அக்குரம்பையைச் சுற்றி இடுமுள் வேலி போடப்பட்டிருக்கும் என்று முல்லை நிலக் குரம்பையின் தோற்றம் விளக்கப்பெற்றுள்ளது.

**குளகுஅரை யாத்த குறுங்கால், குரம்பைச்**
**செற்றை வாயில், செறிகழிக் கதவின்**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**
**அதளோன் துஞ்சும் காப்பின் உதள**
**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்**
**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்** **(பெரும். 148-154)**

**மருதநில மக்களின் வாழ்க்கை நிலை**

மருதநிலம் வளமான பகுதியாக இருப்பதால் இந்நில மக்கள் நிலையான வாழ்வை மேற்கொண்டனர். மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் பிரிவினர் ஓரிடத்தில் நிலையாகத்தங்கி நாகரிகத்தை வளர்த்தனர்.[20] இந்நிலத்து மக்கள் நாகரிகத்தில் மேம்பட்டவர்களாகத் திகழ்ந்தனர். எனவே மருத நிலத்தில் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் நிலைபெற்று வந்தன.[21] அந்நிலத்தில் வாழ்ந்த மக்களை உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர், களமர், மள்ளர், வேளாளர் என்று குறித்தனர். இந்நிலத்து மக்கள் பெயர்களாக உழவர், கடைஞர், கம்பளர், களமர், கிளைஞர், தொழுவர், மள்ளர், வினைஞர், உழத்தியர், கடைசியர், ஆற்றுக் காலாட்டியர் எனச் சதுரகராதி கூறுகின்றது.[22] கடையர் என்பவர் கழனிகளில் வேலை செய்பவர்களாகச் சுட்டப்படுகின்றனர்.

உழவர்களை ஏரின் வாழ்நர், களமர் எனவும் வழங்கினர். இவர்கள் வயல்களில் உழவுத்தொழில் செய்வதால் ‘கழனி உழவர்’ எனப்பட்டனர். உழவர்கள் தங்களுடைய தொழிலில் சோம்பலில்லாதவர் என்பதை ‘மடியா

*வினைஞர்' என்று பெரும்பாணாற்றுப்படை சிறப்பித்துக் கூறுகின்றது. நீர் வளத்தினால் சிறப்புற்ற மருத நிலத்தில் உழுதுண்மாரும், உழுவித் துண்மாரும் என்ற பிரிவினர் இருந்தனர். நாகரிகத்தில் மேம்பட்டவர்களாகத் திகழ்ந்தனர். எனவே மருத நிலத்தில் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் நிலைபெற்று வந்தன.*

*'கருங்கை வினைஞர்' என்ற உழவர் இன மக்கள் வயல் வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். மள்ளர் என்ற மக்கள் பிரிவினர் போர்த் தொழில், உழவுத் தொழில் என்ற இரண்டையும் செய்தவர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர். உழுவித்துண்ணும் மக்கள் பிரிவினர் செல்வ நிலையில் நிலவுடைமை-யாளர்களாக இருந்தனர். இதனால் இவர்கள் கலைத் துறையிலும் இன்ப வாழ்விலும் ஈடுபட்டனர். சேமிப்பும் செல்வ வளமும், ஓய்வும் மிகுதியாக இருந்ததால் 'பரத்தமை' என்ற இனப்பிரிவு தோன்றக் காரணம் விளைந்தது.*[23]

**மருத நில மக்களின் தொழில்**

*மருத நிலத் தலைமக்களின் முதன்மையான தொழில் உழவுத் தொழிலாகும். செந்நெல்லும் வெண்ணெல்லும் விளைத்தனர். கரும்பும் வாழையும் பயிர் செய்தனர். உழவுக்கு எருதுகளையும் எருமைகளையும் பயன்படுத்தினர். நெல் விளைந்த மறுகாலில் உழுது பயறு வகைகளை விளைவித்தனர்.*

**வாழை மென்தோடு வார் புறுபு ஊக்கும்**
**நெல்விளை கழனி நேர்கண் செறுவின் (நற். 400)**

**கரும்பு அமல் கழனிய நாடுவளம் பொழிய (பதிற்று. 50:3)**

**மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்**
**பெருநற் பல்கூட்டு எருமை உழவ (நற். 60:1-2)**

**மறுகால் உழுத ஈரச் செறுவின் (நற். 210:2)**

**உணவு**

*செந்நெல்லரிசியும் வெண்ணெல்லரிசியும் மருதநில மக்களின் இன்றியமையா உணவுப் பொருளாகும். கரும்பின் சாற்றை விரும்பிக் குடிப்பர். மருதநில மக்கள் அரிசிச் சோற்றோடு பெட்டைக் கோழிப் பொரியலையும் சேர்த்து உண்பர்.*

**அவைப்பு மாண் அரிசி அமலைவெண் சோறு (சிறு. 194)**

**கரும்பின் தீம்சாறு விரும்பினிர் மிசைமின் (பெரும். 262)**

**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**
**மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவீர் (பெரும். 255-256)**

**உறையுள்**

*மருதநிலச் சிற்றூர்களில் வைக்கோலால் வேயப்பட்ட ஓலைக் குடிசைகள் இருந்தன.*

**புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில் (பெரும். 225)**

*என்பதால் மருதநில மக்களின் வாழ்க்கை முறையினை அறியமுடிகிறது.*

**நெய்தல் நில மக்கள் வாழ்க்கை**

*கடற்கரையை அடுத்த பெருமணற் பகுதியில் கடல் வளத்தை நம்பி வாழும் மக்கள் வாழ்ந்தனர். இந்நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் பரதவர், நுளையர், கடலர், திமிலர், வலைஞர், உமணர், பஃறியர், சாயர், கழியர், பரத்தியர், நுளைச்சியர், உமட்டியர் என வழங்கப்பட்டனர். இந்நிலத்தில் வாழும் தலைமக்கள் கொங்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பன் என்னும் பெயர்களால் குறிக்கப்பட்டனர். கடலுக்குப் 'பரவை' என்றும் பெயர் உண்டு. எனவே கடல் வாழ்நர், பரதவர் எனப்பட்டனர்.[24] பரதவர் என்ற பெயரே சங்க நூல்களில் பெரும்பான்மையாக வழங்கப்படுகிறது. கடற்கரையை ஒட்டிய பகுதிகளில் வாழ்ந்து வந்த நெய்தல் நிலத்து மக்கள் பரதவர், பட்டினவர் எனப்பட்டனர்.[25]*

**நெய்தல் நில மக்கள் தொழில்**

*நெய்தல் நிலம் மணல் நிலம் ஆகையால் இங்கே நெல், கேழ்வரகு முதலான தானியங்கள் விளையவில்லை. கட்டுமரங்களிலும் படகுகளிலும்*

*மீன்பிடித்து விற்று வந்தார்கள். பண்டமாற்று முறைகளும் நடைபெற்றன. கடற்கரையோரங்களில் உப்பளங்கள் இருந்தன. அந்த அளங்களில் கடல்நீரைப் பாய்ச்சி உப்பு உண்டாக்கினர். உப்பை நெல்லுக்கு மாற்றினர்.*

*இந்நிலத்து மக்களின் முதன்மைத் தொழில் மீன்பிடித்தல் மற்றும் மீனை உலர்த்துதல், உப்பு எடுத்தல் ஆகும். கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்த பரதவர்களில் ஒரு சிலர் முத்துக்குளிக்கும் தொழிலிலும், சங்கு எடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். மருத நிலத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கையைக் கொண்ட இந்நிலத்துப் பொதுமக்களின் ஒரு சாரார் உப்பு வணிகராக உள்நாடுகளிலும் மற்றொரு பிரிவினர் மீன்பிடிக்கும் தொழிலையும் செய்தனர். பரதவர்கள் கடலிலும் கழிகள் போன்ற நீர்நிலைகளிலும் மீன்களைப் பிடிப்பதால் 'மீன் வேட்டுவர்' எனப்பட்டனர்.*

*பரதவர்கள் சிலர் கப்பற்படை வீரர்களாக இருந்தனர். சிலர் ஒருசில பகுதிகளை ஆளுவதற்கு உரிமையும் பெற்றிருந்தனர். பாண்டிய மன்னர்கள் அவர்களுக்குப் போர்ப் பயிற்சி கொடுத்துத் தங்கள் படைகளில் வீரர்களாக வைத்திருந்தனர். பாண்டியருக்கும் பரதவருக்கும் நடந்த போர்கள் பற்றி மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.*

**செற்ற தெவ்வர் கலங்கத் தலைச் சென்று**
**அஞ்சுவரத் தட்கும் அணங்குடைத் துப்பின்**
**கோழ் ஊஉன்குறைக் கொழு வல்சி**
**புலவு வில் பொலிகூவை**
**ஒன்றுமொழி ஒலிஇருப்பின்**
**தென் பரதவர் போர் ஏறே** **(மதுரை. 139-144)**

*உப்பளத்தில் உப்புத் தயாரிப்பதில் ஈடுபட்ட பரதவர்களில் ஒரு பிரிவினர் அளவர் எனக் குறிப்பிடப்படுகின்றனர். உமணர் என்பவர் முழு நேர உப்பு வணிகராக இருந்தனர். இவ்வின மக்கள் நாடோடி நிலையில் வாழ்ந்ததாகத் தெரிகிறது.*

**பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

**சேரி விலைமாறு கூறலின் மனைய**

**விளியறி ஞமலி குரைப்ப வெரீஇய (அகம். 140:1-9)**

*கடல்சார்ந்த நிலப்பரப்பில் வாழ்ந்த நெய்தல் நிலத்து மக்கள் பிரிவினரின் வாழ்க்கை துன்பம் உடையதாகவும், அச்சம் நிறைந்ததாகவும் இருந்தது. கடற்கரையைச் சார்ந்த பட்டினங்களில் வாழ்ந்த மக்கள் செல்வச் செழிப்புடன் வாழ்ந்ததைச் சங்கநூற் பதிவுகள் குறிப்பிடுகின்றன. இந்நிலத்து மக்கள் கடல் வாணிகம் சிறப்பாக நடைபெற இன்றியமையாதவர்களாக இருந்துள்ளனர்.*

**. . . . . . பரதவர்**

**எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்**

**புண் உமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட (அகம். 210)**

**. . . . . திண் திமில்**

**எல்லுத் தொழில் மருத்த வல்வினைப் பரதவர் (அகம். 340:18-19)**

**வெண்கல் உப்பின் கொள்கை சாற்றி (அகம். 140:3)**

**உணவு**

*நெய்தல் நில மக்கள் மீன்களைச் சமைத்து உணவாகக் கொண்டனர். நெய்தல் நில மக்களுக்கு உணவுப் பொருள் விளைச்சல் குறைவு. அதனால் நெய்தல் நில விளைபொருள்களாகிய உப்பையும் மீனையும் விற்று தானியங்களைப் பெற்று உண்டனர். உழாது விளைத்த வெள்ளுப்பினை வெளியூர்களுக்குக் கொண்டு சென்று விற்று பண்டமாற்றாக நிறைய நெற் குவியலைப் பெற்று, படகுகளில் ஏற்றிக்கொண்டு வருவர். கடற்கரையில் விளையும் தென்னை, இளநீர், வாழைக் கனி, பனை நுங்கு, சேப்பங்கிழங்கு ஆகியவற்றையும் உணவாகக் கொண்டனர்.*

**கொழுமீன் கொள்பவர் (அகம். 100:3)**

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லோடு வந்த வல்வாய்ப் பஃறி (பட்டின. 129-130)**

**வீழ்இல் தாழைக் குழவித் தீம்நீர்**
**கவைமுலை இரும்பிடிக் கவுள்மருப்பு ஏய்க்கும்**
**குலைமுதிர் வாழைக் கூனிவெண் பழம்**
**திரள் அரைப் பெண்ணை, நுங்கொடு பிறவும்**
**தீம்பல் தாரம் முனையின் சேம்பின்** (**பெரும். 357-361**)

**உறையுள்**

*பனை மரங்களும் தாழைப் புதல்களும் சூழ்ந்த பகுதிகளில் நெய்தல் நில மக்கள் குடிசைகளை அமைத்துக் கொண்டனர். மீனவர் குடிசைகள், மீன்வலை முதலியவற்றை வைப்பதற்கேற்ற முறையில் நடுவில் இடைவெளி விட்டு வட்டமாக அமைக்கப்பட்டிருக்கும் நெய்தல் நிலப் பரதவர்களின் வீடுகள் புல்லாலும் வைக்கோலாலும் வேயப்பட்டவையாகும்.*

*மூங்கில் கோல்களை வரிசையாகச் சார்த்தி வஞ்சி, காஞ்சி, மரங்களின் கொம்புகளை இடையிடையே விரவிப் பொருத்தித் தாழை நாரினால் வரித்து, தருப்பைப் புல்லால் வேய்ந்த தாழ்வாரம் உள்ள குடிசைகளை அமைப்பர். தாழ்வாரத்தில் மீன் பெய்யும் பனையோலைப் பறி தொங்கும். தாழ்வாரத்தைத் தொடர்ந்து புன்னைமரப் பந்தலும், அதில் சுரைக் கொடிகள் படர்ந்தும் இருக்கும்.*

**முன்றிற் புல்வேய் குரம்பை** (**குறு. 235:5**)

**வேழம் நிரைத்து வெண்கோடு விரை இத்**
**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**
**குறியிறைக் குரம்பை, பறியுடை முன்றில்**
**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**
**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்** (**பெரும். 263-267**)

**பாலைநில மக்களின் வாழ்க்கை நிலை**

*வறண்டுபோன மலைப்பகுதிகள் மற்றும் காட்டுநிலங்களாகிய பாலை நிலத்தில் எயினர், மறவர், வேடர், மழவர், எயிற்றினர், மறத்தியர் போன்ற மக்கள் வாழ்ந்தனர். இந்நிலத் தலைமக்கள் காளை, விடலை, மீளி என்று*

சுட்டப்படுகின்றனர். அக்காலத்துத் தமிழர் வெவ்வேறு வகையான வாழ்க்கையைப் பாலையில் வாழ்ந்தார்கள். விரைவான போக்குவரத்துக் கருவிகளும் தந்தி அஞ்சல் வசதிகளும் இக்காலத்து வசதிகள் பலவும் அக்காலத்தில் இல்லை. அதனால் கல்வி, பொருளாதாரம், நாகரிகம் முதலியவை வளர்ச்சியடைய இயலாமல் போயின. இக்காலத்தில் எளிய மக்கள் பெறுகிற வசதிகளைக்கூடப் பெறமுடியாத சூழ்நிலை அக்காலத்தில் இருந்தது.

தமிழருடைய நாகரிகம் மருதநிலத்திலும் துறைமுகப் பட்டினங்-களிலும் வளர்த்தது என்றும் பட்டினங்களிலும் பட்டணங்களிலும்தான் அக்காலத்துத் தமிழரின் நாகரிகம், பண்பாடு, கலைகள் மேம்பட்டன என்றும் கருதுவர்.

சங்க இலக்கியங்களில் உணவு சேகரிக்கும் வாழ்க்கை நிலை, வேட்டையாடும் வாழ்க்கை நிலை, காடுகளை எரித்துப் பயிர் செய்யும் வாழ்க்கை நிலை, கால்நடை வளர்ப்பு நிலை, பயிர்த்தொழில் செய்யும் வாழ்க்கை நிலை ஆகியவற்றைப் பரவலாகக் காணமுடிகின்றது.

இக்காலத்தில் சிறுவிலையுள்ள பொருளுக்கும் மிகுவிலையுள்ள பொருளுக்கும் காசு பயன்படுகிறது. ஆனால் காசு (நாணயம்) ஆதிகாலத்தில் ஏற்படவில்லை. ஆதிகாலத்தின் பண்டமாற்றில் ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடான மற்றொரு பொருளைப் பெறுவது வழக்கமாயிற்று. பிறகு நாணயம் (காசு) வழங்கத் தலைப்பட்டது. சங்க காலத்திலேயே பண்ட மாற்றும் நாணயச் செலாவணியும் நடைபெற்றன.

**பண்டமாற்று முறை**

ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைக் கொள்வதே பண்டமாற்று முறையாகும். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைக் காசுகொடுத்து வாங்காமல் பண்டமாற்றுச் செய்துகொண்டனர். விலைமிகுந்த பொருள்களை மட்டும் காசு கொடுத்து

வாங்கினர். பெரும்பட்டினங்களிலும், நகரங்களிலும் காசு கொடுத்து வாங்கும் முறை இருந்தபோதிலும் பேரூரிலும் சிற்றூரிலும் பொதுவாகப் பண்டமாற்று முறையே வழக்கத்தில் இருந்தது.

உப்பு அனைத்து மக்களுக்கும் அடிப்படைப் பொருளாகையால் உப்பு வாணிகம் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. உப்புக்கு ஏற்ற அளவு நெல் என்பது பண்டாற்றின் அடிப்படை அளவாகக் கருதப்பட்டது.

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு (அகம். 140:7)**

விலை கூடுதலாகப் பொருள்களுக்குப் பொன்னும் வெள்ளிக்காசும் விலையாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. முல்லைநில ஆய்மகள் நெய்க்கும் மோருக்கும் பசும்பொன்னை விலையாக வாங்காமல், உயர்ந்த இளங்-கன்றுகளையே வாங்கி வருவாள் என்ற குறிப்பு இப்பாடலில் காணப்படுகிறது. இடையர் பாலைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியத்தை மாற்றிக் கொண்டதையும் அறியமுடிகிறது.

**பாலொடு வந்து கூழொடு பெயரும்**
**ஆடுடை இடைமகன் சென்னி (குறு. 221)**

பாலைக் கொடுத்து அதற்கு ஈடான அரிசி, கேழ்வரகு, தினை முதலானவற்றைப் பெற்றமையை உணரலாம். ஆயர் மகளிர் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய் காய்ச்சினர். தயிரையும் மோரையும் மாற்றித் தானியத்தைப் பெற்று உணவு சமைத்து உண்டதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.

**நள்ளிருள் விடியல் புள்ளெழப் போகிப்**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகிழ்**
**உறையமை தீம்தயிர் கலக்கி நுரைதெரிந்து**
**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ**
**நாள்மோர் மாறும் நன்மா மேனிச்**
**சிறுகுழை துயல்வரும் காதில் பணைத்தோள்**

**குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்**

**அளைவிலை உணவில் கிளையுடன் அருத்தி (பெரும். 155-163)**

*மோர் விற்று நெல் தானியங்களைப் பெற்றதனை உணரமுடிகிறது. இடைச்சியர் நெய்யைப் பண்டமாற்றுச் செய்யாமல் காசுக்கு விற்று அக்காசுகளைச் சேமித்து வைத்தனர். குறிப்பிட்ட தொகை காசு சேர்ந்தபோது அக்காசைக் கொடுத்துப் பசுவையும் எருமையையும் விலைக்கு வாங்கினர்.*

**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்**

**எருமை நல்லான் கருநாகு பெறூஉம்**

**மடிவாய்க் கோவலர் (பெரும். 164-166)**

*வேடன் தான் வேட்டையாடிக் கொண்டுவந்த மான் இறைச்சியை உழவனிடத்தில் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லை மாற்றிக் கொண்டதை அறியலாம். இடைச்சியர் உழவனுக்குத் தயிரைக் கொடுத்து நெல்லைப் பெற்றுக் கொண்டதனையும் பெறமுடிகிறது.*

**கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்**

**மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்**

**தயிர்கொடு வந்த தசுமபும் நிறைய**

**ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்**

**குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்**

**தென்னம் பொருப்பன் நன்னாடு (புறம். 33)**

*களத்தில் விளைந்த நெல்லை அளந்து கொடுத்துப் பெற்ற நாடு, பாண்டிய நாடாகும் என்பதனை இப்பாடலால் அறியலாம்.*

*பாணர் உள்நாட்டு நீர்நிலைகளில் ஆறு, ஏரி, குளங்களில் வலை வீசியும், தூண்டில் இட்டும் மீன்பிடித்தனர். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண்மகளிர் ஊரில் கொண்டு போய் பயிற்றுக்கும் தானியத்துக்கும் மாற்றினர்.*

**முள் எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**
**அகன்பெரு வட்டி நிறைய மனையோள்**
**அரிகாற் பெரும்பயறு நிறைக்கும் (ஐங். 47)**

*பாண்மகளிர் மீன்களைப் பிடித்து ஊரில் கொண்டு சென்று நெல்லிற்கு மாற்றியதனையும் அறியமுடிகிறது.*

**வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**
**வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்**
**யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் (ஐங். 48)**

**அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்**
**சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம் (ஐங். 49)**

*குறிஞ்சி நில மக்கள் தேன், கிழங்கு ஆகிய விளைபொருள்களைக் கொடுத்து மீனைப் பெற்றுக் கொண்டனர்.*

**தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யோடு நறவு மறுகவும் (பொருநர். 214:7-8)**

*மருதநில மக்கள் கரும்பும் அவலும் கொடுத்து மான் ஊனையும் கள்ளையும் பெற்றுக் கொண்டனர்.*

**தீங்கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான்குறையொடு மதுமறுகவும் (பொருநர். 216-217)**

*ஊர்த் தெருக்களில் உப்புவிற்ற உமணப் பெண்டிர் உப்பை நெல்லுக்கு மாற்றினர்.*

**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்**
**சேரிவிலை மாறு கூறதலின் (அகம். 140)**

**உமணர் தந்த உப்பு நொடை நெல்லின் (நற். 254:6)**

**நெல்லும் உப்பும் நேரே ஊரில்**

**கொள்ளீரோவெனச் சேரிதொறும் நுவலும் (அகம். 390)**

*உப்பை நெல்லுக்கு மாற்றிய உப்பு வாணிகர் தமக்குக் கிடைத்த நெல்லை சிறு படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளில் ஓட்டிச் சென்றனர்.*

**குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு**

**வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லொடு வந்த வல்லாய்ப் பஃறி (பட்டின. 28-30)**

*கடற்கரையோரத்தில் நெய்தல் நிலத்தில் வசித்த பரதவர் கடலிலே சென்று சுறா, இறால் முதலான மீன்களைப் பிடித்து வந்தனர். அவர்கள் கொண்டுவந்த மீனைப் பரதவ மகளிர் எளிதில் தானியத்திற்கு மாற்றினர்.*

**இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி (நற். 239:3)**

**பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்**

**தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே (அகம். 340:14-17)**

**உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு (அகம். 60:3)**

*பரதவ மகளிர் கடல்மீனைத் திருவிழா நடக்கிற ஊர்களில் கொண்டுபோய் எளிதில் விற்பனை செய்தனர்.*

**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**

**தழையணி அல்குல் செல்வத் தங்கையர்**

**விழவ யர் மறுகின் விலையெனப் பகரும்**

**கானலம் சிறுகுடி (அகம். 320)**

*பண்டமாற்றினால் கிடைத்த நெல்லை அம்பியில் (படகு) ஏற்றிக்கொண்டு கழிகளின் வழியே வந்ததைப் பரணர் குறிப்பிடுகிறார்.*

**மீன் தொடுத்து நெல் குவைஇ**

**மீசை அம்பியின் மனை மறுக்குந்து (புறம். 343:1-2)**

*வேடர்கள் ஒன்றுகூடி காட்டில் வேட்டையாடிக் கொன்ற யானையின் தந்தங்களை மதுபானக்கடையில் கொண்டு போய்க் கொடுத்து மதுபானம் அருந்தினர்.*

**வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ**
**அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்**
**அண்ணல் யானை வெண்கோடு கொண்டு**
**நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும் (அகம். 61:7-10)**

*வேடர் தேனையும் கிழங்கையும் கொண்டு வந்து மதுபானக் கடையில் மாற்றி அதற்கு மாறாக வறுத்த மீன் இறைச்சியையும் மதுவையும் வாங்கி உண்பதையும், உழவர் கரும்பையும் அவலையும் கொண்டு வந்து கொடுத்து அதற்கு மாறாக வறுத்த மான் இறைச்சியையும் மதுவையும் பெற்று உண்டு மகிழ்வதையும் முடத்தாமக்கண்ணியார் குறிக்கிறார்.*

**தேனெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீனெய்யொடு நறுவு மறுகவும்**
**தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்**
**மான்குறையோடு மது மறுகவும் (பொருநர். 214-217)**

*கடற்கரையோரங்களில் வாழ்ந்த பரதவர் கொற்கைக் கடலில் மீன் பிடித்தபோது முத்துச்சிப்பிகளும் கிடைத்தன. அந்தச் சிப்பிகளை அவர்கள் கள்ளுக்கடையில் மாற்றிக் கள் குடித்தனர்.*

**பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி**
**நாரரி நறவின் மகிழ்தொடைக் கூட்டும்**
**பேரிசைக் கொற்கை (அகம். 296)**

*துறைமுகங்களிலும் பண்டமாற்று முறை நடைபெற்றதனை இப்பாடலால் அறியலாம். எயினர் மது அருந்துவதற்காக மது விற்கும் இடத்துக்கு வந்து எந்தப் பொருளும் கிடைக்காமையால் காட்டில் வேட்டையாடி யானைத் தந்தங்களைக் கொண்டு வந்து கொடுத்து அதற்கு ஈடாக கள்ளைக் கடனாக வேண்டினர்.*

**வரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை**
**அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்**
**மகிழ்நொடை பெறாஅர் ஆகி நனைகவுள்**
**கான யானை வெண்கோடு சுட்டி**
**மன்றோடு புதல்வன் புன்தலை நீவும்**
**அருமுனைப் பாக்கம்** (அகம். **245**)

*கொல்லிமலை மேல் வாழ்ந்த சிறுகுடி மக்கள் தம் சுற்றத்துடன் உள்ளவர்கள் பசியினால் தங்களிடமிருந்த யானைத் தந்தங்களைத் தானியத்துக்கு மாற்றிச் சோறு சமைத்து உண்டனர்.*

**காந்தளம் சிலம்பில் சிறுகுடி பசித்தெனக்**
**கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத் துண்ணும்**
**வல்வில் ஓரி கொல்லிக் குடவரை** (குறு. **100**)

*நெய்தல் நில மக்கள் மீனை விற்று நெல் பெற்றனர். பாண் மகளின் வரால் மீனுக்கு இணையாக மருதநிலப் பெண் யாண்டுகழி நெல்லைக் கொடுப்பாள். நெய்தல் நில மக்கள் கெடிற்கு மீனைக் கொடுத்துப் பச்சைப் பயற்றைப் பெறுவதுமுண்டு.*

**மீன் நொடுத்து நெல்குவைஇ** (புறம். **343:1**)

**வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்**
**யாண்டு கழி வெண்ணெல் நிறைக்கும்** (ஐங். **48:2-3**)

**அகன்பெரு வட்டி நிறைய மனையோள்**
**அரிகாற் பெரும் பயறு நிறைக்கும்** (ஐங். **47:2-3**)

*நெய்தல் நில மக்கள் பண்டமாற்று முறைகள் நிகழ்த்தியமையை இச்சான்றுகளால் அறியலாம்.*

**நாணயப் பண்டமாற்று முறை**

*பண்டமாற்று வாணிபம் நடந்த காலத்தில் செம்பு, வெள்ளி, பொன் காசுகளும் வழங்கி வந்தன. அந்தக் காசுகள் விலையுயர்ந்த பொருள்களை வாங்குவதற்கும் பயன்படுத்தப்பட்டன. காசுகள் நெல்லிக்காயின் வடிவம்*

*போல உருண்டு சிறிது தட்டையாக இருந்தன. இதனை மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் பாலைநிலத்து வழியிலே இருந்த நெல்லி மரங்களிலிருந்து உதிர்ந்துள்ள நெல்லிக்காய்கள், பொற்காசுகள் உதிர்ந்து கிடப்பன போலக் காணப்பட்டமைக்கு உவமைப்படுத்தியுள்ளார்.*

**புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்க்**
**கல்லதர் மருங்கில் கடுவளி உதிர்ப்பப்**
**பொலஞ்செய் காசின் பொற்பத்தா அம் அத்தம் (அகம். 363:6-8)**

*உகா மரத்தின் பழம்போல மஞ்சள் நிறமாகப் பொற்காசுகள் இருந்தை அகநானூற்றுப் பாடலின்வழி அறியலாம்.*

**குயிற்கண் அன்ன குரூஉக் காய் முற்றி**
**மணிக்கா சன்ன மானிற இருங்கனி**
**உகா அமென்சினை உதிர்வன கழியும்**
**வேனில் செஞ்சுரம் (அகம். 293:6-9)**

**ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த**
**பொலஞ்செய் பல்காசு அணிந்த அல்குல் (புறம். 353:1-2)**

*காசுகளை மாலையாகச் செய்து அரையில் அணிந்திருந்த பெண் ஒருத்தியை,*

**அம்மா மேனி ஐதமை நுசுப்பின்**
**பல்காசு நிரைத்த கோடேந் தல்குல்**
**மெல்லியல் குறுமகள் (அகம். 75:18-20)**

*என்றும், காசுமாலை அணிந்த மற்றொருத்தியை*

**பொலம் பசு பாண்டிற் காசு நிறை அல்குல்**
**இலங்குவளை மென்தோள் (ஐங். 31:310)**

*என்றும் புலவர் குறிப்பர்.*

*பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குச் சோழன் கரிகாலன் நூறாயிரங்காணம் பரிசு வழங்கினான். எனவே அக்காலத்தில் நாணயங்களிலும் பண்டமாற்று முறைகள் நடைபெற்றமையை அறியலாம்.*

**நகரப் போக்குவரத்து**

*நகரங்கள் தற்காப்பு, சமூகநலம், வாணிபம் ஆகிய காரணங்களுக்காக உருவானவையாகும். இவை பிற்காலத்தில் செயலாட்சி, சந்தை, சமயம், கல்வி, மருத்துவம் போன்ற பொதுவான பணிகளை மேற்கொண்ட மையங்களாக மாற்றமடைந்தன.[26] பழங்காலத்தில் நகரங்கள் தோன்றுவதற்கு வேளாண்மையே அடிப்படையாக இருந்தது. வேளாண்மையில் ஏற்பட்ட வளர்ச்சியின் விளைவாக உணவுத் தானியங்களின் உற்பத்தி பெருகிறது. இந்த உற்பத்தி அம்மக்களின் தேவைக்கும் மேலாகக் காணப்பட்டது.*

*எனவே ஒருபிரிவு மக்கள் தேவைக்கு அளவுக்கு மீறி உணவுத் தானியங்களை விற்பனை செய்வதில் ஈடுபட்டனர். இந்தத் தொழிலில் ஈடுபட்டவர்கள் கிராமத்தைவிட்டு நகர்ப்புறப் பகுதிகளில் குடியேறினர். மேலும் வேளாண்மையை விட்டு வேறு தொழில்களில் ஈடுபட்டனர். இதுபோன்று வேளாண்மை அல்லாத வேறு தொழில்களில் ஈடுபட்ட மக்கள் வாழ்ந்த குடியிருப்புகள் நகரங்களாக வளர்ச்சியடைந்தன. வாணிபச் சிறப்பு அல்லது வாணிபப் பரிமாற்றம் மிக்க இடங்கள் நகரமாகக் கருதப்பட்டன[27] இன்றைய சூழலில் நகரம் என்ற சொல் ஓர் இடத்தின் தரத்தைக் கிராமப் பகுதியிலிருந்து உயர்ந்ததாக வேறுபடுத்திக் காட்டப் பயன்படுத்தப்படுகிறது. இடைக்காலச் சமுதாயத்தில் நகரம் என்ற சொல் சிறப்பாகப் பெருமளவில் நடைபெற்ற வாணிபப் பரிமாற்றத்தைக் குறிப்பதாக இருந்திருக்கிறது. நகர் என்ற அமைப்பு நிருவாகம் சார்ந்ததாகவும் வாணிபச் செயல்பாடுகள் கொண்ட மையமாகவும் இருந்தது.[28]*

*உள்நாட்டில் விளைவிக்கப்படும் பொருள்களின் மிகையைப் பிற இடங்களுக்கு அனுப்பக்கூடிய இடமாகவும் வணிகர்கள் சந்திக்கும் இடமாகவும் நகரங்களின் தோற்றம் இருந்ததாகக் கூறுவர்.[29] இதன்படி ஒரு பகுதி மக்களின் வாழ்க்கை முறை நகரத்தின் அடிப்படையில் அமையாமலே வாணிபப் பரிமாற்றத்தின் போக்கைக் கொண்டே இருந்ததை அறிய முடிகிறது. இச்சான்றே தமிழகப் பகுதியின் போக்குவரத்துப் பதிவாகச் சங்க நூல்களில் இடம்பிடித்துள்ளது.*

**சங்க இலக்கியங்களில் வாணிபப் போக்குவரத்துச் செய்திகள்**

*தமிழ்நாட்டில் பிற நாட்டார் உள்ளத்தைக் கவரும் பல பொருள்கள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. அவற்றுள் முத்தும் பவளமும் ஆரமும் அகிலும் வெண்துகிலும் சங்கும் மிளகும் குறிப்பிடத்தக்கவை. யவனர் என்பார் கிரேக்கரும் உரோமரும் ஆவர். அவர்கள் பொன்னொடு வந்து மிளகொடு பெயர்ந்தனர்.*

**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும் (அகம். 149:9-10)**

*என்னும் குறிப்பின்வழி இதனை அறியலாம். பெரிய மரக்கலங்களில் தமிழகத்தில் பொன் மிகுவதற்குக் காரணமாகிய சிறந்த பண்டங்களை ஏற்றிக்கொண்டு வந்தனர்.*

**பொன் மலிந்த விழுப்பண்டம்**
**நாடார நன்இழி தரும்**
**ஆடியற் பெருநாவாய் (மதுரை. 81-83)**

*அதே நூல் குதிரைகளை இங்குக் கொண்டு வந்தது பற்றிக் குறிப்பிடுகிறது.*

**விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்**
**நனந்தலைத் தேஎத்து நன்கல உய்ம்மார்**
**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்**
**(மதுரைக். 321-323)**

*காவிரிபூம்பட்டினத்தில் ஏற்றுமதியும் இறக்குமதியும் இடையறாது நிகழ்ந்தன. மலையில் பெய்த நீர் கடலில் கலப்பது போலவும், வான்முகந்த நீர் மலையில் பொழிவது போலவும் அமைய, நீரிலிருந்து நிலத்தில் இறங்குவதும் நிலத்திலிருந்து கலத்தில் ஏற்றுவதுமான பொருள்கள் அளப்பரியனவாக இருந்தன.*

**வான் முகந்த நீர் மலை பொழியவும்**
**மலை பொலிந்த நீர் கடற்பரப்பவும்**
**மாரி பெய்யும் பருவம் போல**
**நீரினின்று நிலத்தேற்றவும்**

**நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்**
**அளந்தறியாப் பலபண்டம்**
**வரம்பறியாமை வந்தீண்டி (பட்டின. 126-132)**

*அக்காலக் கப்பல்கள் காற்றின் துணைகொண்டே இயங்கின. அவை பாய்மரக்கப்பல்களாகும். இதற்குச் சான்று எவ்வப்போது எத்திசை நோக்கி வீசும் என்று உணர்வது அடிப்படையாகும். இதனைத் தமிழர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.*

*உப்பங்கழிகளில் செலுத்துவதற்குரிய சிறிய படகுகளும் கடலில் செலுத்துவதற்குரிய எளிய நாவாய்களும் இருந்தன. பஃறி எனப்படும் அவற்றில் வெள்ளுப்பை ஏற்றிச்சென்று உள்நாட்டில் விற்றனர். பண்ட மாற்றாக நெல்லைப் பெற்று வந்தனர். அத்தகைய படகுகள் வரிசையாகத் தறிகளிலே பிணைக்கப்பட்டிருந்தன. அது குதிரை வரிசைபோல் தோன்றிற்று.*

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணை நிலப் புரவியின் அணைமுதற் பிணிக்கும்**
**கழிசூழ் படப்பைக் கலியாணர் (பட்டின. 29-32)**

*சோழநாட்டுத் துறைமுகப் பட்டினமாய் புகார் காவிரிக் கடலோடு கலக்குமிடத்தில் அமைந்திருந்தது. அதன்கண் பெருங்கப்பல்கள் வெளி நாட்டிலிருந்து சரக்குகளைக் கொண்டுவந்து இறக்கின. கப்பலில் பாய்கள் விரித்தபடியே இருந்தன.*

**. . . . . . . . . கூம்பொடு**
**மீப்பாய் களையாதுமிசைப் பரம்தோண்டாது**
**இடைப்புலப் பெருவழிச் சொரியும்**
**கடற்பஃறா ரத்த நாடுகிழ வோயே (புறம். 30:12-15)**

*துறைமுகத்தில் ஏற்றுமதியும், இறக்குமதியும் செய்யப்பட்ட பொருள்கள் பட்டினப்பாலையில் கூறப்பட்டுள்ளன.*

**நீரின் வந்த நிமிர்பறிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத்து உணவும் காழகத் தாக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய வீண்டி**
**வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகின்** (**பட்டின. 185-193**)

*விலையுயர்ந்த நவரத்தினம் உள்படப் பல்வேறு பொருள்கள் கடை வீதிகளில் விற்கப்பட்டன. இங்கு மாட மாளிகைகளும் கம்பீரமான நுழை வாயில்களைக் கொண்ட அரண்மனைகளும் விளங்கின. இங்கு வாழும் மக்கள் உயர்மரபைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பர்.*[30]

*இங்குள்ள வாணகிரி என்னும் இடத்தில் சோழர்களின் புலிக்காசும், பலவண்ண அணிகலன்களும், உரோமானிய மட்பாண்டச் சிதைவுகளும் கிடைத்தன. வெள்ளையனிரும்பு என்னும் இடத்தில் உரோமானியக் காசுகளும் வானகிரியை அடுத்துள்ள கடலோரப் பகுதியில் கிடைத்த உரோமானிய மட்பாண்டங்களும் நகரில் யவனர் தங்கியிருந்ததை உறுதி செய்கின்றன.*

*கடல் வாணிகத்தில் சேரநாடு சிறப்புறுவதற்கு ஏற்றவாறு அந்நாட்டின் இயற்கை அமைந்திருந்தது. மேலைநாட்டுக் கப்பல்கள் அங்கு ஏராளமாக வந்தன. சேரர்களும் சிறந்த கப்பல்படைகளை வைத்திருந்தனர். நெடுஞ்சேரலாதன் யவனர்களைப் பின்கட்டாகக் கட்டித் தலையில் நெய் வார்த்தான். செங்குட்டுவனின் கடற்போர் வெற்றியை அவன் கடல்பிறக்-கோட்டிய செங்குட்டுவன் என்று சுட்டப்படுவதால் அறியமுடிகிறது. கடம்பர் என்பார் கடல் கொள்ளையில் ஈடுபட்டனர். அவர்களை வென்று அடக்கினர் சேரமன்னர். அவர்களின் சிறந்த துறைமுகம் முசிறியாகும்.*

இந்நாட்டில் மிளகு பேரளவில் விளைந்தது. இத்துறையில் நடைபெற்ற ஏற்றுமதி, இறக்குமதி பற்றிப் புறப்பாட்டொன்று பின்வருமாறு வருணிக்கிறது.

**மீனொடு நெற்குவைஇ**
**மிசையம்பியின் மனைமு றுக்குந்து**
**மனைக்குவைஇய கறிமூடையால்**
**கலிச்சும்மைய கரை சூலக்குறுந்து**
**கலந்தந்த பொற்பரிசம்**
**கழிதோணியான் கரைசேர்க்குந்து**
**மலைத்தாரமும் கடற்றாரமும்**
**தலைப்பெய்து வருநர்க்கீயும்** **(புறம். 343:1-8)**

பொன்னும் இரத்தினமும் மென்மைமிக்க புடவைகளும் சித்திரங்கள் அமைந்த ஆடைகளும், பவளமும் செம்பும் ஈயமும் கோதுமையும் இத்துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டதாகப் பெரிப்புளூசு குறிப்பிட்டுள்ளார். கோதுமை மாலுமிகளுக்கு வேண்டிய அளவே இறக்குமதி செய்யப்பட்டது என்றும் உள்நாட்டு வணிகர் வணிகம் செய்யவில்லை என்றும் அவர் கூறுகிறார். மேலும் இப்பட்டினத்தில் குட்டநாட்டிலிருந்து (கோட்டனாரா) வரும் மிளகும், முத்தும், யானைத் தந்தங்களும், பட்டும், இரத்தினமும் ஏற்றுமதி செய்யப்பட்டன என்றும் இவ்வரலாற்று ஆசிரியர் கூறியுள்ளார்.

**விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்**
**இலங்குவளை இருஞ்சேரிக்**
**கட்கொண்டிக் குடிப்பாக்கத்து**
**நற்கொற்கையோர் நசைப் பொருந** **(மதுரை. 135-138)**

உணர்வுகளோடு வந்த குழந்தைகளைப் போன்ற குரங்கு, சிப்பிகளின் உள்ளே முத்துக்களை இட்டுக் கிலிகிலியாடியதாகச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**மகாஅர் அன்ன மந்தி மடவோர்**

**நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்**
**வாள்வா யெருத்தின் வயிற்றகத் தடக்கி** (சிறு. 56-58)

**நவரத்தினம்**

*வெளிநாட்டுக்கு ஏற்றுமதியான பொருள்களில் மிளகுபோல் சிறந்தது முத்தாகும். கிரேக்கர் தென்னகத்தை முத்தினைப் பெறும் இடமாகவே கருதினர். உரோமாபுரி மகளிர் முத்தினை ஆடைகளிலும் காலணிகளிலும் வைத்துத் தைத்துக் கொண்டனர்.*

*சோழமண்டலக் கரையில் பவளம் நிறைய விளைந்தது. எனினும் இது பெரும்பாலும் ஏற்றுமதி செய்யப்பெறவில்லை எனத் தெரிகின்றது. "ஒரு பவளமணியை இந்தியன் ஒருவன் மதித்த அளவுக்கு ஒரு முத்தை உரோமப் பெண் மதித்தாள்" என எடுத்துக்காட்டியுள்ளனர்.*[31]

*யவன நாட்டிலிருந்து இறக்குமதி செய்த பொருள்களின் உயர்வகை மதுவும் ஒன்று.*

**யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்**
**பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்**
**ஒண்பொடி மகளிர் மடுப்ப** (புறம். 56:18-20)

**உள்நாட்டு வாணிபம்**

*சங்க காலத்தில் உள்நாட்டு வாணிகமும் நன்கு வளர்ச்சியுற்று இருந்தது. அவரவரும் தத்தம் பொருள்களைக் கொடுத்துத் தமக்குத் தேவையான பொருள்களை மாற்றிக் கொண்டனர். எனவே மாறுதல் என்பது வணிகம் செய்தல் என்று பொருள்படுவதாயிற்று. கோவலன் கண்ணகியிடம் சிலம்பைப் பெற்றுக்கொண்டதும் 'மதுரை சென்று மாறி வருகுவன் மயங்கா தொழி' என்று கூறிச் சென்றான் எனும் குறிப்பு அறியத்தக்கது.*

*படகில் மீன்பிடிக்கச் சென்ற பரதவனுக்கு அவன் மகள் உப்புக்கு ஈடாக மாற்றிக் கொணர்ந்த வெண்ணெற் சோற்றினை அயிலை மீன் குழம்பொடு கொடுத்தான்.*

**நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**

**உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு**

**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**

**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்** **(அகம். 60:3-6)**

*பட்டினப்பாலையில் உப்பு வாணிபம் குறிக்கப்பட்டுள்ளது. படகில் உப்பினை ஏற்றிச்சென்று விற்றனர். திரும்பி வருகையில் படகு நிறைய வெண்ணெல் நிரம்பியிருந்ததை அறியமுடிகிறது.*

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி** **(பட்டின. 29-30)**

*தேனையும் நெய்யையும் கிழங்கையும் கொடுத்து மீனின் கொழுப்பையும் பெற்றுக் கொண்டதையும் கரும்பையும் அவலையும் கொடுத்துக் கள்ளையும் மான் இறைச்சியையும் பெற்றுக் கொண்டதையும் பொருநராற்றுப்-படையின்வழி அறியலாம்.*

**தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**

**மீன் நெய்யொடு நறவு மறுகவும்**

**தீங்கரும்போடு அவல் வகுத்தோர்**

**மான் குறையொடு மது மறுகவும்**

**குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்**

**நறும்பூங் கண்ணி குறவர் சூடக்**

**கானவர் மருதம் பாட அகவர்**

**நீல்நிற முல்லைப் பல்திணை நுவல** **(பொருநர். 214-221)**

*பாணர்குலப் பெண்ணிடமிருந்து வரால் மீனைப் பெற்றுக்கொண்டு வட்டி நிறைய ஓராண்டுமுன் விளைந்த நெல்லைக் கொட்டினர்.*

**வலைவல் பாண்மகள் வால்எயிற்று மடமகள்**

**வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்**

**யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர (ஐங். 48:1-3)**

**சங்ககாலத் துறைமுகங்கள்**

*இலக்கியங்கள் வெளிநாட்டினரின் நூல்கள் அல்லது குறிப்புகள் சங்க காலத் தமிழகப் பொருளியலின் ஓர் உறுப்பான கடற்சார் வாணிபத்தைப் பற்றியும் இதனுடன் தொடர்புடைய துறைமுகங்களைப் பற்றியும் செய்திகளைத் தருகின்றன. இவற்றில் காணப்படும் சில கடற்கரைப் பட்டினங்களையும் இவை தொடர்பான பிற செயற்பாடுகளையும் ஆய்வாளர்கள் தெளிவாகக் கண்டறிய இயலவில்லை. இருப்பினும் அக்காலக் கடற்சார் வரலாற்றினை அறிந்துகொள்ளப் போதுமான அளவிற்குச் செய்திகள் கிடைக்கின்றன.*

*தமிழக ஒட்டுமொத்த வரலாற்றில் சங்ககாலம் ஒரு திருப்புமுனையாக இருந்தமையால் கடற்சார் நடவடிக்கைகளிலும் வளர்ச்சி நிலையைப் பெற்றதை உணரமுடிகின்றது. இதில் கடற்சார் வாணிபம் முதன்மைபெற்று தமிழகக் கடற்கரையில் துறைமுக நகரங்கள் மற்றும் வணிக மையங்கள் உருவாகின எனலாம்.*

*சங்க இலக்கியங்களான பட்டினப்பாலை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து மற்றும் இவற்றிற்குப் பிந்தைய இலக்கியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவையும், கிறித்தவ ஆண்டின் தொடக்க காலத்தைச் சேர்ந்த கடற்பயணக் குறிப்புகளாகக் கருதப்படும் பெரிப்புளூசின் எரித்ரியக் கடற்செலவு* (Periplus of Erithrican Sea)*, தாலமியின் நிலவியல் கையேடு* (Geography of Ptolemy)*, பிளினியின் இயற்கை வரலாறு* (Natural History) *ஆகியனவும் அக்காலத் தமிழகத்தின் துறைமுகங்கள் மற்றும் கடற்கரை வணிக மையங்கள் பற்றிய குறிப்புகளைத் தருகின்றன. இவற்றிற்குத் துணைசேர்க்கும் வகையில் தொல்லியல் தரவுகளும் அக்காலக் கீழை மற்றும் மேலைநாட்டு வாணிபத்தில் தமிழகக் கடற்கரைத் துறைமுகங்கள் கொண்டிருந்த உறவின் சிறப்பைக் காட்டுவனவாக உள்ளன. இவ்வகையில் கி.மு. 3-கி.பி 3 ஆம்*

*நூற்றாண்டுகளில் தமிழகம் கொண்டிருந்த காவிரிப்பூம்பட்டினம், அரிக்கமேடு, கொற்கை, வசவசமுத்திரம், அழகன்குளம், மேற்குக் கடற்கரையின் முசிறி போன்ற துறைமுகங்கள் பொதுவான யவனர் எனக் கூறப்படும் மத்தியத்தரைக்கடல் நாடுகளைச் சேர்ந்த கிரேக்க, உரோமானிய அரபு வணிகர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன.*[32]

**காவிரிப்பூம்பட்டினம்**

*வெவ்வேறு நாடுகளிலிருந்து நீரின் வழியாக இத்துறைமுகத்திற்கு வந்திறங்கிய பொருள்களைப் பற்றியும் துறைமுகத்தின் சிறப்பைப் பற்றியும் பட்டினப்பாலையில் கூறப்பட்டுள்ளது.*

**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத்துணவும் காழகத் தாக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின் (பட்டின. 190-195)**

*அரேபியக் குதிரைகள் தமிழகத்தின் கொற்கை, மன்னர் பகுதிகளைச் சார்ந்த முத்துக்கள், கீழைக் கடற்கரைப் பகுதியைச் சேர்ந்த பவளம், இலங்கையிலிருந்து வரப்பெற்ற உணவுப் பொருள்கள் மற்றும் பிற இடங்களிலிருந்து வந்திறங்கிய மணி, பொன், அகில் போன்றவை முதன்மையானவையாகும். கடல் வாணிபத்தால் நகரில் காணப்பட்ட செல்வ வளம் பற்றிச் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**முழுங்குகடல் ஞாலம் முழுவதும் வரினும்**
**வழங்கத் தவா வளத்த தாகி**
**அரும்பொருள் தரூஉம் விருந்திற் றேஎம்**
**ஒருங்குதொக் கன்ன உடைப்பெரும் பண்டம் (சிலப். 2:2-5)**

**. . . . . கூம்பொடு**
**மீப்பாய் களையாது மிசை பரந் தோண்டாது**
**புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் (புறம். 30:12-13)**

பாய்மரத்தில் கட்டப்பட்ட பாய்கள் களையாமல் பெரிய கலங்கள் புகார்த் துறைமுகத்திற்குள் வந்து செல்வதைப் பற்றிப் புறநானூறு காட்டுவதிலிருந்து சங்க காலத்தில் இத்துறைமுகத்தின் செயல்பாடுகள் சிறப்பாக இருந்ததை அறியமுடிகிறது.

**அரிக்கமேடு**

புதுச்சேரியிலிருந்து தெற்கில் 4 கி.மீ. தொலைவில் அரியாங்குப்பம் ஆறு கிழக்குக் கடலில் கலக்குமிடத்தில் அரிக்கமேடு அமைந்துள்ளது. இதன் இன்றைய பெயர் வீராம்பட்டினம் என்பதாகும். இத்துறைமுகத்தை

**வீரை வேன்மான் வெளியன் தித்தன் (நற். 58:5)**

என இலக்கியம் காட்டும். சங்ககால வேளிருடன் இதனைத் தொடர்பு படுத்தலாம். வீரைமுன்துறை மேற்சுட்டிய வேளிருக்குச் சொந்தமானது என்றும் அங்கு ஏராளமான உப்பளங்கள் இருந்தன என்றும் தெரிய வருகிறது.

**அடுபோர் வேளிர் வீரை முன்துறை**
**நெடுவேள் உப்பின் நிரம்பாக் குப்பை**
**பெரும்பெயற்கு உருகியா அங்கு (அகம். 206:13-15)**

வீரை முன்துறை ஒரு துறைமுகமாகவும் கடற்கரை ஊராகவும் அமைந்திருந்தமை இப்பாடலால் தெளிவாகிறது.

**கொற்கை**

கொற்கை தூத்துக்குடி மாவட்டம் திருச்செந்தூர் வட்டத்தில் அமைந்துள்ளது. தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்தில் சங்ககாலப் பாண்டியர்களின் இயற்கைத் துறைமுகமாகக் கொற்கை புகழுடன் விளங்கியது. கொற்கை என்பதற்கு படை அல்லது படைவீடு என்று கால்டுவெல் பொருள் கொள்கிறார்.[33]

கொற்கை தொடர்பான செய்திகள் சங்க இலக்கியங்கள் பலவற்றில் காணப்படுகின்றன. பாண்டிய மன்னன் வழுதி என்பவனின் துறைமுகமாகக் கொற்கை விளங்கியது என அகநானூறு குறிப்பிடுகிறது.

**நல்தேர் வழுதி கொற்கை முன்துறை (130:11)**

கொற்கைத் துறைமுகம் பாண்டிய மன்னன் வெற்றிவேல் செழியன் என்பவனின் சிறப்புமிகு தலைநகராக விளங்கியதையும் இலக்கியங்கள் காட்டுகின்றன. பாண்டிய மன்னர்களைப் பொதுவாகக் கொற்கையின் கோமான்களாகவே இலக்கியங்கள் சித்திரித்துள்ளன. கொற்கை பாண்டிய மன்னர்களின் இன்றியமையா இடமாகக் கருதப்பட்டதை அறியமுடிகிறது.

கொற்கை, தாமிரபரணி ஆறு கடலுடன் கலக்குமிடத்தில் அமைந்திருப்பதால் அகநானூறு இதைக் 'கொற்கை முன்துறை' எனக் குறிப்பிடுவதோடு ஒரு பெரிய துறைமுகமாக இருந்ததையும் சுட்டுகிறது.

**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை (அகம். 201:4)**

முத்துக்குக் கொற்கை பெயர்பெற்றிருந்ததையும் அங்குச் சங்கு மற்றும் முத்துக்குளித்தலில் பரதவர் ஈடுபட்டதையும் அகநானூற்றில் அறியலாம்.

**மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**
**கொற்கை அம்பெருந்துறை முத்தின் (அகம். 27:9-10)**

**முத்தமொடு வலம்புரி சொரிந்து (அகம். 201:5)**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவற்**
**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப கல்லென**
**கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்**
**குவவு மணல் நெடுங்கோட்டு ஆங்கண் (அகம். 350:11-14)**

ஒருவன் குதிரை மேல் அமர்ந்து கொற்கைக் கடற்கரையோரமாகச் சென்றபோது அக்குதிரையின் கால்குளம்புகளில் முத்துக்கள் பதிந்து காணப்பட்டன என்று முத்துக்குளியல் இங்கு வளமாக இருந்ததை இலக்கியம் எடுத்துக்காட்டுகிறது.

**அழகன் குளம்**

இராமநாதபுரத்திற்கு கிழக்கே 12 கி.மீ. தொலைவில் அழகன்குளம் அமைந்துள்ளது. இங்கிருந்து 7 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஆற்றங்கரை என்னுமிடத்தில் வைகையாறு கடலில் கலக்கிறது.

*இப்பகுதியின் அமைப்பும் அழகன்குளத்தில் கிடைக்கப்பெற்றுள்ள தொல்பொருள்களும் இங்குப் பன்னாட்டுத் தொடர்புகள் இருந்ததைக் காட்டுகின்றன. சங்க இலக்கியங்களிலோ அக்காலப் பயணக்குறிப்புகளான எரித்திரியக் கடற்செலவு மற்றும் தாலமியின் குறிப்புகளிலோ இத்துறைமுகப்பட்டினம் குறித்த எவ்விதத் தகவலும் காணப்படவில்லை. ஆனால் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் மருங்கூர்ப்பட்டினத்துடன் இவ்விடத்தைத் தொடர்புபடுத்தி ஆய்வாளர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.*

*மருங்கூர்ப்பட்டினம் மருங்கை என வழங்கப்பட்டதோடு பசும்பூண் வழுதி என்னும் பாண்டிய மன்னனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது என்பதை நற்றிணை கூறுகிறது.*[34]

**பசும்பூண் வழுதி மருங்கை (நற். 358:10)**

**வசவசமுத்திரம்**

*தொண்டை மண்டலத்தில் சென்னைக்கு அருகில் பல்லவர் கால வரலாற்றுச் சிறப்புமிக்க மாமல்லபுரத்திலிருந்து தெற்கே 14 கி.மீ. தொலைவில் பாலாறு கடலில் கலக்கும் இடத்தில் வசவசமுத்திரம் அமைந்துள்ளது. இடைக்காலத்தில் இவ்வூர் இப்பெயராலேயே அமைந்திருந்ததையும் அப்பொழுது இப்பகுதியில் சதுரங்கப்பட்டினம் சிறந்த துறைமுகமாகச் செயல்பட்டதையும் அக்காலக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. சங்க இலக்கியத்தில் வசவசமுத்திரம் குறித்து எவ்விதத் தகவலும் காணப்படவில்லை. இக்கடற்கரைப் பகுதியில் சங்க காலத்தில் கீழை மற்றும் மேலை நாடுகளுடனுன் வாணிபத் தொடர்புடன் காணப்பட்ட நீர்ப்பெயற்று என்னும் துறைமுகம் இருந்தைப் பெரும்பாணாற்றப்படை குறிப்பிடுகிறது.*

**நீர்ப்பெயற்று எல்லை போகிப் பாற்கேழ்**
**வால் உளைப் பரவியொடு வடவளம் தரூஉம்**
**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**
**மாடம் ஓங்கிய மணல்மலி மறுகின்**

**பரதர் மலிந்த பல்வேறு தெருவின் (319-323)**

**முசிறி**

மேற்குக் கடற்கரையில் பேராற்றங்கரையில் (சுற்றி, பேரியாறு) அமைந்திருந்த சங்க காலச் சேரர்களின் சிறப்புமிகு துறைமுகமான முசிறி மேற்கத்தியர்களுடன் பழங்காலத் தமிழகம் கொண்டிருந்த உறவில் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தது. அகநானூறு முசிறியை ஒரு சுறுசுறுப்பான துறைமுகமாகக் குறிப்பதோடு அயல்நாடுகளிலிருந்து வரும் கப்பல்கள் பொன் கொணர்ந்து அதற்கு மாற்றாக மிளகு பெற்றதையும் குறிப்பிடுகிறது.

**சுள்ளி அம்பேரியாற்று வெண்நுரை கலங்க**
**யவனர் தந்த வினை மாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம் கெழு முசிறி (அகம். 149:8-11)**

கப்பல்களிலிருந்து பொன் கொண்டு வந்ததையும் மிளகு பெற்றதையும் அகநானூறு போக்குவரத்துப் பதிவாகக் குறிப்பிடுகிறது.

**தொகுப்புரை**

- ஐவகை நிலப்பகுப்பிலும் சங்கத் தமிழர்கள், இயற்கையான, இயல்பான, செம்மாந்த வாழ்க்கையைத் திறம்பட நிகழ்த்தியுள்ளனர் என்பதற்கான அழுத்தமான சான்றுகள் கிடைக்கின்றன. இதனால் பல வழிகளிலும் பயணம் மேற்கொண்டு புதிய வாழ்வாதார முயற்சிகளைத் தமிழர் மேற்கொண்டமையும் புலனாகிறது.

- ஐந்நிலப் பாகுபாட்டிலும் மக்கள் பெயர்கள், பழக்க வழக்கங்கள், உணவு முறைகள், உறைவிட உருவாக்கங்கள், ஆடை அணிகள் போன்றவற்றில் குறிக்கத்தக்க வேறுபாடுகள் தென்படுகின்றன. அக வாழ்வில் உரியபொருள் நோக்கில் ஒன்றுபட்டிருந்த தமிழர்கள் புறவாழ்விலும் தனித்தன்மையும் நிலத்திற்கேற்ப வாழ்ந்தமை தெளிவாகிறது.

- வீரத்திற்குப் பெயர்பெற்ற முல்லையும், முயற்சிக்குப் புகழ் எய்திய குறிஞ்சியும், உழைப்புக்குக் குறியீடாகத் திகழ்ந்த மருதமும், பொருளீட்டலுக்காகத் துணைவே துணையாகி நின்ற நெய்தலும் பழந்தமிழரின் இன அடையாளங்களாகச் சங்க நூல்களில் பதிவாகியுள்ளன.

- பண்டமாற்று முறை என்பது போக்குவரத்தின் தோற்றுவாயை உருவாக்கியுள்ளமையை உணரமுடிகிறது. ஏற்றுமதி-இறக்குமதி நிகழ்ந்தபோது முகிழ்த்துள்ள அக்காலத் தொழில்நுட்பங்கள் போக்குவரத்தில் பழந்தமிழர் கொண்டிருந்த ஈடுபாட்டை முன்னிலைப்படுத்துகின்றன.

- பண்டத்தைத் தந்து நாணயத்தை மாற்றிக் கொண்ட பெருந் தன்மையும் நாணயத்தைத் தந்து பண்டத்தைப் பெற்றுக் கொண்ட வாணிப நுட்பமும் பட்டினப்பாலை போன்ற நூல்கள்வழி வெளிப்படுகின்றன. பொறுமையும் துணிவும் நேர்மையும் பின்புலமாகத் திகழ்ந்தமையால் போக்குவரத்துப் பதிவில் வணிகப் பண்டமாற்று நாகரிகம் சிறப்பிடம் பெறுகிறது.

- நெல்லுக்கு உப்பும், உப்புக்கு நெல்லும் என அவரவர் மிகையாக இருப்பு வைத்திருந்த பண்டங்கள் தட்டுப்பாடின்றி அனைவருக்கும் கிடைத்திட ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவு முயற்சிக்குப் போக்குவரத்தே அடிகோலியுள்ளது.

- வண்டிகளிலும் கலங்களிலும் கொண்டு செல்லப்பட்ட பொருள்களும், அப்பொருள்களுக்கு மாற்றாகத் தமிழர்களும், அயலவர்களும் ஒருமைப்பாட்டணர்வுடன் செய்துகொண்ட வாய்மொழி ஒப்பந்தங்களும் உயர்வாணிப நாகரிகத்தை உணர்த்துகின்றன.

- பொன்னும், மிளகும், உப்பும், நெல்லும் மாற்றிக் கொள்ளப்பட்ட நிறைவு நிலையில் போக்குவரத்துப் பல சிறந்த படிநிலைகளைப் பெற்றமைகிறது. தமிழினம் வந்தாரை வரவேற்கும் மனப்பான்மையும், அனைவரையும் ஓரினத்தாராகக் கருதும் பக்குவநெறியும் மிக்கவர்கள்

*என்பதைப் போக்குவரத்தின் இன்றியமையாமை எடுத்துக் காட்டுகிறது.*

- *சங்க காலத் துறைமுகங்கள் நிலவழிப் போக்குவரத்து மேம்படவும், நீர்வழிப் போக்குவரத்துச் செழிக்கவும் உறுதுணைபுரிந்தமையைச் சங்க நூல் வரிகள் மெய்ப்பிக்கின்றன.*
- *இயற்கை அரண்களாக விளங்கிய நிலப்பெருவழிகளும், நீர்க் கருவி வழிகளும் பழந்தமிழரின் பண்பாட்டுப் பதிவாகவும், போக்குவரத்து வளர்ச்சிக் காரணியாகவும் கொள்வதற்குச் சான்றளிக்கின்றன.*

**சான்றெண் விளக்கம்**

1. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்**, *ப.1.*
2. *சி.இலக்குவனார்,* **இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்**, *ப. 27.*
3. P.T.Srinivasa Iyengar, **History of the Tamil**, p. 14.
4. *ந.சுப்பிரமணியம்,* **சங்க கால வாழ்வியல்**, *ப. 249.*
5. *கு.இராசரெத்தினம்,* **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**, *ப. 61.*
6. **Encyclopaedia of Social Science**, Vol. XIII, p. 556.
7. A.K.Korber, **Anthropology**, p. 143.
8. *வீ.மாணிக்கம்,* **தமிழர் வாழ்வியல்**, *ப. 298.*
9. *சாமி.சிதம்பரனார்,* **தமிழர் வாழ்வும் பண்பாடும்**, *ப. 291.*
10. *ச.மெ.மீனாட்சிசுந்தரம்,* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம்,** *தொகுதி-3, ப. 161.*
11. *மா.இராசமாணிக்கனார்,* **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, *ப. 81.*
12. *ச.மெ.மீனாட்சிசுந்தரம்,* **செவ்வியல் நோக்கில் செம்மொழி இலக்கியங்கள்**, *தொகுதி-1, ப. 222.*
13. *திவாகர முனிவர்,* **திவாகர நிகண்டு (பெயர்த்தொகுதி)**, *ப. 40.*
14. **The Encyclopaedia of Britanicca**, Vol. 3, p. 896.
15. **மதுரைத் தமிழ்ப்பேரகராதி**, *ப. 772.*
16. *வீ.மாணிக்கம்,* **கொங்குநாடு-கி.பி. 1400 வரை**.
17. Singaravelu, **Social Life of the Tamil**., p. 31.

18. கோ.சங்கவீரபுத்திரன், **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம்**, தொகுதி-2, ப. 55.

19. அ.விசுவநாதன் (உரை.) **சங்க இலக்கியம்-கலித்தொகை**, பா. 103:37.

20. கா.சுப்பிரமணியபிள்ளை, **பழந்தமிழர் நாகரிகம்**, ப. 54.

21. மயிலை சீனி.வேங்கடசாமி, **பழங்காலத் தமிழர் வாணிகம்**, ப. 10.

22. வீரமாமுனிவர், **சதுரகராதி**, ப. 289.

23. ந.கடிகாசலம், **சங்க இலக்கியம், கவிதையியல் நோக்கில் சிந்தனைப் பின்புல மதிப்பீடு**, ப. 289.

24. மயிலை சீனி.வேங்கடசாமி, **பழங்காலத் தமிழர் வாணிகம்**, ப. 12.

25. ச.வே.சுப்பிரமணியன், (பதி.), **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம்,** தொகுதி-1, ப. 189.

26. எ.சுவாமிநாதன், **நகர்ப்புறப் புவியியல்**, ப. 19.

27. பா.ஜெயக்குமார், **தமிழகத் துறைமுகங்கள்**, ப. 196.

28. K.R.Hall, **Trade and State Craft in the Age of Cholas**, p. 51-54.

29. Kesavan Veludhat, **Political Structure of Early Medieval South India**, pp. 213-214.

30. அ.தட்சிணாமூர்த்தி, **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, ப. 206.

31. மேலது, பக். 113-114.

32. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உரை.), **சங்க இலக்கியம்-புறநானூறு,** ப. 346.

33. பா.ஜெயக்குமார், **தமிழகத் துறைமுகங்கள்**, ப. 31.

34. அ.நாராயணசாமி ஐயர் (உரை.), **நற்றிணை நானூறு**, ப. 441.

# இயல் – 3

## சங்க இலக்கியத்தில் நிலவழி ஊர்திகள்

*வணிகப்பொருள்கள் அனைத்தும் ஒரே இடத்தில் உருவாக்கப் படுவதில்லை. வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டதால் அப்பொருள்கள் அனைத்தையும் ஒரே இடத்திற்குக் கொண்டு வந்து திரட்டிக் தொகுப்பதற்காக வணிகர்கள் கால்நடைகளையும் வண்டிகளையும் பயன்படுத்தினர். இக்காலப் பயன்பாட்டில் இருக்கும் தொடர்வண்டி, தானி* (auto), *பேருந்து, சிற்றுந்து, வானவூர்தி, மீச்சுமை ஊர்தி* (lorry) *போன்றவை அக்காலத்தில் இல்லாத நிலையில் பழந்தமிழர்கள் எருது, கழுதை, வண்டி, படகு, பாய்மரக்கப்பல், தேர், பல்லக்குப் போன்றவற்றைப் போக்குவரத்திற்குத் துணைகொண்டனர்.*

### தேர்

*பழந்தமிழ் மன்னர்களும், குறுநிலத் தலைவர்களும், கூட்டத்தின் தலைவரும், ஊர்த்தலைவரும், வள்ளலும், ஏனைய தலைமைச் சிறப்புடைய மாந்தரும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லப் பல்வேறு விதமான தேர்களை நிலவழி ஊர்தியாகப் பயன்படுத்தினர். அவர்கள் கையாண்ட ஊர்திகள் கொடிகளும், பொன்மணிகளும் பூண்டிருந்தன. விரைந்து செல்லும் ஆற்றல் வாய்ந்தவையாகவும் அவை விளங்கின. அத்தேரின் ஒலியே வருபவரை இனங்காட்டும் அளவுக்குத் தொழில் நுட்பத்தில் மேம்பட்டிருந்தது. அழகிய வேலைப்பாடும், விலங்கு உருவம் பொறிக்கப்பட்ட முகப்பு எழிலும் தேர்களை அணிசெய்தன. உறுதியும் நீளமும் அகலமும் அழகும் வலிமையும் அணிச்சிறப்பும் மிக்கவையாகப் பழங்காலத் தேர்கள் திகழ்ந்தமையைப் பின்வரும் சங்க இலக்கியச் சான்றுகள் உறுதிப்படுத்தும்.*

**கடுந்தேர்**

*சிறு. 65*

*நற். 45:5*

*குறு. 45:1*

*புறம். 15:1*

**திண்தேர்**

*பெரும். 397*

*மதுரை. 51*

*மதுரை. 435*

*மலை. 467*

*நற். 8:9*

*குறு. 210:1*

*ஐங். 54:1*

*ஐங். 137:2*

*பதிற்று. 41:15*

*பரி. 11:51*

*பரி. 19:33*

*கலி. 27:25*

*கலி. 30:19*

*கலி. 31:17*

*கலி. 33:31*

*கலி. 35:24*

*அகம். 35:15*

*அகம். 44:12*

**இரை தேர் (ஒலி ஆரவாரமுடையது)**

*பெரும். 313*

*குறிஞ்சி. 255*

*நற். 35:6*

*நற். 125:1*

*குறு. 103:3*

*குறு. 113.:3*

**வண்தேர்**

*குறு. 260:6*

**இயல்தேர்**

*சிறு. 149*

*ஐங். 104:3*

*அகம். 36:19*

*புறம். 7:10*

*புறம். 52:6*

**நெடுந்தேர்**

*பொருநர். 163*

*பெரும். 416*

*முல்லை. 103*

*மதுரை. 659*

*மதுரை. 752*

*குறிஞ்சி. 20*

*மலை. 323*

*மலை. 571*

*நற். 10:5*

*நற். 19:6*

*நற். 91:11*

*குறு. 91:6*

*குறு. 212:1*

*குறு. 301:5*

*ஐங். 134:2*

*பதிற்று. 25:13*

*பதிற்று. 35:4*

*அகம். 14:21*

*புறம். 39:16*

**நற்றேர்**

*சிறு. 82*

*பெரும். 249*

*குறு. 61:4*

**பெருந்தேர்**

*சிறு. 89*

*சிறு. 142*

*மதுரை. 388*

**பழம் தேர்**

*மதுரை. 576*

**கொல்தேர்**

*மதுரை. 633*

**ஓடு தேர்**

*நற். 58:11*

**அரித்தேர் (பொன்)**

*பெரும். 490*

**பொலந்தேர்**

*ஐங். 200:2*

*அகம். 25:20*

*பதிற்று. 40:14*

*புறம். 4:14*

**கொடித்தேர்**

*பதிற்று. 33:1*

*புறம். 24:23*

*புறம். 45:7*

*அகம். 36:13*

**விலங்குருவத் தேர்**

*கலி. 24:10 (யானை)*

*புறம். 12:2 (யானை)*

*பதிற்று. 17:45 (மான்)*

*பதிற்று. 42:2 (மீன்)*

**அரசத் தேர்**

*புறம். 43:10 (தேர்வண் கிள்ளி)*

*நற். 100:9 (தேர்வண் மலையன்)*

*ஐங். 55:2 (தேர்வண் கோமான்)*

**விலங்கினப் பயன்பாடு**

*சங்க மாந்தர் எருமைக் கடாவை ஏர் உழுவதற்கும், எருமைகளைப் பொதி சுமக்கவும் வண்டி இழுக்கவும் பயன்படுத்தவில்லை. எருதுகளே வண்டி இழுக்கவும் பொதி சுமக்கவும் உறுதுணைபுரிந்தன. எருதுக்கு அடுத்த நிலையில் கழுதையே, பொதி சுமக்க உதவியது. கழுதைகளைக் கொண்டு வண்டி இழுக்கவில்லை. பயன்பாடு கருதி விலங்கினங்களை ஊடகமாக்கிக் கொண்ட பழந்தமிழர்களின் வெற்றிக்குத் தரைப் போக்குவரத்து வசதிக்குறைவு தடை ஏற்படுத்தவில்லை.*

*மக்கள் ஏறிச் செல்வதற்கான ஊர்திகள் பல இருந்தன. பண்டங்களை ஏற்றிச் செல்வதற்கான வண்டிகள் இருந்தன. கடலிலே பயணம் செய்யக் கப்பல்கள் இருந்தன; தோணிகள் இருந்தன. சிற்பத்தொழில் சிறந்திருந்தது; ஓவியத்தொழில் உயர்ந்திருந்தது. பொன், வெள்ளி, மாணிக்கம், முத்துப் போன்ற செல்வங்கள் இருந்தன. இவற்றால் அணிகலன்கள் செய்து அழகுக்காக அணிந்து கொண்டனர். பொன், வெள்ளிகளால் பாத்திரங்களும் செய்தார்கள்.*

*இரும்பு, செம்பு, கலவை உலோகமான முறி முதலியவற்றால் கருவிகள் செய்தனர். மரத்தினால் நல்ல வேலைப்பாடமைந்த பண்டங்கள் செய்தனர். உள்நாட்டு வாணிகமும், வெளிநாட்டு வாணிகமும் உயர்ந்திருந்தன. இந்நாட்டுப் பண்டங்கள் பல அயல்நாடுகளுக்குக் கடல்வழியாகச் சென்றன. அயல்நாட்டுப் பண்டங்களும் இந்நாட்டுக்கு வந்துஇறக்குமதியாயின.*

*பிறமொழி பேசுவோர், பிற நாட்டினர், இந்நாட்டுக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தனர். பிற நாட்டினரோடும், பிறமொழியினரோடும் தமிழர்கள் தாராளமாகப் பழகினர். அவர்களும் தமிழர்களுடன் ஒன்றுபட்டுக் கலந்து பழகினர். பிற நாட்டினர் மீது வெறுப்போ, பிறமொழியின் மீது வெறுப்போ அக்காலத்தில் இல்லை.*[1]

*உணவுப் பொருள்களுள் மிகச் சிறந்தது உப்பு. உப்பு வாணிகர் உப்பளங்களிலிருந்து உப்பை வாங்கி, வண்டிகளில் ஏற்றிக் கொண்டு, ஊரூராய்ச் சென்று விற்றனர். உப்பு வண்டியே அவர்தம் வீடாகவும் பயன்பட்டது. உப்பு வாணிகன் மனைவியும் சில சமயங்களில் வண்டியோட்டினாள். அவள் கணவன் வண்டியிழுக்கும் எருதுகள் களைப்புற்றால் வேறு எருதுகளை வண்டியில் பூட்டுவதற்கு ஆயத்தமாகத் தன்னுடன் இரண்டு எருதுகளை ஓட்டிக்கொண்டு உப்பு வண்டியோடு செல்வது வழக்கம் (**பெரும். 55-59**).*

*மிளகு சேர நாட்டில் விளைந்தது. அது பிற நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டது. வணிகர் மிளகுப் பொதிகளைக் கழுதைகளின் மீது ஏற்றி ஊரூராய்ச் சென்று விற்றனர் (**பெரும். 80-81**).*

*கப்பல்களில் வந்து துறைமுக நகரங்களில் இறக்குமதியான முத்து, பவளம், மாணிக்கம், சந்தனம் முதலிய பொருள்கள் உள்நாட்டு வணிகரால் விற்கப்பட்டன (**பெரும். 67-76**).*

*சிந்து, அரசு, பாரசீக நாடுகளிலிருந்து அக்காலத்தில் குதிரைகள் தருவிக்கப்பட்டன. அவை கடல்வழிப் போக்குவரத்தின் உதவியால் கப்பல்களில் வந்திறங்கின. குதிரைகள் போர்முனையிலும் பெரும் பங்காற்றியுள்ளன. நால்வகைப் படைகளில் குதிரைப்படையே வெற்றிக்கு வழிவகுப்பதில் முதன்மைப் பங்காற்றியது. தேர்ப் படைகளில் தேர்களை (போர் வண்டிகள்) இழுக்கவும் குதிரைகள் துணையாகின.[2] அரசரும் செல்வரும் குதிரை வண்டிகளையே போக்குவரத்திற்குப் பயன்படுத்தினர். தமிழர் பண்பாட்டில் குதிரைகள் பொதி சுமக்கவும், வணிகப் பொருளுக்கான போக்குவரத்து வண்டிகளை இயக்கவும் பயன்படுத்தப்படவில்லை.*

**அத்திரி**

*(கோவேறு கழுதைகள்) வெளிநாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்டன. கோவேறு கழுதைகளுக்கு அத்திரி என்று பெயர் வழங்கப்*

*பட்டது. நாகரிகமுள்ள செல்வர்கள் அக்காலத்தில் கோவேறு கழுதைகளை ஊர்தியாகப் பயன்படுத்தினர். ஆனால், பொதி சுமக்கவும் சரக்கு வண்டிகளை இழுக்கவும் அவற்றைப் பயன்படுத்தவில்லை. ஊர்தியாக மட்டுமே பயன்படுத்தினர். அத்திரிக்கு 'இராச வாகனம்' என்று பெயர் வழங்கப்பட்டது.*

**கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி**
**வடிமணி நெடுதேர் பூண (அகம். 350:6-7)**

*அத்திரியை ஒருவன் ஊர்ந்து சென்றதை நக்கீரர் கூறுகிறார்.*

**கழிச்சுறா எறிந்த புட்டாள் அத்திரி**
**நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ (அகம். 120:10-11)**

*கடற்கழி வழியாக ஒருவன் அத்திரி ஊர்ந்து வந்ததை உலோச்சனார் கூறுகிறார்.*

**கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி**
**குளம்பிலும் சேயிறா ஒடுங்கின**
**கோதையும் எல்லாம் ஊதை வெண் மணலே (நற். 278:7-9)**

*மதுரையில் வைகையாற்றில் நடந்த நீராட்டு விழாவில் சிலர் அத்திரியூர்ந்து வந்தார்கள் என்று பரிபாடல் **(10:17)** கூறுகிறது.*

*காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த செல்வக் குடிமகனாகிய கோவலன் கடலாடுவதற்குக் கடற்கரைக்குச் சென்றபோது அவன் அத்திரி ஊர்ந்து சென்றான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது **(சிலம்பு. கடலாடு. 119).** சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், 'அத்திரி-கோவேறு கழுதை, அதாவது குதிரையில் ஒரு சாதி' என்று உரை எழுதியுள்ளார். பழைய அரும்பத உரையாசிரியர், 'இராச வாகனமாகிய அத்திரி' என்று உரை எழுதியுள்ளார். ஆகவே அத்திரி அக்காலத்தில் உயர்வகை ஊர்தியாகக் கருதப்பட்டமை புலனாகிறது.*

**குதிரை**

குதிரை வண்டிகள் தேர் என்று கூறப்பட்டன. குதிரை வண்டிகளைச் சங்க நூல்கள் கூறுகின்றன. சிறுபாணாற்றுப்படை குதிரை வண்டியைக் கூறுகிறது **(சிறு. 251-261)**. புலவர் உலோச்சனார், ஒருவர் குதிரை வண்டியில் வந்ததைக் கூறுகிறார் **(அகம். 400:9-16)**. அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார் தம்முடைய செய்யுள்களில் குதிரை வண்டிகளைக் கூறுகிறார் **(அகம். 244:12-13, 344:7-11, 314:8-10)**. மேலும் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் தம்முடைய செய்யுளில் குதிரை வண்டியைக் கூறுகிறார் **(அகம். 334:11-15)**. மருதன் இளநாகனாரும் நான்கு குதிரைபூட்டிய வண்டியைக் கூறுகிறார் **(அகம். 104:3)**. மாங்குடிமருதனாரும் **(குறு. 173:1-3)**, புல்லாளங்கண்ணியாரும் **(அகம். 154:11-13)**, மருங்கூர்கிழார் பெருங்கண்ணனாரும் **(அகம். 80:8-13)**, அரிசில்கிழாரும் **(புறம். 146:11)**, இடைக்காடனாரும் **(அகம். 194:17-91)** குதிரை வண்டிகளைத் தம்முடைய செய்யுள்களில் குறிப்பிடுகின்றனர். ஆனால் அக்குதிரை வண்டிகள் வாணிகப் பொருள்களை ஏற்றிச்செல்லும் சரக்கு வண்டிகளாகப் பயன்படுத்தப்படவில்லை என்பது பாடற்சான்றுவழித் தெளிவாகிறது.

**மாடும் மாட்டு வண்டியும்**

வணிகப் பொருள்களைக் கொண்டு போவதற்கு எருதுகள் பயன்பட்டன. மாட்டு வண்டிகளில் வணிகப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு சென்றனர். வணிகர் பலர் ஒன்றாகச் சேர்ந்து பொருள்களை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு செல்வர். இதற்கு வாணிகச் சாத்து என்பது பெயர். அவர்கள் தங்களோடு வில் வீரர்களையும் அழைத்துக் கொண்டு சென்றனர். ஏனென்றால் காட்டு வழிப்பறிக் கொள்ளைக்காரர் பொருள்களைக் கொள்ளையடிப்பதும் உண்டு. கொள்ளைக்காரர்களை அடித்து ஓட்டுவதற்காக வாணிகச் சாத்து வீரர்களையும் தம்முடைய சாத்துடன் அழைத்துச் சென்றுள்ளனர்.

**கழுதை**

வணிகர், வணிகப் பொருள்களை ஊர் ஊராகக் கொண்டு செல்வதற்குக் கழுதைகளைப் பயன்படுத்தினர். பாறைகளும் குன்றுகளும்

*உள்ள நாடுகளுக்குச் செல்ல கழுதைகள் பெரிதும் பயன்பட்டன. கழுதைகளின் முதுகளின் மேல் சரக்குப் பொதிகளை ஏற்றிக் கொண்டு வாணிகச் சாத்து (வணிகக் கூட்டம்) ஒன்று சேர்ந்து போயிற்று. எல்லைப் புறங்களில் வழிப்பறிக் கொள்ளைக்காரர் வழிபறித்துக் கொள்ளையிட்டால் அவர்களை அடித்து ஒட்டுவதற்கு வாணிகச் சாத்தர் வில் வீரர்களையும், வாள் வீரர்களையும் துணையாக அழைத்துச் சென்றனர். வணிகப் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்னர் அவர்கள் நாள்நிமித்தம் பார்த்து நல்லவேளையில் புறப்பட்டனர். வழிப்பறிக் கொள்ளைக்காரர் இவ்வீரர்களையும் கொன்று பொருள்களைக் கொள்ளையடிப்பதும் உண்டு.*

**களரி பரந்த கன்னெடு மருங்கின்**
**விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்**
**மைபடு திண்டோள் மலிர ஆட்டிப்**
**பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**
**திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த**
**படுபுலாக் கமழும் ஞாட்பில் (அகம். 89:9-14)**

**நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்**
**புறம்நிறைப் பண்டத்துப் பொறை (அகம். 343:12-13)**

*பலாப்பழம் அளவாகச் சிறுசிறு பொதிகளாகக் கட்டப்பட்ட மிளகு மூட்டைகளைக் கழுதைகளின் மேல் ஏற்றிக்கொண்டு வணிகச் சாத்தர் ஊர்ப் பயணஞ் சென்றனர். இடைவழியில் சுங்கச் சாவடிகளில் சுங்கஞ் செலுத்தினர். சுங்கச் சாவடிகளில் வில் வீரர்கள் காவல் இருந்தனர்.*

**தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட**
**சிறுசுகளைப் பெரும்பழங் கடுப்பமிரியல்**
**புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து**
**அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**
**வில்லுடை வைப்பின் வியன்காட் டியவு (பெரும். 77-82)**

*கிழக்குப் பக்கத்து நெய்தல் நிலத்தைச் சார்ந்த கடற்கரைப் பக்கங்களில் உண்டான உப்பை, மூட்டைகளாகக் கட்டிக் கழுதைகளின் மேல் ஏற்றிக் கொண்டு மேற்கேயுள்ள ஊர்களுக்கு வணிகர் சென்றனர்.*

**அணங்குடை முந்நீர் பரந்த செருவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படையமைத் தெழுந்த பெருஞ்செ யாடவர்**
**நிரைபரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**
**குறைக்குளம் புதைத்த கல்பிறழ் இயவு (அகம். 207:1-6)**

*வணிகச் சாத்தரை வென்று கொள்ளைக்காரர் வழிப்பறித்ததைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.*

**....................சாத்தெறிந்து**
**அதர்கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்**
**கொடுவில் ஆடவர் (அகம். 167:7-9)**

*பாண்டி நாட்டவராகிய மருதன் இளநாகனாரும் இதை உறுதி செய்கிறார்.*

**மழைபெயல் மறந்த கழைத்திரங் கியவில்**
**செல்சாத் தெறியும் பண்பில் வாழ்க்கை**
**வல்வில் இளையர் (அகம். 245:5-7)**

*சங்ககால மக்கள் வாழ்வில் வேளாண்மைத் தொழில் சிறப்புற்றிருந்தது. அதனுடன் பலதரப்பட்ட பிற தொழில்களும் நடைபெற்று வந்தன. இதன் மூலம் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைத் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் பயன்பாட்டிற்கு எடுத்துக் கொண்டது போக மீதமுள்ளவற்றை விற்பதற்கு முற்பட்டனர். இதுவே வணிகம் நடைபெற அடிப்படையாக அமைந்தது. ஓர் ஊரில் மிகுதியாயுள்ள பொருளைத் தன்னில் உள்ள ஒரு நபருடன் பிற இடத்திற்கு எடுத்துச்சென்று விற்பனை செய்யத் தொடங்கினர். இங்குதான் 'வணிகர்' என்ற ஒரு பிரிவு தோற்றம் பெறுகின்றது. பிற இடத்துப் பொருளை வாங்கிக் கொண்டு*

தம்முடைய பொருளைக் கொடுத்தனர். இதுவே பழந்தமிழ்வணிகர்களின் வணிகப் போக்காக இருந்தது. இச்சந்தைப்படுத்தும் முறை பண்டமாற்று வணிகம் என்று வழங்கப்படுகின்றது. இவ்வாறு வாங்குதல், விற்றல் என்ற பெருநிலையில் வணிகத் தொழில் அமைகின்றது. மேலும் வணிகர் மிகச் சிறந்த பண்பாடு உடையவர்களாகவும் இருந்தனர் என்பதை,

**நெடு நுகத்துப் பகல் போல**

**நடுவு நின்ற நன் னெஞ்சினோர் (பட்டின. 206-207)**

என்னும் பாடல் அடிகள் கொண்டு அறியமுடிகின்றது. பழந்தமிழ் வணிகர்கள் நடுநிலையாளர் என்பதை இதன்வழி உணரலாம்.

**தொல்காப்பியர் பார்வையில் வணிகர்கள்**

தமிழில் முழுமையாகக் கிடைத்துள்ள முதல் நூலான தொல்காப்பியத்தில் வணிகர் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. அவற்றில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு பிரிவினரில், வணிகர் என்போர் மூன்றாம் நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். இது தொல்காப்பியர் கால உயர் சாதியினர்க்கான அளவீட்டு முறையாகும். வணிகர்கள் வணிகத் தொழில் செய்வதையே வாழ்க்கை நெறியாகக் கொண்டு செயலாற்றினர் என்பதனை,

**வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை (தொல். மரபு. 78)**

என்ற செய்யுள் உணர்த்துகிறது. இது வணிகம் செய்யும் வழக்கம் வைசிகனுடைய தொழில் என்பதை அறியலாம். இவர்கள் வணிகத்தோடு தானியங்களை விளைவிக்கும் தொழிலிலும் ஈடுபட்டதனை,

**மெய்தெரி வகையின் எண்வகை உணவின்**

**செய்தியும் வரையார் அப்பாலான (தொல். மரபு. 79)**

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். இத்தொழிலும் வணிகத்துடன் தொடர்புடைய தொழிலாகும். எனவே, தொல்காப்பியர் காலத்திலே வணிகர்களும் நிலக்கிழவர்களாக இருந்து வந்ததை இதன்வழி அறிய முடிகின்றது.

**சங்க நூலில் வணிகர்களின் ஆளுமை**

பத்துப்பாட்டில் அமைந்த நூல்கள் பழந்தமிழ் வணிகர்களைப் பற்றிய செய்திகளை விவரிக்கின்றது. கடல்சூழ அமையப்பெற்ற காவிரிப்பூம்

பட்டினத்து வணிகர்களைக் குறிக்கும் வகையில் பட்டினப்பாலையும் மதுரை நகர வணிகர் நிலையை விளக்கும் வகையில் மதுரைக்காஞ்சியும் அமைந்துள்ளன. தமிழ்நாட்டில் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்ததனால், தமிழர் இயற்கையாகவே கடலில்பயணம் செய்வதிலும் வணிகம் செய்வதிலும் தொன்றுதொட்டு ஈடுபட்டிருந்தனர். மேலும் கடற்கரையாகிய நெய்தல் நிலங்களில் வாழ்ந்தவர்கள் நாள்தோறும் கடலில் சென்று மீன்பிடித்து வந்து வாழ்க்கையை நடத்தினர். ஆதலால் கடலில் சென்று வணிகம் செய்வது பழங்காலத் தமிழர்களிடையே இயற்கையான தொழிலாக இருந்தது.[3]

கடலில் சென்று வணிகம் செய்தது போலவே தரைவழியாகவும் பல நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தனர். தமிழ்நாட்டில் மட்டுமில்லாமல் தரைவழியாக வட இந்திய நகரங்களுக்கும் சென்று வணிகம் செய்தனர். பெரிய வணிகம் செய்தவர்களுக்குப் பெருங்குடி வணிகர்என்றபெயர் வழங்கப்பட்டது. வணிகத் தொழில் அக்காலத்திய வணிகர்களின் ஆளுமையினால் வளமையடைந்தது. இவர்களுக்கு இத்தொழிலே பண்பாட்டையும் நாகரிகத்தையும் கற்றுக் கொடுத்தது எனலாம். இவ்வணிகர்களைப் பற்றி,

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின்** **(குறள். 120)**

என்று வள்ளுவர் குறித்துள்ளார்.

**உப்பு வணிகர்**

‘உப்பில்லாப் பண்டம் குப்பையிலே’ என்பது பழமொழி. உணவுக்குச் சுவை அளிப்பது உப்பு. ஆகையால் இது ‘வெண்கல் அமிழ்தம்’ எனப்பட்டது. உப்பு கடல் வணிகத்தில் பெரும் பங்கு பெற்றது. உப்பு வணிகப் பொருளாகவும், உணவுப் பொருளாகவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. உப்பங்கழிகளில் உப்பு விளைந்த பிறகு உப்பைக் குவியல் குவியலாகக் குவித்து வைத்தனர். பிறகு ஆறுகளும் கால்வாய்களும் உள்ள ஊர்களில் படகுகளில் உப்பை ஏற்றிக் கொண்டு விற்பனை செய்ததனை,

**கொழும்பல் குடிச் செழும் பாக்கத்துக்**
**குறும் பல்லூர் நெடுஞ் சோணாட்டு**
**வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி** **(பட்டின. 27-29)**

*எனும் அடிகள் வெளிப்படுத்துகின்றன.*

*சங்ககாலத்து வாணிபம் தரை வழியாகவும் கடல் வழியாகவும் நடந்தது. தரைவழியாக வாணிகம் செய்த பெரு வாணிகருக்கு மாசாத்துவன் என்பது பெயர். அக்காலத்தில் சாலைகள் பெரிதும் இல்லை. சாலைகளிலும் எல்லைப் புறங்களில் கொள்ளைக்காரர் இருந்தார்கள். கடல் வழியாக நடந்த வணிகம் தரை வணிகத்தைவிடச் சற்று அதிகமாகவும் நன்றாகவும் நடந்தது. கடல் வணிகத்தை நடத்திய பெரிய வணிகருக்கு மாநாய்கன் (மாநாவிகள், மா + நாவிகன்) என்பது பெயர். கடற் பிரயாணத்திலும் காற்று, புயல்களினால் கப்பல்களுக்குச் சேதம் உண்டாயிற்று. கடற் கொள்ளைக்காரர் அதிகம் இல்லை. "கடல் வாணிகம் இரண்டு விதமாக நடந்தது. கரை வழி ஓரமாகவே கப்பல்களை ஓட்டி நடத்தின வாணிகம் ஒன்று. கரைவழி ஓரமாகச் செல்லாமல் நடுக்கடலில் கப்பல்களைச் செலுத்திக் கடல் கடந்த நாடுகளுக்குப் போய் செய்த வாணிகம் இன்னொன்று."[4]*

*தரைவழி வாணிகமாக இருந்தாலும் கடல்வழி வாணிகமாக இருந்தாலும் இக்காலத்து வசதிகளைப் போல அக்காலத்தில் இல்லை. ஆனாலும் அந்தக் கடினமான சூழ்நிலைகளிலும் தரை வணிகமும், கடல் வணிகமும் நடந்தன. தமிழ்நாட்டு வணிகர் அயல்நாடுகளுக்குச் சென்று வணிகஞ் செய்தனர். மேற்கே இத்தாலி, கிரேக்க தேசம் (யவன நாடு) முதல்கிழக்கே சாவக நாடு (கிழக்கத்தியத் தீவுகள்) பர்மா, மலாயா வரையிலும் தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே கங்கைக் கரைப் பகுதி வரையிலும் அக்காலத்துத் தமிழர் வணிகம் சிறப்பாக நடந்தது.*

**தமிழ்நாட்டு வணிகர்**

*தமிழ்நாட்டின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்தபடியால் தமிழர் இயற்கையாகவே கடற் பிரயாணஞ் செய்வதிலும் கப்பல் வாணிகம்*

*செய்வதிலும் தொன்றுதொட்டு ஈடுபட்டிருந்தனர். மேலும் கடற்கரையாகிய நெய்தல் நிலங்களில் வாழ்ந்தவர்கள் நாள்தோறும் கடலில் சென்று மீன்பிடித்து வந்து வாழ்க்கையை நடத்தினர். ஆகையால் கடலில் போய் வருவது தமிழர்களுக்குப் பழங்காலம் முதல் இயற்கையான தொழிலாக இருந்தது. கடலில் நெடுந்தொலைவு கப்பலில் போகவும் வரவும் பழங் காலத்திலேயே பழகினர். கரிகால் சோழனுடைய முன்னோரான ஒரு சோழன் கடற்காற்றின் உதவியினால் கடலில் நாவாய் ஓட்டினான்.*

**நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக**

*என்று புறநானூற்றுச் செய்யுள் **(66)** கூறுகிறது. பழைய காலத்துப் பாண்டியன் ஒருவன் தன் அடி அலம்பக் கடலில் நின்றான் என்றும், கடலில் தன் வேலை எறிந்து அதை அடக்கினான் என்றும் கூறப்படுகிறான். இதன் உட்கருத்து , அவன் கடலை அடக்கிக் கடலில் நாவாய் செலுத்திக் கடல் பயணத்தை எளிதாக்கினான் என்பது. இவற்றிலிருந்து கடலில் பயணம் செய்வதைத் தமிழர் தொடக்க காலத்திலிருந்து மேற்கொண்டனர் என்பது புலனாகின்றது. கடலில் கப்பலோட்டுவது அக்காலத் தமிழருக்குக் கைவந்த செயலாயிற்று. அவர்கள் கடல் கடந்து போய் வணிகம் செய்தார்கள்.*

*கடலில் சென்று வாணிகஞ் செய்ததுபோலவே தரை வழியாகவும் பல நாடுகளுக்குப் போய் வணிகம் செய்தார்கள். தமிழ்நாட்டில் மட்டும் அல்லாமல் தரை வழியாக வடஇந்திய நகரங்களுக்கும் சென்றனர். பெரிய வணிகம் செய்தவர்களுக்குப் 'பெருங்குடி வாணிகர்' என்பது பெயர். அயல் நாடுகளுக்கு வாணிகஞ் செய்யச் சென்றவர் ஒன்றுசேர்ந்து கூட்டமாகச் சென்றனர். வணிகக் கூட்டத்துக்கு 'வணிகச்சாத்து' என்பது பெயர்.*

*தமிழர்தம் வணிகப் பரப்பு, சாலமன் வேந்தன் முதல் கிளியோபாட்ரா வாழ்ந்த கிரேக்கம் வரை பரவியிருந்தது. வணிகக் கட்டமைப்பில் உற்பத்தியாளர், வணிகர், விற்பனை நிலையம், நுகர்வோர் என ஒரு சங்கிலி பராமரிக்கப்பட்டு வருகின்றது. பண்டை உற்பத்திச் சூழலில் நுகர்வோர் குறித்த கருத்தாக்கங்களைவிட வணிகர் குறித்த தரவுகள் மிகுதியாக உள்ளன.*

*பொதுவாகச் சோழநாடு சிறந்த விவசாய உற்பத்தி மையமாகும். அச்சோழ நாட்டின் வணிகச் சூழல் கொண்டு பண்டைத் தமிழரின் வணிக நிருவாகத் திறனை எளிதில் அறியலாம்.*

**உணவுப் பொருள் வணிகம்**

*காவிரி கடலில் கலக்கும் இடத்தில் இருந்தாலும் சோழநாட்டில் கடல் பொருள் உற்பத்திகளைவிடப் பயிர் உற்பத்திக்கே முதன்மை தரப்பெற்றுள்ளது. எனவே, சோழ நாட்டு நெல்லுக்குப் பதிலாக உப்பு, பண்டமாற்றாகப் பெறப்பட்டுள்ளது. பண்டமாற்று வணிகம் கடல் கடந்த நிலையில் இடம்பெற்றதற்கு இது சிறப்புச் சான்றாகும். இதனை,*

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றின்**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணைநிலைப் புரவியின் அணைமுதல்பிணிக்கும்**
**கழிசூழ் படப்பை (பட்டின. 29-32)**

*என்ற அடிகளால் அறியலாம். மேலும் ஈழத்து உணவுப் பொருள்கள் இறக்குமதியாய்த் தமிழகம் வந்துள்ளன.*[5]

*சம்பு என்னும் நெல்லும் அளம் என்னும் உப்புமே முதன்மைப் பண்டமாற்றுப்பொருளாக இருந்தமையைக் குறிப்பிடலாம். பழந்தமிழரின் குறிப்பிடத்தக்க வணிகப் பொருளாகவும் இவையே இருந்துள்ளன.*

**பொது வணிகம்**

*பொது வணிகத்தில் உணவுப் பொருள் அல்லாத பிற பயன்பாட்டுப் பொருள்கள் (அணிகலன்கள், நறுமணத் திரவியங்கள்) எனப் பல்வேறு பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டுத் தமிழர்களால் பயன்படுத்தப்பட்டு வந்தன. பொதுவணிகம் நீர்வழி மற்றும் நிலவழியில் நடந்து வந்துள்ளன.*

**இறக்குமதி, ஏற்றுமதி**

*தமிழர்களுக்கான இறக்குமதிப் பொருள்கள் உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் இருந்துவந்தன. அயல்நாட்டு வணிகத்தில் குதிரைகள் தமிழர்களால் மிகுதியாக இறக்குமதி செய்யப்பட்டன. இதனை,*

**நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்** **(பட்டி. 185)**

என்ற அடியினால் அறியலாம். மேலும் சீன நாட்டிலிருந்து நறுமணப் பொருள்களான கற்பூரம், பன்னீர், குங்குமம் இறக்குமதி செய்யப்பெற்றன.

அயல்நாட்டு வணிகத்தில் குறிப்பிடத்தக்கது மொழி தெரியாத, காண்பதற்கு அரிய நாட்டின் சிறப்புக் கூறினை அறிந்து அந்நாட்டுப் பொருள்களைப் பெற்றதும் முறையறிந்து பயன்படுத்தியதுமே ஆகும். மேலும் அரபு, சீனம் முதலிய நாட்டவர்களோடும் தொடர்புகொள்ள அடிப்படையான பன்மொழி அறிவும் குறிப்பிடத்தக்கதாகும். அவ்வகையில் தமிழரின் வணிகத் தொடர்பை,

**காலின் வந்த கருங்கறி மூடையும்**

**. . . . . . . . . . . . . . . . . .**

**ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்**

**அரியவும் பெரியவும் நெறிய ஈண்டி** **(பட்டின. 186-192)**

என்ற அடிகளால் அறியலாம்.

**தரை வணிகம்**

அயல் நாடுகளுக்குத் தரை வழியாகச் சென்று வணிகஞ் செய்த சாத்தர் கழுதைகள், எருதுகள், வண்டிகள் ஆகியவற்றில் வணிகப் பொருள்களை ஏற்றிக்கொண்டு கூட்டமாகச் சென்றனர். அவர்கள் போகிற வழிகளில் மனிதவாசம் இல்லாத பாலைநிலைகளில் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் கொள்ளையடித்தார்கள். தமிழ்நாடு உள்ளிட்ட இந்தியப் பகுதி முழுவதுமே அக்காலத்தில் வழிப்பறிக் கொள்ளை செய்த வேடர்கள் இருந்தார்கள். ஆகையினாலே வணிகச் சாத்தர் அயல் நாடுகளுக்கு வணிகஞ் செய்யப்போகும்போது கூட்டமாகச் சேர்ந்து போனதுமன்றித் தங்களோடு படைவீரர்களையும் அழைத்துக்கொண்டு செல்லப் பழகினர். வணிகர் சாத்தை வேடர்கள் கொள்ளையடித்ததைச் சங்க நூல்கள் கூறுகின்றனர். மருதன் இளநாகனார், பாலைநிலத்தின் வழியே சென்ற வணிகச் சாத்தைக் கொள்ளையிட்ட வேடரைக் கூறுகிறார்.

**மழைபெயர் மறந்த கழைதிரங்கு இயவில்**

**செல்வாத்து எறியும் பண்பில் வாழ்க்கை**

**வல்வில் இளையர்** (**அகம். 245:5-7**)

*கடியலூர் உருத்திரங்கண்ணனாரும், வழிப்பறிக் கொள்ளையிட்ட வில் வேடரைக் கூறுகிறார்.*

**சாத்தெறிந்து**
**அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்**
**கொடுவில் ஆடவர்** (**அகம். 167:7-9**)

*பலாப்பழம் அளவாகக் கட்டின மிரியல் (மிளகு) மூட்டைகளைக் கழுதைகளின் முதுகின்மேல் ஏற்றிக்கொண்டு வணிகச் சாத்தர் தங்களுடைய வில் வீரர்களோடு சென்றனர். ஆங்காங்கே வழியில் இருந்த சுங்கச் சாவடிகளில் அரசனுடைய அலுவலர்கள் அவர்களிடமிருந்து சுங்கம் வாங்கினர். இதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.*

**சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்**
**கருவி லோச்சிய கண்ணகன் எறுழ்த்தோள்**
**கடம்பர் நெடுவேள் அன்ன மீளி**
**உடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்**
**தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட**
**சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப மிரியல்**
**புணர்ப் பொறை தாங்கிய வடுவாழ் நோன் புறத்து**
**அணர்ச் செவிக் கழுதைச் சாத்தோடு வழங்கும்**
**உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்**
**வில்லுடை வைப்பின் வியன்காட்டியளவு** (**பெரும். 73-82**)

*வணிகச்சாத்துடன் பாலைநிலத்து மறவர் செய்த போரை மாங்குடி மருதனார் கூறுகிறார்.*

**களரி பரந்த கல்நெடு மருங்கில்**
**விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்**
**மைபடு திண்டோள் மலிர ஆட்டிப்**
**பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**
**திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த**
**படுபுலாக் கமழும் ஞாட்பில்** (**அகம். 89:9-14**)

வேறு நாடுகளுடன் வணிகம் செய்த வணிகச் சாத்துக்கு அக்காலத்தில் துன்பங்கள் இருந்தன. அவர்களுடைய பொருளுக்கும் உயிருக்கும் இடர் இருந்தது. பேரிடர்களையும் கருதாமல் அவர்கள் வணிகம் செய்தனர். சாத்துக்களின் தலைவனான வணிகனுக்கு மாசத்துவான் என்று பெயர் வழங்கிற்று. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த மாசாத்துவர்களில் ஒருவன், கோவலனுடைய தந்தையாகிய மாசாத்துவான் ஆவான். அவன் சோழ அரசனுக்கு அடுத்த நிலையில் பெருங்குடி மக்களில் முதல் குடிமகனாக இருந்தான். அவனைச் சிலப்பதிகாரம் இவ்வாறு கூறுகிறது.

**பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த**
**ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்**
**வருநிதி பிறர்க் காற்றும் மாசாத்துவா னென்பான்**
**இருநிதிக் கிழவன்மகன் ஈரெட்டாண் டகவையான்**

**(சிலம்பு. மங்கல. 31-34)**

**கரையோர வாணிகம்**

கொற்கை, தொண்டி, பூம்புகார், சோபட்டினம் முதலான தமிழ் நாட்டுத் துறைமுகப்பட்டினங்களிலிருந்து நாவாய்களில் புறப்பட்டுச் சென்ற தமிழ் வாணிகர் கிழக்குக் கடல் ஓரமாகவே நாவாய்களைச் செலுத்தி நெல்லூர், கலிங்கப்பட்டினம், தம்ரலிப்தி (வங்காளத் துறைமுகப்பட்டினம்) முதலான பட்டினங்களுக்குச் சென்றனர். பிறகு கங்கையாறு கடலில் கலக்கும் புகர்முகத்தின் ஊடே கங்கையாற்றில் நுழைந்து கங்கைக்கரையில் இருந்த பாடலிபுரம், காசி (வாரணாசி) முதலான ஊர்களில் வாணிகம் செய்து திரும்பினார்கள். 'கங்கை வங்கம் போக்குவர் கொல்லோ' என்று நற்றிணை (189:5) கூறுகிறது. கங்கைக் கரையில் பாடலிபுரத்தில் தமிழர் வாணிகம் செய்தபோது கி.மு. 4 ஆம் நூற்றாண்டில் மகத நாட்டை ஆண்ட நந்த அரசர் தங்களுடைய தலைநகரமான பாடலிபுரத்தில் கங்கையாற்றின் கீழே பெருஞ் செல்வத்தைப் புதைத்து வைத்திருந்ததைப் பற்றி அறிந்தனர். தமிழக வணிகரின் கருவூலமாக நந்த அரசரின் செல்வப் புதையலைத் தமிழ் நாட்டவர் அக்காலத்தில் அறிந்திருந்தனர். மாமூலனார் என்னும் சங்கப் புலவர் தம்முடைய செய்யுளில் நந்தருடைய நிதியைக் கூறுகிறார்.

**பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை**

**நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ (அகம். 265:4-6)**

*தமிழ் வணிகர் கலிங்கநாட்டில் போய் வாணிகம் செய்தனர். அந்த வணிகச் சாத்து கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.மு 150 வரையில் நூற்றைம்பது ஆண்டுகள் அங்குத் தங்கி வணிகம் செய்தது. அவர்களுடைய வாணிகம் நாளுக்கு நாள் பெருகிச் செல்வாக்கும் புகழும் அடைந்தது. அக்காலத்தில் கலிங்க நாட்டை அரசாண்ட காரவேலன் என்னும் அரசன் தமிழ் வணிகரால் தன்னுடைய ஆட்சிக்கே இடர் உண்டாகும் என்று அஞ்சி அந்த வணிகச் சாத்தை அழித்துவிட்டான். அந்தச் செய்தியை அவ்வரசன் எழுதியுள்ள 'ஹத்தி கும்பா' குகைக் கல்வெட்டெழுத்துச் சாசனத்திலிருந்து அறியலாம். கலிங்கத்தில் வணிகஞ்செய்த தமிழர் கலிங்க நாட்டுப் பொருள்களைத் தமிழகத்துக்கும் தமிழகத்துப் பொருள்களைக் கலிங்க நாட்டுக்கும் கொண்டு போய் விற்றனர். கலிங்க நாட்டிலிருந்து தமிழ் நாட்டுக்குக் கொண்டு வரப்பட்ட முதன்மையான பொருள் பருத்தித்துணி. பெருவாரியாகக் கலிங்கத் துணி தமிழ்நாட்டில் இறக்குமதியாயிற்று. கலிங்கத்திலிருந்து வந்தபடியால் அத்துணி கலிங்கத்துணி என்று சிறப்பாகப் பெயர்பெற்றது. பிறகு காலப்போக்கில் கலிங்கம் என்னும் சொல் வழங்கப் பட்டிருக்கிறது. கலிங்க நாட்டிலிருந்து அக்காலத்தில் தமிழ் நாட்டுக்கு வந்த இன்னொரு பொருள் 'சந்தனக் கல் வடவர் தந்த வான்கேழ் வட்டம்' என்பதாகும். இப்பணிகளுக்குத் தரைவழி ஊர்திகளே பெரும் பங்காற்றியுள்ளன.*

*ஆந்திர நாட்டில் அமராவதி நகரத்தில் (தான்ய கடகம்) சங்க காலத்திலே தமிழ் வணிகர் சென்று வணிகஞ் செய்தனர். அங்கிருந்த அமராவதி பௌத்தத் தூபி கி.மு. 200 இல் தொடங்கி கி.பி. 200 வரையில் கட்டப்பட்டது. அந்தக் கட்டடத்தைக் கட்டுவதற்குப் பலர் பல வகையில் உதவி செய்தார்கள். அப்போது அங்கு வணிகஞ் செய்து கொண்டிருந்த தமிழ் வணிகரும் அக்கட்டடம் கட்டுவதற்கு உதவி செய்தனர். தமிள (தமிழ) கண்ணன் என்னும் வாணிகனும் அவனுடைய தம்பியாகிய இளங்கண்ணனும் அவர்களுடைய தங்கையாகிய நாகையும் அமராவதி தூபி கட்டுவதற்கு துணைசெய்துள்ளனர். இந்தச் செய்தி அங்கிருந்து கிடைத்த*

*ஒரு கல் சாசனத்தினால் தெரிகிறது. $3^1/_2$ அடி உயரமும் 2 அடி 8 அங்குல அகலமும் உள்ள ஒரு கல்லில் பிராமி எழுத்தினால் எழுதப்பட்ட ஒரு சாசனம் இதைக் கூறுகிறது. இப்போது அந்தக் கல் இப்போது இலண்டன் காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது. அதனாலும் கலிங்க நாட்டில் தமிழர் வாணிகஞ் செய்த செய்தி அறியப்படுகிறது.*

*தமிழ் வாணிகச் சாத்து (வாணிகக்குழு) கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் இலங்கைக்குச் சென்று அக்காலத்துத் தலைநகரமாக இருந்த அநுராதபுரத்தில் வணிகஞ் செய்ததை அங்குள்ள ஒரு பிராமி எழுத்துக் கல்வெட்டுச் சாசனம் கூறுகிறது. வாணிகச் சாத்தினுடைய மாளிகை இற்றைக்கு 22,000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டிருந்தது. பிற்காலத்தில் மறைந்துபோன அந்த மாளிகை பல நூற்றாண்டுகளாக மண்மூடிக்கிடந்தது. அண்மைக் காலத்தில் மழைநீரினால் அந்த மண்மேடு கரைந்து அங்குக் கல்லில் எழுதப்பட்ட பிராமி எழுத்துக்கள் வெளிப்பட்டன. கற் பாறையோடு சார்ந்திருந்த அந்த மாளிகையில் அக்காலத்தில் தமிழக நாவாய்த் தலைவன் அமர்ந்திருந்த இடத்திலும் மற்ற வணிகத் தலைவர்கள் அமர்ந்திருந்த இடங்களிலும், அவர்களுடைய பெயர்கள் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலே தமிழ் வாணிகர் அநுராதபுரத்தில் பெரிய வாணிக நிலையம் அமைத்திருந்தமை தெளிவாகிறது.[6]*

*கி.மு. இரண்டு, ஒன்றாம் நூற்றாண்டுகளில் இலங்கையில் வேறு சில தமிழ் வணிகர் இருந்ததை அக்காலத்துப் பிராமிய எழுத்துச் சாசனங்கள் கூறுகின்றன.[7]*

*தமிழ்நாட்டு வணிகர் இலங்கைக்குச் சென்று வணிகஞ்செய்ததைச் சங்க இலக்கியங்கள் கூறவில்லை. தமிழ வாணிகர் இருவர் இலங்கையைக் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் அரசாண்டதை இலங்கை நூல்கள் கூறுகின்றன. சேனன், குட்டகன் என்னும் தமிழ் வணிகர்கள் அக்காலத்தில் இலங்கையை அரசாண்ட சூரத்திஸ்ஸன் என்னும் மன்னனோடு போரிட்டுள்ளனர்.*

*யவனர்களைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவற்றின் வாயிலாக உரோம நாட்டோடு வணிக-கலாச்சாரப் பண்பாட்டு உறவுகளை அறியலாம். தமிழ்நாட்டு வணிகம் செய்த பிற நாட்டவரான கிரேக்கர், ரோமர், யூதர், சீரியர் அனைவரும் பொதுவாக யவனர் எனப்பெற்றனர்.*

*யூதர், உரோமர், கிரேக்கர், சீரியர் ஆகிய நான்கு பிரிவனருக்கும் கிரேக்க மொழி, பொது மொழியாக விளங்கியிருக்கிறது. கிரேக்கரும், சீரியரும் யூதரும், தமிழகத்துடன் வணிகத் தொடர்பை வளர்த்துக் கொள்ளலானார்கள். தமிழகத்தில் உரோமாபுரி மக்கள் குடியேடி வாழ்ந்து வந்த இடங்களில் எல்லாம் அவர்களும் இணைந்து வாழலானார்கள். அவர்களுள் பலர் தமிழகத்திலேயே நீண்டகாலம் தங்கிவிட்டனர்.*

**உரோம நாணயங்கள்**

*இந்தியாவில் கிடைத்துள்ள உரோனியக் காசுகளும், புதையல்களும் விந்தியமலைக்குத் தெற்கே கிடைத்துள்ளன. இவை நான்கு முதல் நூறு ஆயிரம் காசுகள் வரை கொண்ட தனித்தனியான புதையல்களாக அகப்பட்டுள்ளன. இக்காசுகளில் பெரும்பான்மையானவை உரோமாபுரியை ஆண்ட அரசர்களான அகஸ்டஸ் (கி.மு. 26 கி.பி. 14), டைபிரியஸ் (கி.பி. 14-37) ஆகியோர் காலத்தவை என்று கண்டறிந்துள்ளனர்.[8]*

*மதுரையில் வையையாற்றுக் கரை பகுதியிலும் பிற இடங்களிலும் கணக்கற்ற உரோமப் பொன், வெள்ளி, செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. இவை மதுரையில் யவனர் குடியிருப்பை உணர்த்துகின்றன. இந்நாணயங்கள் பொருள்களுக்குப் பண்டமாற்றாகத் திகழ்ந்துள்ளன. பண்டங்கள் சென்றுவர நிலவழி ஊர்திகள் ஊடகமாகியுள்ளன.*

**பிற நாட்டு வாணிகர்**

*பழங்காலத்துத் தமிழர் தரை வழியாகவும் கடல் வழியாகவும் இந்தியா முழுவதும் சென்று வணிகம் செய்தார்கள். உஞ்சை (உச்சயினி), கலிங்கப்பட்டினம், காசி (வாரணாசி), பாடலி (பாடலிபுரம்) முதலான இடங்களிலும் கடல்கடந்த நாடுகளாகிய காழகம் (பர்மா), அருமணவன்*

(Ramanna), *தக்கோலம்* (Takkola), *கிடாரம் (கடாரம்), சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள்) முதலான இடங்களுக்கும் சென்று வணிகஞ் செய்தமை பெறப்படுகிறது. அத்தகைய நிலையில் நிலவழி ஊர்திகளே பழந்தமிழருக்குப் பெரிதும் பயன் நல்கியுள்ளன.*

*தமிழக வணிகர் அயல்நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தது* போலவே *அயல்நாட்டு வணிகரும் தமிழகத்துக்கு வந்து வாணிகம் செய்தனர். அக்காலத்தில் வணிகத்தில் உலகப் புகழ்பெற்ற காவிரிபூம் பட்டினத்துத் துறைமுகத்தில் அயல்நாடுகளிலிருந்து கப்பலோட்டி வந்த வேறு மொழி பேசிய மக்கள் தங்கியிருந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.*

**பயனற வறியா யவனர் இருக்கையும்**
**கலந்தரு திருவிற் புலம் பெயர் மாக்கள்**
**கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பும்** **(சிலம்பு. 5:10-12)**

**மொழி பெயர் தேத்தோர் ஒழியா விளக்கமும்** **(சிலம்பு. 6:143)**

**மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்**
**புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**
**முட்டாச் சிறப்பிற் பட்டினம்** **(பட்டின. 216-218)**

**அரபு வணிகர்**

*தமிழ்நாட்டுக்கு வடமேற்கிலிருந்து வந்த அராபிய வணிகர் சேர நாட்டின் முசிறித் துறைமுகத்துக்கு வந்து வணிகஞ் செய்தனர். முசிறியில் அவர்கள் வணிகஞ்செய்த இடத்துக்குப் பந்தர் என்று பெயரிட்டிருந்தனர். பந்தர் என்பதற்கு அரபு மொழியில் கடைவீதி என்பது பொருள். முசிறித் துறைமுகத்துப் பந்தரில் முத்துக்களும் விலையுயர்ந்த நகைகளும் விற்கப்பட்டன. பதிற்றுப்பத்து 6ஆம் பத்தில் (செய்யுள் 5) 'நன்கல வெறுக்கைத் துஞ்சுமு பந்தர்' என்றும், 7ஆம் பத்து 7ஆம் செய்யுளில், 'பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்' என்றும், 8ஆம் பத்து 4ஆம் செய்யுளில், 'பந்தர்ப் பயந்த பலர் புகழ் முத்தம்' என்றும் பந்தர் அங்காடி கூறப்படுகிறது. அரபியர் தமிழ்நாட்டோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்தபடியால் அரிசி என்னும் தமிழ்ச்சொல் அரபு மொழியில் சென்று ஒரூஜ் என்று*

வழங்குகிறது. அராபியர், அக்காலத்தில் தமிழ்நாடாக இருந்த சேர நாட்டிலிருந்து மூங்கிலைக் கொண்டுபோய் அரபி நாட்டில் வளர்த்தனர். அராபியர் தமிழ்நாட்டுப் பொருள்களை முதன்மையாகச் சேரநாட்டு மிளகைக் கொண்டு போய்ச் செங்கடல் துறைமுகங்களிலும் எகிப்து நாட்டில் நீல நதி, கடலில் கலக்கும் இடத்திலிருந்த அலக்சாந்திரியத் துறைமுகப் பட்டினத்திலும் விற்றனர். அங்கிருந்த பொருள்களைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் விற்றனர். இதுநிலவழி ஊர்திகளாலேயே வெற்றிகரமாக நிகழ்த்தப்பட்டது. அக்காலத்தில் அராபியர் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வணிகம் செய்யவில்லை. தமிழர் கிழக்கிந்தியத் தீவுகளுக்குப் போய் அங்கிருந்து கொண்டுவந்த பொருள்களை இங்கிருந்த அராபியர் வாங்கிக் கொண்டு போய் வெளிநாடுகளில் விற்றனர். தூரக் கிழக்கு நாடுகளில் உண்டான பொருள்களை மேற்கு நாடுகள் வாங்கிக் கொண்டு போவதற்குத் தமிழ்நாடு அக்காலத்தில் மைய வணிக இடமாக அமைந்திருந்தது. இதற்கு நிலவழிப் போக்குவரத்துப் பெரிதும் துணை புரிந்தது.

பண்டைய தமிழர்கள் பொருள்களை உற்பத்தி செய்து, பாதுகாத்தனர். தம் தேவைக்குப் போக எஞ்சியவற்றைப் பண்டமாற்று முறையில் மற்றவர்களுக்கு வழங்கினர். பால், தயிர், மோர் முதலிய பொருள்களைக் கொடுத்து நெல்லும் உப்பும் வாங்கினர். ஆடு மாடுகளைக் கொடுத்து பல தானியங்களைப் பெற்றனர். நெல், கம்பு, கேழ்வரகு போன்ற தானியங்களைப் பெறத் தம்மிடமிருந்த பொருள்களை மாற்றாகக் கொடுத்தனர். அதற்குப் பண்டமாற்று எனப் பெயரிட்டனர். இப்பண்டமாற்றுக்கு முதன்மையாகத் தேவைப்பட்டவை தரைவழி ஊர்திகள்.

முல்லை நிலத்தில் மேய்ச்சல் தொழில் புரிந்த கோவலர்கள் பண்டமாற்று முறையில் பொருள்களைப் பெற்றதைப் பெரும்பாணாற்றுப் படை பேசுகிறது.

*ஆய்ச்சியர்கள் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பர். தலையில் சுமந்து மோரை விற்பர். மோருக்குப் பண்டமாற்றாக நெல்லைப் பெறுவர். அந்நெல்லைக் கொண்டுவந்து சோறாக்கித் தம்முடைய சுற்றத்தாரை உண்பிக்கச் செய்வர்.*

*வெண்ணெயை உருக்கிப் பெற்ற நெய்க்குப் பண்டமாற்றாகப் பொன் கட்டிகளைப் பெறாமல், தன் மேய்ச்சல் தொழிலுக்கு ஏற்றாற் போலப் பால்தரும் எருமை, நல்ல பசுக்கள், கரிய எருமைக்கன்றுகள் வாங்குவர்.*[9]

**அளைவிலை உணவின் கிளை உடன் அருத்தி**
**நெய்விலைச் சுட்டிப் பசும்பொன் கொள்ளாள்**
**எருமை நல்ஆன் கருநாகு பெறூஉம்**
**மடி வாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின் (பெரும். 164-167)**

*குறுந்தொகையில் அதே செய்தி பேசப்படுகிறது. நெய்தல் நிலத்தில் விளையக்கூடிய உப்பைக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு நெல்லை வாங்கி வந்தனர்.*

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**
**உப்பு விளை கழனிச் சென்றனள் (குறு. 269:5)**

*ஐங்குறுநூற்றுப் பாடலில் பாண்மகள் ஒருத்தி கெடிறு என்னும் மீனுக்கு மாற்றாகப் பச்சைப் பயிற்றைப் பெறுகிறாள்.*

**முள்எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த**
**அதன்பெரு வட்டி நிறைய, மனையோள்**
**அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர (ஐங். 47)**

*பெருஞ்சித்திரனார் என்ற பெரும்புலவர் வள்ளல் குமணனை வாயாரப் பாடிப் பரிசில் பெற்று வந்தார். தாம் பெற்ற பரிசிலை மனைவியிடம் கொடுத்து அனைவருக்கும் கொடுக்கச் செய்கிறார். அப்போது அவர் ஒரு குறிப்பைக் கூறுகிறார். 'எல்லார்க்கும் கொடு, அவர்களுக்குக் கொடுப்பதால் பிற்காலத்தில் இன்னது கொடுப்பார்கள் என்று எதிர்பாராதே' என்றார். அஃது பண்டமாற்றுச் சிந்தனையைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.*

**நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்**
**இன்னோர்க்கு என்னாது, என்னோடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்வதும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி-மனை கிழவோயே (புறம். 163:4-7)**

*பணமாகக் கொடுத்தாலும் பண்டமாற்றாகக் கொடுத்தாலும் அவை குறியெதிர்பார்ப்பை நோக்கமாகக் கொண்டவையே. ஒன்றைக் கொடுத்துப் பிறிதொன்றைப் பெறுவது எதிர்பார்க்கும் தன்மைத்து. இருக்கும்போது கொடுத்தால் இல்லாதபோது பக்கத்து வீட்டாரிடம் அரிசி, உப்பு, தானியம் போன்றவற்றைக் கேட்டுப் பெறலாம் என்ற சிந்தனை அன்று தமிழ்ச் சமுதாயத்தில் அமைந்திருந்தது.*

*பெரும்பாணாற்றுப்படையில் உப்பு வண்டிகள் வணிகம் செய்ய வரிசையாகச் செல்லும் காட்சியைக் காணலாம்.*

**பல் எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி (பெரும். 65)**

*மிளகு மூட்டை சுமந்து தழும்பேறிப் போன முதுகும், நிமிர்ந்த காதுகளும் உடைய கழுதைக் கூட்டத்துடன் செல்லும் வணிகர்கள் பலர் வழிநடந்து செல்லும் சுங்கம் (உல்கு) பெறும் இடங்களைக் கொண்ட நீண்ட நெடுவழிப்பாதைகளைக் காணலாம்.*

*வணிகர் குழு 'சாத்து' என வழங்கப்பட்டது. தலைவன் சாத்தன் எனப்பட்டான். அவர்கள் பொதிகளைக் கழுதை முதுகில் ஏற்றிச் சென்றனர். வழியில் சுங்கச் சாவடி இருந்தது. வரிகேட்டல் நடைபெற்றது. வணிகர்கள் செல்லப் பெருவழிகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன.*

**அணர்ச் செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**
**உல்குடைப் பெருவழி கவலை காக்கும் (பெரும். 80)**

*வணிகர்கள் துலாக்கோலைப் பயன்படுத்தினர். நிறுத்தல் அளவை அன்று வழக்கத்தில் இருந்தது. இதை வள்ளுவர் நடுநிலைமை அதிகாரத்தில் குறிக்கின்றார்.*

**சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி (குறள். 118)**

*பட்டினப்பாலையில் வரும் வணிகர் நடுவுநிலையை வள்ளுவரும் குறிப்பிடுகின்றார்.*

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோற் செயின் (குறள். 120)**

*தமிழர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கடல் கடந்து வாணிபம் செய்தனர். பாரசீகம் போன்ற மேலை நாடுகளிலிருந்து குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டன. கப்பலில் பொருள்களைக் கொண்டு வந்தனர். ஏற்றுமதி செய்தனர். இச்செய்தியைப் பட்டினப்பாலை காட்சிப்படுத்துகின்றது.[10]*

**நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கடுங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும் (பட்டின. 185-191)**

*புதுச்சேரி அரிக்கமேட்டில் கிரேக்கர்களும் உரோமானியர்களும் வணிகம் செய்துள்ளனர். அவர்கள் பயன்படுத்திய ரௌலெட் ரெட் பானை ஓடுகள் அம்போதா எனும் வண்ண முனைச் சாடிகள், தட்டுகள் முதலியவை அங்குக் கிடைத்துள்ளன.*

*உரோமானிய அரசன் அகஸ்டஸ் உருவம் பொறித்த காசு அரிக்கமேட்டில் கிடைத்துள்ளது. இதைக் கொண்டு அக்கால வணிகர்கள் உரோம் நாட்டுடன் செய்திருந்த வணிகத் தொடர்பு தெரியவருகிறது. தமிழ் வணிகர்களின் உதவியோடு மணிகள், துணிவகைகள், சங்கு வளையல்கள் போன்றவற்றை ஏற்றுமதி செய்தனர்.*

*தமிழக வணிகச்சாத்து கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.மு. 150 வரை கலிங்க நாட்டில் இருந்துள்ளது. கலிங்கத்தை ஆண்ட காரவேலன் எனும் அரசன் தமிழ் வணிகச் சாத்துகளால் தன் ஆட்சிக்கே கேடு உண்டாகும் எனக் கருதி, அவ்வணிகச் சாத்தை அழித்துவிட்டதாகக் கல்வெட்டுக் கூறுகிறது.*[11]

*2500 ஆண்டுகளுக்கு முன்னரே எகிப்துடன் தமிழன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தான். நறுமணப் பொருள்கள், தந்தம், நூலாடை, அரிசி, கருங்காலி போன்ற பொருள்களை வாங்கியுள்ளனர். சங்க இலக்கியங்கள் காட்டும் தமிழ்ச் சமுதாயம் வணிகத் துறையில் கால்பதித்து உள்நாட்டிலும், கடல்கடந்தும் வணிகத்தை நிலைநிறுத்தியுள்ளது. கிரேக்க-உரோம வணிகர்கள் இங்கு வந்துள்ளனர். எகிப்து, அரேபியா முதலிய நாடுகளில் வணிகம் செய்துள்ளனர். பண்டமாற்றில் தொடங்கிய வணிகம் பண வரவிலும் தொடர்ந்து நடந்து வந்துள்ளது. அவ்வகையில் நிலவழி ஊர்திகளின் பங்கு அளப்பரியது.*

**நிலவழி ஊர்தியும் விளைபொருளும்**

*சங்க காலத்தில் வெல்லமும் சர்க்கரையும் செய்யப்பட்டன. வெல்லமும் சர்க்கரையும் செய்வதற்குக் கரும்பு வேண்டும். எனவே கரும்பு பயிர் செய்யப்பட்டது. அக்காலத்தில் கரும்பும் வெல்லமும் உற்பத்திப் பொருளாக இருந்தன. கொங்கு நாட்டில் தகடூர் வட்டாரத்தை அரசாண்ட அதியமான் அரச பரம்பரையில் நீண்டகாலத்துக்கு முன்பு இருந்த ஒருவன் தேவலோகத்திலிருந்து கரும்பைக் கொண்டுவந்து தமிழ்நாட்டில் பயிர் செய்தான் என்று சங்க நூலில் குறிக்கப்படுகிறது.*

**அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்**
**அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்**
**நீரக இருக்கை ஆழி சூட்டிய**
**தொன்னிலை மரபின் முன்னோர்** **(புறம். 99:1-4)**

*என்றும்,*

**அரும் பெறல் அமிழ்தம் அன்ன**

**கரும்பு இவண் தந்தோன் பெரும் பிறங்கடையே**

**(புறம். 329:20-21)**

*என்று ஔவையார் கூறுவதிலிருந்து இதனை அறியலாம். இதனால் கொங்கு நாட்டு அதியமான் அரசன் ஒருவன் தொலைநாடுகளிலிருந்து கரும்பைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் முதன்முதலாகப் பயிர் செய்தான் என்று தெரிகின்றது.*

*தமிழ்நாடெங்கும் கரும்பு பயிர் செய்யப்பட்ட இடம் கரும்பின் பாத்தி என்றும் கரும்பின் கழனி என்றும் கூறப்பட்டது. கரும்பைப் பழன வெதிர் என்று ஒரு புலவர் கூறியுள்ளார். பழனம்-கழனி, வெதிர்-மூங்கில், மூங்கில்-மலைகளில் தானாகவே வளர்வது. கரும்பு-கழனிகளில் பயிர் செய்யப்படுவது. மூங்கிலைப் போலவே கரும்பும் கணு உள்ளது. ஆகையால் கழனிகளில் பயிர் செய்யப்படுகிற மூங்கில் என்று கரும்பு கூறப்பட்டது. கரும்பு தமிழ்நாடு எங்கும் பயிரிடப்பட்டது.*

**அகல்வயல் கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ**
**(அகம். 235:11-12)**

**அகல்வயல் நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ**
**(அகம். 217:3-4)**

**விரிபூங் கரும்பின் கழனி (2ஆம் பத்து 13:13)**

**தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பு (குறு. 85:4)**

*கரும்பைச் சாறு பிழியும் எந்திரங்களும் கருப்பஞ்சாற்றை வெல்லங் காய்ச்சும் ஆலைகளும் ஊர்கள்தோறும் இருந்தன. பாண்டி நாட்டுத் தேனூரில் கரும்பைச் சாறுபிழியும் எந்திரமும் வெல்லங் காய்ச்சும் ஆலையும் இருந்தன.*

**கரும்பின் எந்திரம் களிற்றெதில் பிளிற்றும்**

**தேர்வண் கோமான் தேனூர் (55:1-2)**

*என்று ஐங்குறுநூறு கூறுகின்றது.*

*வெல்லத்துக்கு விசயம் என்று பெயர் கூறப்பட்டது. வெல்லக் கட்டியைச் சுருக்கமாகக் கட்டி என்று கூறினர். வெல்லம் 'கரும்பின் தீஞ்சேறு' என்றும் கூறப்பட்டது.*

**எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை**
**விசயம் அடூஉம் புகைசூழ் ஆலை தொறும்**
**கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் (பெரும். 260-261)**

*என்றும்,*

**ஆலைக் கலமரும் தீங்கழைக் கரும்பே (மலைபடு. 119)**

*என்றும்,*

**மழை கண்டன்ன ஆலைதொறும் ஞெரேரெனக்**
**கழைகண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்**
**(மலைபடு. 340-341)**

*என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன.*

*திருவிழாக் காலத்தில் வீடுகளை அலங்கரித்தபோது வாழை மரத்தையும் கருப்பங்கழிகளையும் கட்டி அலங்காரம் செய்தனர்.*

**காய்க்குலைக் கமுகும், வாழையும், வஞ்சியும்**
**பூக்கொடி வல்லியும், கரும்பும் நடுமின் (மணி. 1:46-47)**

*வெல்லத்தை மக்கள் பெரிதும் பயன்படுத்தியமையால் வெல்லம் காய்ச்சும் தொழிலும் கரும்பு பயிரிடும் விவசாயமும் தமிழகத்தில் சிறப்பாக நடந்தன. வெல்லம் சர்க்கரை விற்ற வாணிகருக்கு பணித வாணிகர் என்பது பெயர். மதுரைக்கு 20 கி.மீ. தொலைவில் அழகர்மலை என்னும் மலையும் கோயிலும் உள்ளன. அழகர் மலைக்கு அருகே கிடாரிப்பட்டி என்னும் ஊருக்கு அருகில் இந்த மலையின் மேல் இயற்கையாக அமைந்த ஒரு குகை இருக்கின்றது. இந்தக் குகையில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் பௌத்த, சைவ மதத்து முனிவர்கள் இருந்து தவம் செய்தனர். அந்த முனிவர்கள் தங்குவதற்காக அந்தக் குகையைச் செப்பஞ் செய்து குகைக்குள் கற் படுக்கைகளைச் சில செல்வர்கள் அமைத்தார்கள். கற்படுக்கைகளை அமைத்தவரின் பெயர்கள் அக்குகையில் பிராமி எழுத்தினால் எழுதப் பட்டுள்ளன. அப்பெயர்களில் ஒருவர் பெயர் பணித வாணிகன் நெடுமூலன்*

*என்று குறிக்கப்பட்டிருக்கின்றன.*[12] *பணித வாணிகன் என்றால் வெல்லக்கட்டி சர்க்கரை விற்கும் வணிகன் என்பது பொருள். இந்தப் பிராமி எழுத்தின் அமைப்பைக் கொண்டு இது கிறித்துவுக்கு முன்பு இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்று திறனாய்வாளர் உரைப்பர். எனவே பணித வாணிகன் நெடுமூலன் 2200 ஆண்டுகளுக்கு முன்னே கடைச்சங்க காலத்தில் இருந்தவன் என்பது புலனாகின்றது.*

*பழங்காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் வாழ்ந்தவர்களுக்குக் கரும்பும் கரும்புக்கட்டியும் தெரியா. அவர்கள் தேனையுண்டனர். தேனும் போதிய அளவு கிடைத்திராது. கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியருக்குக் கரும்பும் வெல்லமும் அறிமுகமாயின. ஐரோப்பாவில் விளைத்த பீட்ரூட் கிழங்கிலிருந்து சர்க்கரையைக் காய்ச்சும் விதத்தை அவர்கள் 18 ஆம் நூற்றாண்டில் அறிந்தனர். பாரத நாட்டிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் 2,000 ஆண்டுகளுக்கு முன்பே கரும்பும் கரும்புக் கட்டியும் தெரிந்திருந்தன. தமிழகத்தில் கரும்புப் பயிர் செய்வதும் கரும்புக் கட்டிக் காய்ச்சுவதும் சங்க காலம் முதல் நடைபெற்று வருகின்றன. இப்பொருள்களை ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்துக்கு கொண்டு செல்ல நிலவழி ஊர்திகளே அடிப்படையாயின.*

**கள்ளும் மதுவும்**

*பழங்காலம் தமிழகம் உட்பட உலகமெங்கும் மதுவும் கள்ளும் அருந்தப்பட்டன. தமிழ்நாட்டில் எல்லாத் தரத்து மக்களும் கள்ளையும் மதுவையும் அருந்தினர் என்பதைச் சங்கச் செய்யுள்களிலிருந்து அறியலாம். முடியுடை மன்னரும் குறுநில அரசரும் புலவர்களும் போர் வீரர்களும் ஆண்களும் பெண்களும் செல்வரும் வறியவரும் மது அருந்தினர். பௌத்த, சமண மதத்தாரும் திருவள்ளுவர் போன்ற புலவர்களும் கள்ளுண்பதைக் கண்டித்தபோதிலும் மக்கள் கள்ளையும் மதுவையும் அருந்தி வந்ததைச் சங்கச் செய்யுள்கள் கூறுகின்றன. இருக்கு வேதம் கூறுகிற சோமயாத்தைத் தமிழ்நாட்டு ஆரிய பிராமணர் தமிழ்நாட்டில் செய்ததாகச் சான்று இல்லை. ஆனால் வேள்வி (யாகம்) செய்து மது, புலால் அருந்தியதைச் சங்கச் செய்யுள்கள் கூறுகின்றன. சங்க காலத்தில் தமிழகத்தில் நடக்காத சோம*

*யாகத்தைப் பிராமணர் பிற்காலத்தில் பக்தி இயக்கக் காலத்தில் பெருவாரியாகச் செய்தனர். சோம பானத்தைக் கொண்டு சோம யாகம் செய்து சோமயாஜி என்று பெயர் பெற்ற நூற்றுக்கணக்கான சோமயாஜிப் பிராமணரைப் பாண்டியர் செப்பேடுகளும் பல்லவர் செப்பேடுகளும் கூறுகின்றன. சோமுயாஜிப் பார்ப்பனன் ஒருவன் சோம பானத்தைக் குடித்துத் தம்முடைய மனத்தைத் தாய்மைப்படுத்திக் கொண்டதாக (மனோ அத்தர் ஆகியதாக!) ஒரு பாண்டிய செப்பேட்டுச் சாசனம் கூறுகின்றது.*

*சங்க காலத் தமிழகத்தில் கள்ளும் மதுவும் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் அவை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகவில்லை. உள்நாட்டிலேயே செலவாயின. அதற்குத் தரைவழி ஊர்திகள் தேவைப்பட்டன. கள், தேறல், தோப்பி, பிழி நறவு, மகிழ், மட்டு முதலான பெயர்கள் மதுபானங்களுக்குப் பெயராகக் கூறப்பட்டுள்ளன. 'தெண் கட்டேறல்' **(அகம். 336:6)**, 'பாப்புக் கடுப்பன்ன தோப்பி' **(அகம். 348:7)**, பாம்பு 'வெகுண்டன்ன தேறல்' **(சிறு. 237)**, 'தண்கமழ் தேறல்' **(புறம். 24)**, 'மணங்கமழ் தேறல்' **(மதுரை. 780)**, 'பூக்கமழ் தேறல்' **(பொருநர். 157)**, 'இன்களி நறவு' **(அகம். 173:16)**, தீந்தண் நறவம், **(புறம். 292)**, 'மண நாறு தேறல்' **(புறம். 397:14)**, 'அரவு வெகுண்டன்ன தேறல்' **(புறம். 376:14)**, 'மகிழ்தரல் மரபின் மட்டு' **(புறம். 390:16)** என்று சங்கச் செய்யுள்கள் மதுபானங்களைப் புகழ்கின்றன.*

*தென்னை, பனை மரங்களிலிருந்து கள் இறக்கப்பட்டது. நெல், தினை முதலான தானியங்களிலிருந்து மது வகைகள் உண்டாக்கப்பட்டன. 'கொழு மடல் தெங்கின் விளைபூந்தேறல்' **(மணி. 3:98-99)** என்று தென்னங் கள் கூறப்படுகின்றது. 'இரும்பனம் தீம்பிழி' **(நற். 38:3)** என்றும், 'இணர்ப் பெண்ணைப் பிழி' **(பட்டின. 18)** என்றும், 'நுளை மகள் அரித்த பழம்படு தேறல்' **(சிறு. 158)**, என்றும், 'இரும்பனம் தீம்பிழியுண்போர் மகிழும்' **(நற். 38:3)** என்றும் பனங் கள் கூறப்படுகின்றது.*

*நெல், தினை முதலான தானியங்களிலிருந்தும் மதுபானங்கள் உண்டாக்கப்பட்டன. இவற்றிற்குத் தோப்பிக் கள் என்று பெயர் கூறப்பட்டது. இவற்றை வீடுகளில் காய்ச்சினர். 'இல்லடு கல்லின் தோப்பி'*

*(பெரும். 142)*, ‘துகளற விளைந்த தோப்பி’ ***(அகம். 205)*** சாடிகளில் தோப்பிக்கள் காய்ச்சப்பட்டன. ‘வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த வெந்நீரரியல் விரலை நறும்பிழி’ ***(பெரும். 281)*** என்று கூறப்படுகின்றது. ‘தினைக் கள் உண்ட தெளிகோல் மறவர்’ ***(அகம். 284:8)*** என்று தினையரிக்கள் கூறப்படுகின்றது. இவை, ஒரு பகுதியிலிருந்து ஏனைய பகுதிக்குச் செல்ல வண்டி, விலங்கு போன்றவை பங்குபெற்றுள்ளன.

சங்க காலத்தில் கொடுக்கல் வாங்கல் தொழில் (வணிகம்) பண்டமாற்று முறையில் நடைபெற்றது. இம்முறையின்படி கொள்ளளவு செய்யும் பொருளின் பெருமதிப்பிற்கேற்ற இன்னொரு பொருளை விற்பனையாளரிடம் கொடுத்தாக வேண்டும். இம்முறையின் கீழ் ஊதியமாக அரிசி, தானியம் முதலான பொருள்களே கொடுக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக வயல் வேலையாள்களின் ஊதியமாக விளைச்சலின் ஒரு பகுதி கொடுக்கப்பட்டது.[13]

**பண வணிகம்-பொருளாய்வு**

பணம் என்பது மக்கள் தங்களுக்கு இடையே பொருள்கள், சேவைகள் முதலியவற்றைப் பரிமாற்றிக் கொள்ள ஈடான மதிப்புடையதாக ஓர் அரசால் உறுதியளிக்கப்பட்ட அடையாள அலகு. சேமிப்பிக்கும் இது பயன்படும் அலகு. சில வரைவிலக்கணங்களின்படி பணம் என்பது பெருமதிப்பைத் தீர்மானிக்கும் அலகாகும். பொதுப் பயன்பாட்டில் பணம் என்பது பெரும்பாலும் நாணயத்தைக் குறிப்பதாகப் பயன்படுத்தப்படுகிறது.

பணத்தின் மதிப்பு, அந்த நாணயம் செய்யப்பட்ட தங்கம், வெற்றி போன்ற உலோகத்தின் மதிப்பைக் கொண்டு மதிப்பிடப்பட்டது. தங்கம், வெள்ளி, பித்தளை, வெண்கலம், இரும்பு ஆகியவற்றால் செய்யப்பட்ட நாணயங்கள் பயன்படுத்தப்பட்டன.

**நாளங்காடி, அல்லங்காடி**

**மழை கொளக் குறையாது, புனல் புகமிகாது**
**கரை பொருது இரங்கும் முந்நீர் போல**

**கொளக் கொளக் குறையாது, தரத்தர மிகாது (மதுரை. 424-426)**

*சங்க காலத்திலும் மதுரை சுறுசுறுப்புடன் விளங்கியமையை மருதனார்வழி அறியமுடிகிறது. வணிகம் பொருட்டு, பகல்நேரக் கடைகளாகிய நாளங்காடி பற்றியும் இரவு நேரத்தில் திறக்கும் அல்லங்காடி பற்றியும் விளக்குகிறார்.*

*கடல்நீர் ஆவியாகி மேகமாவதினால் கடல் வற்றிவிடுவதில்லை. ஆறுகள் பல கடலில் கலப்பதினால் கடல் பொங்கி வழிவதுமில்லை. அதுபோல மக்கள் திரளாக வந்து பொருள்களை வாங்குவதால் பொருள்கள் தீர்ந்து விடுவதும் இல்லை. பல இடத்திலிருந்து வணிகர்கள் விற்பனைக்குப் பொருள்களைக் கொண்டு வருவதால் பொருள்கள் மிகுந்து விடுவதும் இல்லை என்று வணிகம் நடைபெறும் சிறப்பைக் கூறியுள்ளார். இவ்வாறு பொருள்கள் குவியவும், தீரவும் போக்குவரத்திற்குத் தரை ஊர்திகள் பெரும் பங்காற்றியுள்ளன.*

**வணிகர் குல மக்கள் சிறப்பு**

*அரசர்கள் விரும்பும் வகையில் பெருஞ்செல்வம் மிக்கவர்களாய் நெய்தல் நில மக்கள் வாழும் நகரம் புகார் ஆகும். அலைகளை உடைய கடல்சூழ்ந்த நாடுகளில் விளங்குகின்ற மக்கள் எல்லாம் ஒருங்குதிரண்டு வந்தாலும் அவர்களுக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் இல்லை என்று சொல்லாத வகையில் அந்நகரின் வணிகமானது சிறந்து ஓங்கி இருந்தது என்று இளங்கோவடிகள் சிலம்பின் பாடல்களில் கூறுகிறார்.*

**ஒருங்கு தொக்கன்ன உடைப்பெரும் பண்டம்**
**கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்**
**குலத்தில் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்**
**அத்தகு திருவின் அருந்தவம் முடித்தோர்**
**உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய (சிலம்பு. 2:7-10)**

*கடல் வழியாகவும் தரை வழியாகவும் வருபவர்கள் பெரும் பொருள்களைக் குவித்தனர். இவ்வாறு விளங்கிய வணிகர் குல மக்கள் பெருமை குன்றாதவர்களாகிய செல்வச் செழிப்புடன் இனிது விளங்கினர்*

*என்று சிலப்பதிகாரச் செய்யுள் விளக்குகின்றது. பூம்புகார், மருவூர்பாக்கம் ஆகிய நகரங்கள் வணிகத்தினால் சிறப்புப் பெற்றன.*

*சுண்ண நறும்பொடிகளும், குளிர்ந்து மேவும் சந்தனமும், பூக்களும் அகில் போன்ற நறுமணப் புகை மேவிய பொருள்களும் விற்பனை செய்பவர் உலவும் நகரவீதிகள் காணப்பட்டன. பட்டுத் துணிகள், பவள மாலைகள், முத்துகள், நவமணிகள், பொன் மணிகள் முதலான ஆபரணங்கள் குவிந்து கிடக்கம் வணிக வீதிகள் விளங்கின.*

*அவரை, துவரை, நெல், கடலை போன்ற தானியங்கள் விற்கப்படும் வீதிகளும், பிட்டு, அப்பம், கள், மீன், உப்பு, வெற்றிலை முதலான மணப் பொருள்களும், இறைச்சி, எண்ணெய், வெண்கலப் பாத்திரங்கள் விற்பனை செய்யும் இடங்களும் அமைந்திருந்தன. மரம் அறுத்துத் தொழில் செய்யும் தச்சர், பொன் வடித்து ஆபரணம் செய்யும் பொற்கொல்லர், இரும்பு அடித்துத் தொழில் செய்யும் கருமர், கட்டட வேலை செய்யும் கொல்லர், தையல் வேலை செய்யும் துன்னக்காரர், தோலை அறுத்துத் தொழில் செய்யும் செம்மர், மண்ணைப் பிசைந்து பாண்டங்களைச் செய்யும் குயவர், கயிறு திரித்து விற்பனை செய்யும் சாணர் எனப் பலரும் நகரங்களில் காணப்பட்டனர். பொம்மைகள் விற்பனை செய்யும் கலைஞர்களும், பாணர்களும், பிறருக்கு ஏவல் செய்து வாழும் பணியாளர்களும் இருந்தனர். இவர்களின் போக்குவரத்து ஊர்தியாக விலங்கும் வண்டியும் உதவியுள்ளன.*

*அயல்நாட்டிலிருந்து வந்த மக்கள் தாம் கொண்டு வந்த பொருள்களைப் பாதுகாக்க அவற்றின் மீது தமது பெயரை அடையாளமாகப் பொறித்து வைத்தனர். பண்டக சாலையின் வாயிலைக் கடந்தும் பொருள்கள் குவியலாக குவிக்கப்பட்டன. பட்டுத்துணிகளுக்கு மாற்றாக நறுமணப் பொருள்கள், மிளகு போன்றவை மாற்றிக் கொள்ளப்பட்டன. அரபு நாட்டிலிருந்து உயர்சாதிக் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டுப் பொற்காசுகளுக்கு மாற்றாகப் பெறப்பட்டன.*

களவுசெய்பவர்கள் தண்டிக்கப்பட்டனர். பண்டசாலையில் திருட்டு நடைபெற்றால் அப்பொருளைத் திருடனின் தலைமீது வைத்து துறைமுகத்தைச் சுற்றச்செய்து பெரிய தண்டனை வழங்கப்பட்டது. தண்டனை தருகின்ற இடம் வெள்ளிடை மன்றம் என்று குறிக்கப்பட்டது.

**பண வணிகம்**

காசு, பாதம், அழுக்கு, புள்ளி ரேகை என்னும் நான்கு வகை குறைபாடுகள் நீக்கிய நல்ல நிறமும் ஒளியும் கூடிய வைரக்கற்களும் நீரோட்டம், கருமை என்னும் குற்றவியல் இல்லாத பச்சை மரகதக் கற்களும், பதுமராகம், நீலம், விந்தம், படிதம் என்னும் நான்கு வகை மாணிக்க கற்களும், பொற்காசுகள் மற்றும் நாணயங்களுக்கு விற்கப்பட்டன.

சங்க காலத்தில் பண்டமாற்று முறைக்குப் பின்னால் உலோகங்களால் செய்யப்பட்ட நாணயங்கள் பயன்பாட்டிற்கு வந்தன. அக்காலத்தில் பணம் என்பது அரசால் வரையறுக்கப்பட்ட விதிகளுக்குட்ட நாணயங்களையே குறிக்கின்றது.

பழங்காலத் தமிழகத்தில் வணிகமுறை காணப்படுவதை அகநானூற்றுப் பாடல் மிகச் சிறப்பாக உணர்த்துகிறது.

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்புஎனச்**
**சேரி விலைமாறு கூறலின் மனைய (அகம். 140:6-8)**

இப்பாடலில் அம்மூவனார் பண்டமாற்று முறையைக் கூறுகிறார். நெல்லின் நேரே வெண்கல் உப்பு என்ற பாடல் வரி ஞாயிற்றின் வெம்மை பொறுக்காமல் வெண்ணிறக் கல் உப்பு நெல்லினுக்கு ஒத்த அளவினதே என்று சேரியின் கண் விலை கூறிக்கொண்டு போவாள். மேலும் அகநானூற்றில் ஒரு பொருளை எப்படி விற்க வேண்டும் என்பதும் மிகச் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது.

**நெல்லும் உப்பும் நேரே ஊரீர்**
**கொள்ளீரோ எனச் சேரிதொறும் நுவலும்**
**அவ்வாங்கு உந்தி, அமைத்தோ ளாய் நின்**

**மெய்வாழ் உப்பின் விலைஎய் யாம்** **(அகம். 390:8-11)**

*சங்க இலக்கியங்களில் தலைவியானவள் பெரிதும் அமைதியின் உருவாகவே படைக்கப்படுவாள். ஆனால் இப்பாடலில் தன் குடும்ப வாழ்க்கையைக் கருதி நெய்தல் நிலப்பெண் அருகில் ஊர்களில் 'ஒருபடி நெல்லிற்கு ஒருபடி உப்பு', 'ஒருபடி நெல்லிற்கு ஒரு படி உப்பு' என்று அங்காடியில் கூறுவது அன்றைய தமிழர் வாழ்க்கைக்கு அடையாள மாக விளங்குகிறது.*

*மலைநாடுகளில் இருந்த குறவர் அங்குக் கிடைத்த பொருள்களிலிருந்து மதுவை உண்டாக்கிக் கொண்டனர். மலையுச்சியில் மலைப்பாறைகளில் மலைத்தேன் கிடைத்தது. மலைகளிலும் மலைச் சாரல்களிலும் பலா மரங்களும் பலாப்பழங்களும் கிடைத்தன. மலைகளில் மூங்கில் புதர்கள் வளர்ந்தன. குறவர் பலாச்சுளைகளிலிருந்து ஒரு வகையான மது பானத்தை உண்டாக்கினர். 'தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்'* ***(அகம். 182:3)*** *மூங்கிற் குழாய்களில் மலைத்தேனைப் பெய்து வாயை அடைத்து நிலத்தில் புதைத்து வைத்து ஒருவித மதுபானத்தை உண்டாக்கினர். 'வேய்பெயல் விளையுள் தேக்கட்டேறல் குறைவின்றிப் பருகி நறவு மகிழ்ந்து'* ***(மலைபடு. 171-172)****, 'திருந்தமை விளைந்த தேக்கட்டேறல்'* ***(மலைபடு. 523)****, 'நிலம் புதைப்பழுநிய மட்டின் தேறல்'* ***(புறம். 120:12)****, 'வாங்கு அமைப்பழுநிய தேறல்* ***(புறம். 129:2)****, 'ஆம்பணை விளைந்த தேக்கட்டேறல்'* ***(அகம். 368:14)****, 'அமைவிளை தேறல் மாந்திய கானவன்'* ***(சிலம்பு. 27:217)****. பாரியின் பறம்பு மலையில் இருந்தவர்களும் மூங்கிற் குழையில் தேனைப் பதப்படுத்தி மதுவாக்கி உண்டனர்.*

*மலைவாழ் குறவர் பலாச்சுளையையும் தேனையும் கலந்து மூங்கில் குழாயில் பெய்து பதப்படுத்திய மதுவை உண்டு மகிழ்ந்தனர்.*

**தேன்தேர் சுவைய திரள்அரை மாத்துக்**
**கோடைக் கூழ்த்த கமழ் நறுந் தீங்கனி**
**பயிர்புறப் பலவின் எதிர்சுளை யளைஇ**
**இறாலொடு கலந்த வண்டு மூசு அரியல்**
**நெடுகண் ஆடமைப் பழுநிக் கடுந்திறல்**
**பாப்புக்கடுப் பன்ன தோப்பிவான் கோட்டுக்**

**கடவுளோங்கு வரைக் கோக்கிக் குறவர்**
**முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி (அகம். 348:2-9)**

*உரோமாபுரியிலிருந்து வணிகத்துக்காக வந்த யவனர் மதுபானத்தையும் கொண்டு வந்தனர். அது திராட்சைப் பழச்சாற்றினால் செய்யப்பட்ட கொடிமுந்திரிச் சாறு* (wine). *அது விலைமதிப்பு மிக்கதாகையால் அரசர்கள் மட்டும் வாங்கி அருந்தினர். இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனை நக்கீரர் 'யவனர் தந்த தேறலை உண்டு மகிழ்ந்திருப்பாயாக' என்று வாழ்த்தினார்.*

**யவனர்**

**நன்கலந் தந்த தண்கமழ் தேறல்**
**பொன்செய் புனைகலந் தேந்தி நாளும்**
**ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து**
**ஆங்கினிது ஒழுகுமதி ஓங்குவாள் மாற (புறம். 56:18-21)**

*தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்தியபோதும் 'மணங்கமழ் தேறலை உண்டு மகிழ்ந்திருப்பாயாக' என்கிறார்.*

**இலங்கிழை மகளிர் பொலங்கத் தேந்திய**
**மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்**
**மகிழ்தினிது உறைமதி பெரும (மதுரை. 779-781)**

*மாங்குடி மருதனார் வேறொரு செய்யுளிலும் அப்பாண்டியனை அவ்வாறே வாழ்த்தியுள்ளார்.*

**ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய**
**தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து**
**ஆங்கினி தொழுகுமதி பெரும (புறம். 24:31-33)**

சேரமான் மாவெண்கோவும் பாண்டியன் கானப்பேரயில் கடந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராசசூயம் வேட்ட பெருங்கிள்ளியும் ஒருங்கிருந்தபோது அவர்களை அவ்வையார்,

**பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய**
**நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து** **(புறம். 367:6-7)**

இருப்பீர்களாக என்று வாழ்த்தினார்.

தமிழகமும் கங்கைச் சமவெளியும் தொன்றுதொட்டு தொடர்பு கொண்டு விளங்கியது என்பதைத் தொல்லியல் துறை அகழ்வாராய்ச்சிகளின் வழியே அறியமுடிகிறது. கங்கைக் கரையில் இருந்து வந்த பொருள்கள் பற்றிப் பட்டினப்பாலை குறிக்கிறது. அதை மெய்ப்பிக்கும் வகையில் கொற்கை, அழகன்குளம், கரூரில் நடைபெற்ற அகழாய்வுகளில் பளபளப்பான கறுப்பு நிற பானை ஓடுகள் கிடைத்துள்ளன.[14]

அரிக்கமேடு என்னும் இடத்தை அகழ்ந்து பார்த்தபோது அங்கு கி.மு. முதல் நூற்றாண்டில் யவனர் (கிரேக்க ரோமர்) தங்கியிருந்த வணிக நிலையம் கண்டுபிடிக்கப்பட்டது. அங்குக் கிடைத்த பல பொருள்களில் கிரேக்க நாட்டுச் சாடிகளும் கிடைத்தன. அந்தச் சாடிகள் உரோம் தேசத்தில் செய்யப்பட்டவை. அக்காலத்தில் யவனர் மதுபானங்களை வைப்பதற்காகப் பயன்பட்டவை. 'யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்' என்று சங்கச் செய்யுள் கூறியதற்குச் சான்றாக இந்த யவனச் சாடிகள் உள்ளன. பாலாறு கடலில் கலக்கும் இடத்தில் தொல்பொருள் ஆய்வாளர் நிலத்தை அகழ்ந்து பார்த்தபோது அவ்விடத்தில் கிடைத்த பொருள்களுடன் யவனருடைய மதுச்சாடிகளும் கண்டெடுக்கப்பட்டன. மத்தியத்தரைக்கடல் நாடுகளில் செய்யப்பட்ட இந்த மதுச் சாடிகளுக்கு 'அம்பொரே' (Ambhorae) என்பது பெயர். வட இந்திய அரசர்களும் யவன மதுரை வாங்கியுண்டனர். அசோக சக்ரவர்த்தியின் தந்தையான பிந்துசார மன்னன் யவன மதுவை வரவழைத்து அருந்தினான் என்று கூறப்படுகின்றது.[15]

*அரசர், வீரர், புலவர், மாலுமிகள், உழவர் முதலான எல்லா வகையான மக்களும் அக்காலத்தில் மது அருந்தினர். அந்த மது வகைகள் தமிழ் நாட்டிலே உற்பத்தியாகி உள்நாட்டிலேயே விற்பனை ஆயின. வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகவில்லை. எனவே உள்நாட்டுப் போக்குவரத்தில் பல்வேறு நிலவழி ஊர்திகளும் துணைநின்றமை உறுதிப்படும். கள்ளையும் மதுவையும் விற்றவர் பெண்டிர் என்பது குறிக்கத்தக்கது.*

**மிளகு (கறி)**

*சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் உணவுக்கு மிகவும் அடிப்படைப் பொருளாக இருந்தது மிளகு. ஆனால் மிளகு எல்லா நாடுகளிலும் உண்டாகவில்லை. சேர நாட்டில் மலைச்சாரல்களில் (சையமலை என்னும் மேற்குத் தொடர்ச்சி மலைகளில்) மிளகுக் கொடிகள் வளர்ந்தன. சேரநாட்டில் வாழ்ந்த அக்காலத்துத் தமிழர், இக்காலத்து மலையாளிகளைப் போல, மிளகைப் பயிரிட்டு மிளகு உற்பத்தி செய்தனர். கிழக்கிந்தியத் தீவுகளாகிய சாவக நாட்டிலும் அக்காலத்தில் மிளகு உண்டாயிற்று. ஆனால் அந்த மிளகு சேரநாட்டு மிளகைப் போன்று சிறந்திருக்கவில்லை. சேர நாட்டுக்கு வடக்கேயிருந்த துளு நாட்டிலும் (இப்போதைய தென் கன்னட மாவட்டம்) மிளகு உண்டாயிற்று; சங்க காலத்தில் சேர நாடும் துளு நாடும் தமிழ் பேசும் தமிழ் நாடாகவே இருந்தன.*

*பிற்காலத்தில் சேர நாட்டில் பேசப்பட்ட தமிழ், மலையாள மொழியாகவும் துளு நாட்டில் பேசப்பட்ட தமிழ், துளு மொழியாகவும் மாறிப் போயின. துளு நாட்டிலும் சேர நாட்டிலும், மிளகு நன்றாக விளைந்தது. மிளகு, உணவைப் பக்குவப்படுத்துவதற்கு இன்றியமையாத பொருளாக இருந்தபடியால் அது உலகம் முழுவதும் தேவைப்பட்டது (இக்காலத்தில் சமையலுக்குத் தேவைப்படுகின்ற மிளகாய் அக்காலத்தில் இல்லை. அக்காலத்தில் அமெரிக்கக் கண்டம் கண்டுபிடிக்கவில்லை. கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் அமெரிக்க கண்டம் கண்டுபிடிக்கப்பட்டு அங்குத் தென் அமெரிக்காவிலிருந்து மிளகாய் கொண்டுவரப்பட்டது. சேரநாட்டு மிளகு அக்காலத்தில் உலகம் முழுவதும் புகழ்பெற்றிருந்தது. ஐரோப்பா*

*கண்டத்திலிருந்த யவனர்கள் சேரநாட்டு மிளகை மிகுதியும் வாங்கிச் சென்றனர். அதனால் மிளகுக்கு 'யவனப்பிரியா' என்று பெயர் உண்டாயிற்று. மிளகுக்குக் கறி என்றும் மிரியல் என்றும் பெயர் உண்டு. சோழ நாட்டுக்குச் சாவக நாட்டிலிருந்து மிளகு இறக்குமதியாயிற்று என்பதைப் பட்டினப்பாலையிலிருந்து அறியமுடிகிறது. இறக்குமதியான பின் நாட்டின் பல பகுதிகளுக்கும் மிளகை எடுத்துசசெல்ல ஊர்திகள் பயன்பட்டுள்ளன.*

*சங்கச் செய்யுள்களில் சேரநாட்டு மிளகும் மிளகுக்கொடியும் கூறப்படுகின்றன. குடபுலத்தில் (சேர நாட்டில்) கறிக்கொடி பலாமரங்களின் மேலே படர்ந்து வளர்ந்ததை நத்தத்தனார் கூறுகிறார். 'பைங்கறி நிவந்த பலவின் நீழல்' **(சிறு. 43)**. மலைகளில் சந்தன மரங்களின் மேலேயும் மிளகுக் கொடிகள் படர்ந்து வளர்ந்தன 'கறிவளர் சாந்தம்' **(அகம்.2 :6)**. மலைகளில் மிளகுக் கொடி வளர்ந்தது 'கறிவளர் அடுக்கம்' **(குறு. 288:1)**. கருவூர் கதப்பிள்ளைச் சாத்தனாரும் 'கறிவளர் சிலம்பை' ஆவூர் மூலங்கிழார் கூறுகின்றார் **(அகம். 112:14)**. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், 'துறுகல் நண்ணிய கறியிவர் படப்பை'யைக் கூறுகிறார் **(அகம். 272:10)**. நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் (309) கறிக்கொடியைக் கூறுகின்றார்.*

*மிளகாய் இல்லாத அந்தக் காலத்திலே மிளகு உணவுக்கு மிகவும் பயன்பட்டது. உப்பு எவ்வளவு இன்றியமையாதோ அவ்வளவு இன்றியமையாத பொருளாக மிளகு இருந்தது. எனவே உப்பினைப் போல மிளகையும் வண்டிகளில் ஏற்றிச் சென்றுள்ளனர். காய்கறிகளை உணவாகச் சமைத்தபோது அதனுடன் கறியையும் (மிளகு) கறிவேப்பிலையும் பயன்படுத்தினர்.*

**பசுங்காய்ப் போழொடு கறிகலந்து**
**கஞ்சக நறுமுறி யளைஇ**

*என்று பெரும்பாணாற்றுப்படை (307-308) கூறுகின்றது.*

*மேற்குத் தொடர்ச்சி மலைகளையடுத்த சேரநாட்டிலும் துளு நாட்டிலுமே மிளகு உண்டானபடியால் இந்த இடங்களிலிருந்தே மிளகு*

எல்லா நாடுகளுக்கும் சென்றது. பாண்டியநாடு, சோழநாடு, கொங்குநாடு, தொண்டைநாடு முதலான தமிழகத்து நாடுகளுக்கும் தமிழகத்துக்கு அப்பால் வடக்கேயுள்ள பாரததேசத்து நாடுகளுக்கும், பாரசீகம் எகிப்து உரோமாபுரி, கிரேக்கம் முதலான பகுதிகளுக்கும் சேரநாட்டு மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது. தமிழகத்தின் மேற்குக் கரையோரங்களில் விளைந்த மிளகு கிழக்குக் கரையோரத்திலிருந்த காவிரிபூம்பட்டினத்துக்கும் வண்டிகளிலும், பொதி மாடு, பொதி கழுதைகளிலும் கொண்டு வரப்பட்டது. 'காலின் வந்த கருங்கறி மூடை' என்று இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார் (**பட்டின. 186**). (கால்-வண்டி, பொதிமாடு முதலியன. கறி மூடை-மிளகு மூட்டை, வணிகச் சாத்து-வணிகக் கூட்டம்).

மிளகுப் பொதிகளைக் கழுதைகளின் முதுகின் மேல் ஏற்றிக்கொண்டு நெடுஞ்சாலை வழியே சென்றதையும் மிளகு மூட்டைகள் பலாக்காய் அளவாக இருந்ததையும் வழியில் இருந்த சுங்கச் சாவடிகளில் அரசு ஊழியர் சுங்கம் வாங்கியதையும் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.

**தடவுநிலைப் பலவின் முழுமுதல் கொண்ட**
**சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப மிரியல்**
**புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து**
**அணர்ச்செவி கழுதைச் சாத்தோடு வழங்கும்**
**உல்குடைப் பெருவழி (பெரும். 77-89)**

காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் மிளகு மூட்டைகள் தரை வழியாக வந்தன என்று கூறப்படுவதனால், இந்த மிளகு மூட்டைகள் மற்ற பொருள்களோடு வெளிநாடுகளுக்குக் கப்பலில் ஏற்றி அனுப்பப்பட்டன என்றும் கருதலாம்.

**கள் வணிகர்**

பண்டைத் தமிழர் வணிகத்தில் கள்ளும் முதன்மை இடத்தைப் பெற்றிருந்தது. கள் குடிப்போர் அக்காலத்தில் மிகுந்து காணப்பட்டனர். இக்கள் அக்கால மனிதர்களின் உடலுக்கு வலுசேர்ப்பதாக இருந்தது. இச்சிறப்பமைந்த கள் விற்கப்பட்டதை

**கள்ளோர் களிநொடை நுவல** **(மதுரை. 662)**

*என்ற அடியின்வழி அறியமுடிகின்றது. இக்கள்ளினை விலை கூவி விற்றனர் என நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார்.*

**பொன், மணி வகை, வணிகர்கள்**

*பொன், மணி வகை போன்றவற்றை அணிந்து கொள்வதில் பழந்தமிழர் ஆர்வம் கொண்டிருந்தனர். இதன் பொருட்டு இம்மாதிரியான பல்லாற்றான பொருள்கள் வணிகம் செய்யப்பட்டன. இப்பொருள்கள் மலையிடத்தினின்றும் நிலவிடத்தினின்றும் நீரிடத்தினின்றும் பிற இடங்களிலிருந்தும் மதுரை நகருக்குக் கொண்டு வந்து விற்கப்பட்டன. முத்து, பொன் நகைகளோடு பல்வேறு பண்டங்களை விற்கும் வணிகர்களும் மதுரை நகருக்குச் சிறப்புச் சேர்க்கும் வகையில் வணிகம் செய்தனர். இதனை,*

**மலையளவு நிலத்தவு நீரவும் பிறவும்**
**பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு**
**சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்** **(மதுரை. 504-506)**

*பண்டைக்கால வணிகத்தில் பொன், மணி வகை செய்யும் தொழில் சிறப்புற்றிருந்தது. அதன்வழிச் செய்யப்பட்ட வணிகத்தால் பழந்தமிழ் வணிகர்களின் பெருமை பரவலாக்கம் அடைந்தது இவ்வணிகலன்கள் ஓரிடத்திலிருந்து பிறிதோரிடம் செல்லத் தரைவழி ஊர்திகள் பெரும் பங்காற்றியுள்ளன.*

**வணிகர்கள் நேர்மை**

*காவிரிப்பூம்பட்டினத்துத் தமிழ் வணிகர்கள் நடுவுநிலையில் நின்று வணிகம் செய்பவர்கள், விற்பனை செய்யும் பொருள்களின் கொள்முதல் விலையையும், இலாபத்தையும் வெளிப்படையாகக் கூறும் நிலையினராவர். இவ்வாறான வணிகரின் நேர்மை குணமே அக்கால வணிகத்தை வளர்ச்சிப் பாதைக்குக் கொண்டுசென்றது.*[16]

*அக்கால வணிகர்கள், உண்மைநிலை அறிந்தே வணிகம் செய்தனர். தம் பொருள்களைப் போலவே பிறருடைய பொருளையும் மதிக்கத் தக்கவர்கள். பொருள்களை வாங்குவோரிடம் அளவுக்குமேல் அதிகமாக*

*வாங்கமாட்டார்கள். குறைத்துக் கொடுக்க மாட்டார்கள். இவ்வாறு, நேர்மையுடைய அக்கால வணிகரின் வாழ்க்கையில் பல்லாற்றான பொருள்கள் விற்பனை செய்யப்பட்டன என்பதை,*

**வடுவஞ்சி வாய் மொழிந்து**

**தமவும் பிறவு மொப்ப நாடிக்**

**கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது**

**பல் பண்டம் பகர்ந்து வீசுந் (பட்டின. 208-211)**

*என்ற பாடலடிகள் பதிவு செய்துள்ளன. அவ்வகையில் நிலவழி ஊர்திகள் குறிக்கத்தக்கன.*

**மதுரைக் கடைத்தெரு வணிகர்கள்**

*மதுரை 'தூங்கா நகரம்' என்று இன்று குறிக்கப்படுவதற்குக் காரணம் அங்குள்ள சிறுவணிகர்களின் தொழில் வளமேயாகும். அக்காலத்திலும் மதுரை நகரில் சிறுவணிகர்களின் ஆளுமை இடம்பெற்றிருந்தது. பாகினைக் கொண்டு செய்த அடையினையும் பருப்பும் சர்க்கரையும் கூட்டிச் செய்த அப்பத்தினையும் செய்யும் அப்ப வணிகர் பலர் மதுரை நகரில் இருந்து வணிகம் செய்ததை,*

**நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை**

**யயிருறுப் புற்ற வாடமை வீசயம்**

**கவவொடு பிடித்த வகையமை மோகந்**

**தீஞ் சோற்றுக் கூவியர் (மதுரை. 624-627)**

*என்ற அடிகள் வெளிப்படுகின்றன. இப்பண்டங்களை வண்டிகளில் கொண்டு சென்று வீதிகளிலும் சில நேரம் வீடுகளிலும் சென்று விற்பனை செய்தனர்.*

*பழந்தமிழ்நாட்டு வணிகர்கள் உப்பு, கள், பொன், மணிவகை, பல்வகைத் தின்பண்டங்கள் போன்றவற்றை வணிகத்தின் பொருட்டு தயாரித்தனர். இவற்றோடு அக்கால வணிகர்கள் கடல் வழியாகவும் தரை வழியாகவும் வட இந்திய மற்றும் பல்வேறு நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்து வந்துள்ளனர். இவ்வாறு நடைபெற்ற வணிகத்தில் வணிகர்களின்*

நேர்மையும் வணிகப் பொருள்களின் மிகுதியான உற்பத்தியும் வணிகத்தை வளம்பெறச் செய்தன. இதன்வழிப் பழந்தமிழ் வணிகர்களின் ஆளுமைத் தன்மை சிறந்தோங்கியிருந்தமையை அறியமுடிகின்றது.

அராபியர் பழங்காலத்தில் தமிழகத்தின் மேற்குக் கடற்கரைத் துறைமுகப்பட்டினங்களுக்கு வந்து மிளகை வாங்கிக் கொண்டுபோய் எகிப்து உரோமாபுரி முதலான மத்தியதரைக்கடல் பிரதேசங்களில் விற்றனர். கி.மு. முதல் நூற்றாண்டில் யவனர் (கிரேக்கரும் உரோமரும்) அராபியரிடமிருந்து மிளகு வணிகத்தைக் கைப்பற்றினர். அவர்கள் நேரடியாகத் தாங்களே கப்பல்களைச் சேரநாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்குக் கொண்டு வந்து மிளகையும் மற்ற பொருள்களையும் ஏற்றிக் கொண்டு சென்றனர். அவர்கள் குறிப்பாக முசிறித் துறைமுகப் பட்டினத்துக்கு வந்தனர். அவர்கள் முசிறியை முசிறிஸ் (Muziri) என்றனர்.

யவன வணிகர் மரக்கலங்களில் வந்து பொற்காசுகளைக் கொடுத்து மிளகை வாங்கிக் கொண்டு போனதை அக்காலத்தில் நேரில் கண்ட தாயங்கண்ணனாரும் பரணரும் கூறியுள்ளனர்.

**. . . . . . . சேரலர்**
**சுற்றியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க**
**யவனர் தந்த விளைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி (அகம். 149:8-11)**

என்று தாயங்கண்ணனார் கூறுகிறார். சேரர்களுடைய முசிறிப்-பட்டினத்துக்கு யவன வணிகர் வந்ததையும் அவர்களுடைய 'பினைமாண் நன்கலம்' அழகாக இருந்ததையும் அவர்கள் பொற்காசுகளைக் கொடுத்து மிளகை வாங்கிக் கொண்டு போனதையும் இவர் குறித்துள்ளார்.

சேர நாட்டில் விளைந்த மிளகை வீடுகளில் மூட்டைகட்டி வைத்தார்கள். யவனக் கப்பல்கள் வந்தபோது மிளகு மூட்டைகளைப் படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளின் வழியே ஆற்றில் சென்று

*துறைமுகத்தில் தங்கியிருந்த யவனக் கப்பல்களில் ஏற்றுமதி செய்து அதற்கான பொற்காசுகளைப் பெற்றுக்கொண்டு வந்தனர் என்று பரணர் கூறுகிறார்.*

**மனைக்குவைஇய கறிமூடையால்**
**கலிச்சும்மைய கரைகலக் குறுந்து**
**கலந்தந்த பொற்பரிசம்**
**கழித்தோணியால் கரைசேர்க்குந்து (புறம். 343:3-6)**

*என்பது கொள்ளத்தக்கது.*

*கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் தென் அமெரிக்கா கண்டத்திலிருந்து மிளகாய் கொண்டு வரப்பட்டது. இப்போது மிளகாயும் உபயோகப் படுத்தப்படுகின்றது. ஆனால் மிளகின் பெருமையும் சிறப்பும் இன்றும் குறையவில்லை.*

**அறுவை (துணி)**

*தமிழ்நாட்டில் பருத்திப் பஞ்சு விளைந்தது. பருத்தியை நூல் நூற்று ஆடை நெய்தனர். ஆகவே பருத்தி பயிரிடும் தொழிலும் பருத்தியிலிருந்து நூல் நூற்கும் தொழிலும் நூற்ற நூலைத் துணியாக நெய்யும் நெசவுத் தொழிலும் அதனை விற்கும் வாணிபத் தொழிலும் நடைபெற்றன. தமிழகத்தில் துணி விற்கப்பட்டதோடு வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. சங்கச் செய்யுள்களிலிருந்து அக்காலத்துப் பருத்தித் தொழிலைப் பற்றி அறியலாம்.*

*'கல் சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத் தாழி முதற் கலித்த கோழிலைப் பருத்தி' **(அகம். 129:6-7)**, 'பருத்தி வேலிக் கருப்பைப் பார்க்கும் புன்பலந்தழிஇய அங்குடிச் சீறூர்' **(புறம். 304:7-8)** என்றும், காஞ்சியின் அகத்துக் கரும்பருத்தியாக்கும் தீம்புனல் ஊரான்' **(அகம். 156:6-7)** என்றும், 'பருத்தி வேலிச் சீறூர் மன்னன்' **(புறம். 299:1)** என்றும் பருத்தி பயிரிடப்பட்டமை கூறப்படுகின்றது. பருத்திக்காய் முற்றி முதிர்ந்து வெடித்துப் பஞ்சு வெளிப்பட்டபோது அவற்றைக் கொய்து கொண்டு*

போய் வீட்டில் வைத்தனர். 'கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த மூடைப்பண்டம் இடை நிறைந்தன்ன' **(புறம். 393:12-13).**

'வில் அடித்துப் பஞ்சியிலிருந்து கொட்டை நீக்கப்பட்டது. கொட்டை நீக்கப்பட்ட பஞ்சு வெண்மேகம் போலக் காணப்பட்டது. 'வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்' **(அகம். 133:6).** கொட்டை நீக்கிய பஞ்சை நூலாக நூற்பர். அக்காலத்தில் கையினாலே நூல் நூற்கப்பட்டது. நூலை நூற்றவர் மகளிர். ஆண்மகன் ஆதரவு இல்லாத பெண்டிர், பஞ்சை நூலாக நூற்றனர். அவர்கள் இரவிலும் சிறுவிளக்கு வெளிச்சத்தில் நூல் நூற்றமை 'ஆளில் பெண்டிர் தாளிற் செய்த நுணங்கு நுண்பனுவல்' **(நற்., 353:1-2)**, 'பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கம்' **(புறம். 326:5)** எனப் பேசப்படுகின்றது.

நூலினால் முரட்டுத் துணிகளும் மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன. குளத்தில் படரும் பாசி போன்ற நூலினால் முரட்டுத் துணிகள் நெய்யப்பட்டன. நுண்மையான நூல்களினால் மெல்லிய துணிகள் நெய்யப்பட்டன. பால் ஆவி போன்ற மெல்லிய துணிகளும், பாம்புத் தோல் போன்ற அழகான துணிகளும், காகிதம் போன்ற மெல்லிய துணிகளும் பல வகையாக நெய்யப்பட்டன. 'இழை மருங்கறியா நுழை நூற் கலிங்கம்' **(மலைபடு. 156)** 'பாம்புரித் தன்ன வான் பூங் கலிங்கம்' **(புறம். 397:15)**, 'போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன அகன்றுமடி கலிங்கம்' **(புறம். 393:17-18)**, 'நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து, அரவுரி யுன்ன அறுவை' **(பொருநர். 82-83)**, 'காம்பு சொலித்தன்ன அறுவை' **(சிறு. 236)** எனப் பலதரமான ஆடைகள் நெய்யப்பட்டன. இத்தகைய படிநிலைகளைப் பெற்ற பருத்தியாடைகள் நாடெங்கும் பரவி நிலவழி ஊர்திகளே ஊடகமாயின.

தமிழ்நாட்டில் நெய்யப்பட்ட பருத்தித் துணிகளுக்குச் சிவப்பு, நீலம், மஞ்சள் முதலான சாயமூட்டினர். ஆனால் வெண்மையான துணிகளையே தமிழர் பெரிதும் விரும்பினர். வெள்ளையாடை சிறப்பாகவும் உயர்வாகவும் மதிக்கப்பட்டது. பிறந்த நாளாகிய வெள்ளணி நாளில் வெள்ளை ஆடை உடுத்துவது சிறப்பாக இருந்தது.

*சங்க காலத்தில் பருத்தி பயிர் செய்வதும் நூல் நூற்பதும் துணி செய்வதும் ஆடை விற்பதுமாகிய தொழில் சிறப்பாக நடந்தது. துணிகளை விற்ற வணிகருக்கு அறுவை வாணிகர் என்று பெயர் கூறப்பட்டது. மதுரையில் இருந்த இளவேட்டனார் என்னும் புலவர் அறுவை வாணிகம் செய்தார். ஆகையால் அவர் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் என்று பெயர்பெற்றார். அவர் இயற்றிய பன்னிரண்டு செய்யுள்கள் சங்க இலக்கியங்களில் தொகுக்கப்பட்டுள்ளன* ***(அகம். 56, 124, 230, 254, 272, 302; குறு. 185; நற். 33, 157, 221, 334; புறம். 329)****. அவ்வகையில் வணிக நோக்கிலான நிலவழி ஊர்திப் போக்குவரத்து செல்வாக்குப் பெற்றது.*

**உப்பு**

*'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பது பழமொழி. உணவுக்குச் சுவை அளிப்பது உப்பு. ஆகையால் இது 'வெண்கல் அமிர்தம்' எனப்பட்டது. பழங்காலத்திலிருந்து உப்பு மனிதருக்கு உணவாகப் பயன்படுகின்றது. ஊறுகாய், கருவாடு (உப்புக்கண்டம்) முதலானவற்றிற்கும் உப்பு வேண்டப்படுகின்றது. ஆகவே உப்பை எல்லா நாடுகளிலும் உண்டாக்கினர். தமிழகத்திலும் உப்பு செய்பொருளாகவும், வாணிகப் பொருளாகவும் உணவுப் பொருளாகவும் இருந்துவருகின்றது.*

*நெய்தல் நிலமாகிய கடற்கரை தமிழ்நாட்டைச் சூழ்ந்திருந்தபடியால் ஆங்காங்கே உப்பளங்கள் இருந்தன. ஆகையால் தமிழகத்துக்கு எக்காலத்திலும் உப்புப் பஞ்சம் ஏற்பட்டதேயில்லை. உப்பளங்களில் பாத்திகள் அமைத்துக் கடல்நீரைப் பாய்ச்சி உப்பு விளைவித்தனர். பாத்திகளில் பாய்ச்சப்பட்ட கடல் நீர் வெயிலில் ஆவியாகிப் போய் உப்புப் பூக்கும். இதுவே 'கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு'* ***(நற். 345:8)****. ஏர் உழாமல் உவர் நிலத்திலே உப்பு விளைவித்தபடியால் அவர்கள் 'உவர்விளை உப்பின் உழாஉழவர்'* ***(நற். 331:1)*** *எனப்பட்டனர்.*

**உவர்விளை உப்பின் உழாஅ உழவர்**
**ஓகை உமணர் வருபதம் நோக்கி**
**கானல் இட்ட காவற் குப்பை (நற். 331:1-3)**

*உமணர் (உப்பு வாணிகர்) மாட்டு வண்டிகளில் நெல்லை ஏற்றிக் கொண்டு சென்றனர். அக்காலத்தில் பெரிதும் பண்டமாற்று வணிகம் நடந்தது. ஆகையால் காசு கொடுத்து வாங்காமல் பண்டங்களை மாற்றினர். நெல்லுக்கு மாற்றிய உப்பை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு பயணித்தனர். அவர்கள் மனைவி மக்களொடு வந்து உப்பை வாங்கிக் கொண்டு குடும்பத்தோடு ஊர்ஊராக வண்டியை ஓட்டிக்கொண்டு போய்விற்றனர்.*

**தந்நாடு விளைந்த வெண்ணெல் தந்து**
**பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி**
**நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி**
**அவண் உறை முனிந்த ஒக்கலோடு புலம்பெயர்ந்து**
**உமணர் போகலும் (அகம். 183:1-5)**

*உமணர் உப்பு வண்டிகளை ஓட்டிக்கொண்டு கூட்டம் கூட்டமாகச் சென்றனர்.*

**உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி**
**அதர்படு பூழிய சேண்புலம் படரும்**
**ததர்கோல் உமணர் போகும் நெடுநெறிக்**
**கண்நிரை வாழ்க்கை (அகம். 390:1-4)**

*கடற்கரைக்கு அப்பாலுள்ள உள்நாடுகளுக்கும் மலைநாடுகளுக்கும் எருதுகள் உப்பு வண்டியை இழுத்துக்கொண்டு போயின.*

**கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்**
**ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்**
**உரனுடை நோன்தாள் பகட்டு (புறம். 60:8-10)**

*உமணர் ஒரே ஊரில் தங்காமல் ஊர்கள்தோறும் சென்றனர். அவர்கள் குடும்பத்தோடு நிலையா வாழ்க்கையை நடத்தினர்.*

**உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை**
**மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்**
**கணங்கொள் உமணர் (நற். 138:1-3)**

*பாரமான வண்டியை இழுத்துக்கொண்டு எருதுகள் மேட்டில் ஏறியும் பள்ளத்தில் இறங்கியும் செல்லும்போது வண்டியின் அச்சு முறிந்து விடுவதும் உண்டு. அதன் பொருட்டு ஆயத்தமாக சேம அச்சுக் கொண்டு போனார்கள் (**புறம். 102:1-2**). உமணர் பாதிரிப்பூவையும் அலரிப் பூவையும் தொடுத்துக் கட்டின. பூமாலையைத் தலையில் அணிந்து காலில் செருப்பு அணிந்து கையில் தடி ஏந்திச் சென்றனர்.*

**அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ**
**எரியிதழ் அலரியொடு இடைபட விரைஇ**
**வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்**
**தோல்புதைச் சிரற்றடிக் கோலுடை யுமணர் (அகம். 191:1-4)**

*உமணர் ஆங்காங்கே வழியில் தங்கி உணவு சமைத்து உண்டு ஓய்வுகொண்டு மீண்டும் பயணம் செய்தனர் (**அகம். 159:1-4**). சில இடங்களில் சமைக்கவும் உண்ணவும் நீர் கிடைக்காது. அவ்விடங்களை அகழ்ந்து குழி உண்டாக்கிச் சுரக்கும் நீரை உண்டனர் (**அகம். 295:9-14**). தீக்குச்சி இல்லாத காலமாகையால் அவர்கள் தீக்கடை கோலினால் தீயுண்டாக்கிச் சோறு சமைத்தனர் (**அகம். 169:5-8**).*

*செல்லும் வழியில் தங்கி ஊருக்குள் சென்று உப்பு விற்றனர். உமண ஆடவர் ஊர்க்குள் சென்று உப்பு விற்பதில்லை. உமணப் பெண்கள் உப்பை ஊருக்குள் கொண்டுபோய் விற்றனர். அவர்கள் காசுக்கு உப்பு விற்கவில்லை. உப்பை நெல்லுக்கு மாற்றினர்.*

**நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்**
**கொள்ளீரோ வெனச் சேரிதொறும் நுவலும் (அகம். 390:8-9)**

**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எவ்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்**
**சேரிவிலைமாறு கூறலின் (அகம். 140:5-8)**

*ஆறுகளும் கால்வாய்களும் உள்ள ஊர்களில் படகுகளில் உப்பை ஏற்றிக்கொண்டு போய் விற்றனர். உப்பை நெல்லுக்கு மாற்றி அந்த*

*நெல்லைப் படகில் ஏற்றிக்கொண்டு சென்றனர் என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகின்றார்.*

**கொழும் பல்குடிச் செழும்பாக்கத்துக்**
**குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு**
**வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணை நிலைப் புரவியின் அணைமுதற்பிணிக்கும்**
**கழிசூழ் படப்பை (பட்டின. 27-32)**

*மாட்டு வண்டிகள் போகமுடியாத பாறைகளும் மலைகளும் மேடுகளும் உள்ள ஊர்களுக்கு உப்பு மூட்டைகளைக் கழுதை மேல் ஏற்றிக் கொண்டுபோய் விற்றனர். அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து நல்ல நிமித்தம் பார்த்து வீரர்களையும் அழைத்துக் கொண்டு மலைநாடுகளுக்குச் சென்றனர். கொள்ளைக்காரர் இடைவழியில் வந்து கொள்ளையிடுவதும் உண்டு. ஆகையினால் அவர்கள் தங்களுடன் வீரர்களை அழைத்துக் கொண்டு பயணித்தனர்.*

**அணங்குடை முந்நீர் பரந்த செருவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிர்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்**
**நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**
**குறைக்குளம்பு தைத்த கற்பிறழ் இயவு (அகம். 207:1-6)**

**பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**
**திருந்துவாள் வயவர் (அகம். 89:12-13)**

*உப்பு மூட்டைகள் மட்டுமல்லாமல் மிளகு முதலான வேறு பண்டங்களைச் சுமந்துகொண்டு போகக் கழுதைகளையும் அக்காலத்தில் பயன்படுத்தினர்.*

**இல்போல் நீழல் செல்வெயில் ஒழிமார்**
**நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்**

**புறநிறைப் பண்டத்துப் பொறையசாக் களைந்த**

**(அகம். 343:11-13)**

*உப்பு உற்பத்தியும் உப்பு வாணிகமும் செம்மையாக நடந்தன. தமிழகத்துக்கு உப்பு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படவில்லை என்பது சிறப்பிற்குரியது. அது தமிழகத்திலே உண்டாக்கப்பட்டுத் தமிழகத்திலேயே செலவு செய்யப்பட்டது.*

**வளை (சங்கு)**

*சங்குக்குத் தமிழ்ப் பெயர் வளை என்பது. தமிழகத்தின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்த படியால் வளை அதிகமாகக் கிடைத்தது. சங்குகளில் இடம்புரிச்சங்கு என்றும், வலம்புரிச் சங்கு என்றும் இரு வகையுண்டு. வலம்புரிச் சங்கு கிடைப்பது அரிது. ஆகையால் வலம்புரிச் சங்குக்கு விலை கூடுதல். சங்குகளை வளைகளாக அறுத்து வளையல் செய்தனர். அக்காலத்துத் தமிழ் மகளிர் எல்லாரும் சங்கு வளைகளைக் கையில் அணிந்தனர். கண்ணாடி வளையல் அணிவது அக்காலத்து வழக்கம் அல்ல. சங்கு வளையணிவது மங்கலமாகக் கருதப்பட்டது. அரண்மனையில் வாழ்ந்த அரச மகளிர் முதல் குடில்களில் வாழ்ந்த ஏழை மகளிர் வரையில் அக்காலத்தில் சங்கு வளைகளை அணிந்தனர். ஆகவே வளைகளை (சங்கு) வளையல்களாக அறுத்து வளையல் உண்டாக்கும் தொழில் அக்காலத்தில் சிறப்பாக நடந்தது. கடல்களிலிருந்து சங்குகள் எடுக்கப்பட்டன.*

*கொற்கைக் கடலில் முத்து உண்டானது போலவே சங்குகளும் உற்பத்தியாயின. பரதவர் கடலில் முழுகிச் சங்குகளை எடுத்தபோது சங்கு முழங்கி ஊருக்குத் தெரிவித்தனர்.*

**இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி**
**வலம்புரி மூழ்கியவான்திமில் பரதவர்**
**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்**
**கலிகெழு கொற்கை** **(அகம். 350:11-14)**

*கொற்கைக் கடலில் மட்டுமன்று, கடலில் பல இடங்களிலும் கடலிலிருந்து சங்கு எடுக்கப்பட்டது. சங்குகளை (வலம்புரி, இடம்புரி) சிறு*

*வாளினால் அறுத்து அரத்தினால் அராவி அழகான வளையல்களைச் செய்தனர்.*

**வல்லோன்**
**வாளரம் பொருத கோணேர் எல்வளை (நற். 77:8-9)**

*வளையல்களில் கொடிகள், பூக்கள், வரிக்கோடுகள் முதலியவை அமைத்து அழகாகச் செய்யப்பட்டன. வளையல் அறுக்கும் தொழில் ஆங்காங்கே நடந்தது. சங்கச் செய்யுள்களில் இத்தொழில் கூறப்படுகின்றது. 'அரம்போழ் அவ்வளை'* ***(ஐங். 106)****, 'கடற்கோடு அறுத்த அரம்போழ் அவ்வளை'* ***(ஐங். 48)****, 'கோடீர் எல்வளை'* ***(ஐங். 196)****, 'கோடீர் இலக்குவளை'* ***(குறு. 31:5)****, சங்குகளை வளையாக அறுத்துத் தொழில் செய்தவர்களுக்கு வேளாப் பார்ப்பான் என்று பெயர்.*

**வேளாப் பார்ப்பான் வாள்அரம் துமித்த**
**வளைகளைந் தொழிந்த கொழுந்து (அகம். 24:1-2)**

*வேளாப் பார்ப்பான் என்பதன் பொருள் வேள்வி செய்யாத பார்ப்பான் என்பது (விசுவப்பிராமணர்) சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும் சங்கு வளைகளை விற்கும் தொழிலும் அக்காலத்தில் சிறப்பாக நடந்தன. இத்தொழில்முறைக்கு நிலவழி ஊர்திகள் துணைபுரிந்தன.*

**கைத்தொழிலும் வணிகமும்**

*சோழ நாட்டில் சங்க காலம் முதல் உழவு தொடர்பான கைத்தொழில்களும், நெசவு முதலிய தொழில்களும் வளர்ந்து வந்தன. உப்பெடுத்தல் சிறந்த தொழிலாக இருந்தது. பிற்காலச் சேரர் காலத்தில் எண்ணிறந்த கோவில்களில் செப்புத் திருமேனிகளும் பித்தளைத் திருமேனிகளும் படிமங்களும் செய்யப்பட்டன. எனவே, வார்ப்பட வேலை நன்கு வளம் பெற்றது. வீட்டுப் பயனுக்கும் ஒவ்வொரு கோவிலுக்கும் செம்பு, பித்தளை, வெள்ளிப் பாத்திரங்கள் செய்யப்பட்டன. எனவே, உலோகத் தொழில் வளம்பெற்றது. மக்களுக்கும் கடவுளர் திருவுருவங்களுக்கும் பலவகை நகைகள் செய்யப்பட்டன. கற்கள் பதித்த நகைகளால் பொற்கொல்லுத் தொழில் மேன்மையுற்றது. சோழராட்சியில்*

*புதிய கோவில்கள் கட்டப்பட்டன. பழைய கோவில்கள் புதுப்பிக்கப் பட்டன. இவற்றுக்காகச் செங்கல் அறுக்கும் தொழிலும் கல் தச்சர் தொழிலும் மரத்தச்சர் தொழிலும் பெருகின. கோவில்களில் புராணம் தொடர்பான ஓவியங்கள் தீட்டப்பட்டன. கற்சிலைகள் கணக்கிலவாய்த் தோன்றின. இவற்றால் ஓவியத் தொழிலும் சிற்பத் தொழிலும் சிறப்படைந்தன. கோவில்களில் பலவகைத் தோல் கருவிகளும் துளைக் கருவிகளும் நரம்புக் கருவிகளும் கஞ்சக் கருவிகளும் தேவைப்பட்டன. இவை தொடர்பான தொழில்கள் வளம்பெற்றன. கப்பல் கட்டும் தொழில், பலவகைப் போர்க்கருவிகளைச் செய்யும் தொழில் முதலியன செழுமையுற்றன.[17]*

*சோழப் பெருநாட்டுச் செய்பொருள்களும் விளைபொருள்களும் தேவைக்கு மேற்பட்டவை பிற நாடுகளில் விற்கப்பட்டன. இவ்வாணிகம் இந்தியாவில் இருந்த பிற நாடுகளோடு நன்முறையில் நடைபெற்றது. சீனம் முதலிய கீழை நாடுகளுடனும் அரேபியா முதலிய மேலை நாடுகளுடனும் கடல் வாணிகம் நடைபெற்றது. சோணாட்டு வணிகர் இந்தியாவின் பல பகுதிகளிலும், கடல்கடந்த நாடுகளிலும் தங்கி வணிகத்தை வளப்படுத்தினர். சோணாட்டுக் கப்பல்கள் பாரசீக வளைகுடா வழியாக மேலைநாடுகளுடன் வாணிகம் செய்யச் சென்று வந்தன. கிழக்கில் மலேயா, கிழக்கிந்தியத் தீவுகள், இந்தோசீனம், சீனம் முதலிய நாடுகட்குச் சென்று மீண்டன. சோழ நாட்டிற்கும் சீனத்திற்கும் அரசாங்க உறவு நெருக்கமாக இருந்தது. சோழப் பெருநாட்டிலிருந்து விலையுயர்ந்த மணிகள், மூங்கில், தந்தம், தேக்கு மரம், சந்தன மரம் ஏலம், இலவங்கம், மெல்லிய ஆடைகள் முதலியன அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. அரேபியாவிலிருந்து ஆண்டுதோறும் குதிரைகள் வந்திறங்கின.[18]*

**சமுதாய வாழ்க்கை**

*அரசர், அந்தணர், வணிகர் வேளாளரும் பலவகைத் தொழிலாளரும் அக்காலச் சமுதாயத்தில் வாழ்ந்தனர். இவருள் ஒவ்வொருவரும் தத்தம் தொழில்களைச் செவ்வனே ஆற்றிவந்தனர். விழாக் காலங்களிலும் பொது நிகழ்வுகளிலும் பல தொழில் மக்களும் கலந்து பழகினர். கோவில்களில்*

*சமயக் கல்வி புகட்டப்பட்டது. மடங்கள் சமயக் கல்வியையும் பயணிகளுக்கு உணவையும் அளித்தன. கோவில் விழாக்களில் சோழப் பேரரசர் பங்கு கொண்டனர்.*

*சிற்றூர்களில் கோவில் தலைமைபெற்று விளங்கியது. பல கோவில்கள் ஊரவை கூடவும், நீதிமன்றங்களாகவும் அயலார் படையெடுப்பின்போது குடிமக்களைப் பாதுகாக்கும் இடங்களாகவும் பயன்பட்டன. காவிரி பாய்ந்த மருத வளநாடு தமிழகத்தின் நெற் களஞ்சியமாகவும் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற இடமாகவும் இருந்து வந்தது. அங்குச் சமுதாய வாழ்க்கையும் சிறப்புற்றிருந்தது. இச்சமுதாய வாழ்வில் தொழில்முறைப் போக்குவரத்திற்குப் பெருமளவில் நிலவழி ஊர்திகள் பயன்பட்டன.*

*நகரங்களில் சங்கறுக்கும் தொழில் நடந்தது. காவிரிப்பூம் பட்டினத்தில் ஒரு வீதியில் சங்குகளை வளையல்களாக அறுக்கும் தொழில் நடந்தது. ‘அணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்’ **(சிலம்பு. 5:47)**. சோழ நாட்டு வஞ்சிமா நகரத்தில்,*

**விலங்கரம், பொரூஉம் வெள்வளை போழ்நரோடு**

**இலங்குமணி வினைஞர் இரீஇய மறுகும் (மணி. 28:44-45)**

*அறியப்படும்.*

*சங்கு வளைகளை அணிவதை அக்காலத்து மகளிர் நாகரிகமாகக் கருதினர். அது மங்கலமாகவும் கருதப்பட்டது. கைம்பெண்கள் தவிர ஏனைய சுமங்கலிப் பெண்கள் சங்கு வளைகளை அணிந்தனர். ‘அணிவளை முன்கை ஆய்இதழ் மடந்தை’ **(அகம். 361:4)**, ‘சின்னிரை வால்வளைக் குறுமகள்’ **(குறு. 189:6)**, ‘வளைக்கை விறலி’ **(புறம். 135:4)**, ‘பல்லோன் வாளரம் பொருத கோணேர் எல்வளை அகன்தொடி செறித்த முன்கை’ **(நற். 77:8-10)** எனச் சங்க நூல்களில் அக்காலத்து மகளிர் வளையணிந்திருந்தமை கூறப்படுகின்றது. சொக்கப்பெருமான் வளையல் விற்றதாகத் திருவிளையாடற் புராணத்தில் (வளையல் விற்ற படலம்) கூறப்படுகின்றது. இடம்புரிச் சங்கினால் செய்த வளையல்களைச் சாதாரண நிலையில் உள்ள*

*பெண்கள் அணிந்தார்கள். வலம்புரிச் சங்குகள் விலை மிகுதியின் காரணமாகச் செல்வச் சீமாட்டிகளும் அரசியரும் அணிந்தனர். செல்வ மகளிர் பொற்றோடு (பொன் வளையல்) அணிந்து அதனுடன் வலம்புரிச் சங்கு வளையலையும் பூண்டனர். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய அரசியாகிய பாண்டிமாதேவி கைகளில் தங்க வளைகளை அணிந்திருந்ததோடு வலம்புரிச் சங்கு வளையையும் அணிந்திருந்தார்.*

**பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை**
**வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து (நெடுநல். 141-142)**

*காவிரிப்பூம்பட்டினத்தில் செல்வச் சீமானாக இருந்த மாநாய்கன் மகளான கண்ணகியும் வலம்புரிச் சங்கு அணிந்திருந்தாள். மதுரையில் கோவலனை இழந்து கைம்பெண் ஆனபோது கண்ணகி தன் கைகளில் அணிந்திருந்த சங்கு வளையைக் கொற்றவைக் கோயிலின் முன்பு தகர்த்து உடைத்தாள் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. 'கொற்றவை வாயிலில் பொற்றொடு தகர்த்து'* ***(கட்டுரைக்காதை, 181)****.*

*மணமகன், தான் மணக்க இருக்கும் மணமக்களுக்குச் சங்குவளை கொடுப்பது அக்காலத்து வழக்கம். சங்குவளை அணியும் வழக்கம் தமிழகத்தில் மட்டுமன்றி, பாரத நாடு முழுவதிலும் அக்காலத்தில் இருந்தது. இன்றைக்கு 3000 ஆண்டுகளுக்கு முன்னே சிந்துவெளியில் இருந்த ஹரப்பா நகரத்துத் திராவிட நாகரிக மகளிரும் சங்கு வளைகளை அணிந்திருந்தனர் என்பது அங்கு அகழ்ந்தெடுக்கப்பட்ட மனித எலும்புக் கூடுகளுடன் சங்கு வளைகளும் இருந்தமையால் புலனாகும்.[19] கொற்கை, காவிரிப்பூம்பட்டினம் உறையூர் முதலான ஊர்களில் நிலத்தை அகழ்ந்தெடுத்தபோது அங்கிருந்து கிடைத்த பழம் பொருள்களுடன் உடைந்துபோன சங்கு, வளையல் துண்டுகளும் கிடைத்தன. இதனால் சங்க செய்யுள்களில் கூறப்படுகிற அக்காலத்து மகளிர் சங்கு வளைகளை அணிந்திருந்தனர் என்னும் செய்தி வலிமைபெறுகிறது.*

*சங்கு முழங்குவது மங்கலமாகக் கருதப்பட்டது. கோயில்களிலும் அரண்மனைகளிலும் சங்கு ஊதுவது வழக்கம். அரண்மனைகளிலே காலை வேளையில் முரசு கொட்டியும் சங்கு முழங்கியும் அரசரைத் துயிலெழுப்பினர். அரண்மனைகளில் வலம்புரிச்சங்கு காலையில் முழங்கியதை,*

**தூக்கணங் குரீஇத் தூங்கு கூடேய்ப்ப**
**ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி**
**ஞாலங் காவலர் கடைத்தலைக்**
**காலைத்தோன் றினாலும் (புறம். 225:11-14)**

*என்றும்,*

**மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்**
**வால் வெண் சாங்கொடு வகைபெற் றோங்கிய**
**காலைமுரசங் கனைகுரல் இயம்ப (சிலம்பு. 14:12-14)**

*என்றும் வரும் வரிகள் அறிவிக்கின்றன.*

*மகளிர் சங்கு வளைகளை அணிந்து வந்த வழக்கம் அண்மைக்காலம் வரையில் இருந்தது. கி.பி. 18ஆம் நூற்றாண்டு முதல் இசுலாமிய தொடர்பு ஏற்பட்ட பிறகு கண்ணாடி வளையல் அணியும் வழக்கம் ஏற்பட்டது. ஆகவே சங்குவளை அணியும் வழக்கம் பிற்காலத்தில் மறைந்துபோயிற்று.*

*சங்க காலத்தில் கடலின் அடியிலிருந்து சங்கு எடுக்கும் தொழிலும் சங்குகளை வளையல்களாக அறுக்கும் தொழிலும் வளையல் விற்கும் வாணிகமும் மகளிர் வளையல் அணிந்த வழக்கமும் இருந்தன. காதுகளில் சங்குக் குழையணிவதும் விரல்களில் சங்கு மோதிரம் அணிவதும்கூட அக்காலத்து வழக்கமாக இருந்தது. நிலவழி ஊர்திகள் சங்கு விற்கும் தொழிலுக்கு உறுதுணை புரிந்தன.*

**முத்து**

*தமிழ்நாட்டுக் கடலில் முத்து உண்டாயிற்று. கடலிலே உண்டாகிற முத்துச்சிப்பி என்னும் ஒருவகைக் கிளிஞ்சிலில் முத்து உண்டாயிற்று.*

*ஆறுகள் கடலில் கலக்கிற புகர் முகங்களிலே முத்துச்சிப்பிகள் மிகுதியும் உண்டாயின. பாண்டி நாட்டு முத்து புகழ்பெற்றது. 'தென் கடல் பவ்வத்து முத்து' என்று அது புகழப்படுகின்றது.*

*முத்து நவரத்தினங்களில் ஒன்றாக மதிக்கப்பட்டது. ஆகவே அது விலைமதிப்புள்ளது. அரசர்கள் 'ஏகவடம்' என்னும் முத்துமாலைகளை அணிந்தனர். ஏகவடம் அரசர்களுக்குரிய அடையாள அணிகளில் ஒன்று. செல்வர் வீட்டுப் பெண்களும் அரசகுமாரிகளும் பேரரசியரும் முத்து மாலைகளை அணிந்தனர். உரோம் மகளிர் தமிழ்நாட்டு முத்துக்களைப் பெரிதும் மதித்தனர். தமிழ்நாட்டுக்கு வந்து யவன வணிகர் இங்கிருந்து வாங்கிக்கொண்டுபோன பொருள்களில் முத்தும் ஒன்றாகும்.*

*தமிழகத்து முத்துக்களில் பாண்டி நாட்டு முத்து உலகப்புகழ் பெற்றிருந்தது. கொற்கைக் குடாக் கடலில் விளைந்த முத்து, சங்கச் செய்யுள்களில் புகழப்படுகின்றன 'முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை' **(நற். 236)**. 'கொற்கையம் பெருந்துறை முத்து' **(அகம். 27:9)**. சங்க காலத்தில் பாண்டி நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த கொற்கைக் குடாக் கடல் பிற்காலத்தில் மணல் தூர்ந்து மறைந்து போயிற்று. அக்கடல் உள்நாட்டில் ஊடுருவிக் குடாக் கடலாக அமைந்திருந்தது. கடல்வழியாகப் பெறப்பட்ட முத்துகள், அணிகலன் தயாரிக்கும் நோக்கில் உள்நாடுகளில் வண்டி, விலங்கு போன்றவற்றால் எடுத்துச் செல்லப்பட்டன.*[20]

**யானைக் கோடு (தந்தம்)**

*மலைகளிலும் மலையைச் சேர்ந்த காடுகளிலும் யானைகள் இருந்தன. கொங்கு நாட்டைச் சேர்ந்த மலைக்காடுகளில் யானைகள் பெருமளவில் இருந்தன. கொங்கு நாட்டு யானை மலைகளும் காடுகளும் அக்காலத்தில் உம்பற்காடு (உம்பல்-யானை) என்று பெயர் பெற்றிருந்தன. யானைகளைப் பிடித்துப் பழக்கி அவற்றைப் போர்க்களங்களில் போர் செய்வதற்குப் பயன்படுத்தினர். அக்காலத்து அரசர்கள் வைத்திருந்த நான்கு வகையான சேனைகளில் யானைப் படையும் ஒன்று. குட்டுவன் என்னும் சேர அரசன் மிகப் பெரிய யானைப் படையை வைத்திருந்தமையால் அவன், 'பல்யானைச்*

*செல்கெழு குட்டுவன்' என்று பெயர்பெற்றான். (யானைச் செல்-யானைக் கூட்டம்) கொங்கு நாட்டை அக்காலத்தில் அரசாண்ட 'பொறையர்' என்னும் சேர அரசர் யானைகளை வைத்திருந்தனர். அவர்களுடைய யானைகள் பசு மந்தைகளைப் போலக் காணப்பட்டன.*

*அக்காலத்தில் குறிஞ்சிகளில் (மலை) வாழ்ந்த குறவர்கள் யானைகளை வேட்டையாடிக் கொன்று அவற்றின் கோடுகளைச் (தந்தம்) சேர்த்து வைத்தனர். அவர்களுக்கு உணவுப்பஞ்சம் வந்த காலத்தில் தந்தங்களை விற்று உணவு வாங்கி உண்டனர். யானைகளை வேட்டையாடிக் கொன்றனர். புலியோடு போர் செய்து புண்பட்டு இளைத்துப்போன யானையைக் கானவர் அம்பு எய்து கொன்று அதன் கோடுகளைக் கைக்கொண்டனர்.*

**புலியொடு பொருத புண்கூர் யானை**
**நற்கோடு நயந்த அன்பில் கானவர்**
**விற்சுழிப்பட்ட நாமப் பூசல் (நற். 65:5-7)**

*கொல்லிமலையில் இருந்த குறவர் உணவு கிடைக்காமல் பசித்திருந்த போது தங்களிடமிருந்த யானைக்கோடுகளை விற்று உணவு பெற்றனர்.*

**காந்தளஞ் சிலம்பில் சிறுகுடி பசித்தெனக்**
**கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்துண்ணும்**
**வல்வில் ஓரி கொல்லிக் குடவரை (குறு. 100:3-5)**

*வேங்கடமலையில் வாழ்ந்தவர் ஒன்றுசேர்ந்து யானையை வேட்டையாடிக் கொன்று அதன் கோடுகளைக் கொண்டு போய் மதுக் கடையில் கொடுத்து மது அருந்தினர். மதுவை நெல்லுக்கு மாற்றுவது வழக்கம். இவர்கள் நெல்லுக்குப் பதிலாக யானைக்கோட்டைக் கொடுத்தனர்.*

**வரிமாண் நோன் ஞாண் வன்சிலைக் கொளீஇ**
**அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்**
**அண்ணல் யானை வெண்கோடு கொண்டு**
**நறவு நொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்**

……… ……….

**விழவுடை விழுச்சீர் வேங்கடம் (அகம். 61:7-13)**

*மலைவாழ் குறவர்கள் அந்தந்த நாட்டு அரசருக்குப் பண்டங்களைக் காணிக்கை செலுத்தும்போது யானைத் தந்தங்களையும் கையுறையாகக் கொடுத்தார்கள். சேரன் செங்குட்டுவன் பெரியாறு, மலையிலிருந்து விழுகிற இடத்தில் மலையடிவாரத்தில் வழக்கமாக சென்று தங்கி வேனிற் காலத்தைக் கழிப்பது வழக்கம். அவன் மலையடிவாரத்துக்கு வரும்போது மலையில் வாழும் குறவர்கள் அவனுக்குக் காணிக்கை செலுத்தினர். மலைகளில் கிடைக்கும் பொருள்களாகிய சந்தனக்கட்டை, அகிற்கட்டை, தேன், பலாப் பழங்கள், மிளகு முதலிய பொருள்களையும், யானைத் தந்தங்களையும் அவர்கள் கொண்டுபோய்க் கொடுத்தமையைச் சிலப்பதிகாரம் **(25:37)** கூறுகின்றது. இவ்வாறு ஓரிடத்திலிருந்து பிற பகுதிக்குத் தரைவழியே போக்குவரத்து மேற்கொள்ள அந்தந்தத் திணைக்குரிய விலங்கும், திணைமாந்தர் அறிவில் விளைந்த சுமைதாங்கு ஊர்திவகையும் உருவாகியுள்ளன.*

**நிலவழி ஊர்தியும் போக்குவரத்தும்**

*நிலவூர்திகள் அணிகம், வண்டி, விலங்கு என மூவகைப்படும். அவை அணிகம், சிவிகை, பல்லக்கு, மேனா, சப்பரம் என்பன. சிவிகை, இருவர் செல்லும் கூண்டுப் பல்லக்கு. பல்லக்கு எண்மருக்குக் குறையாது தோளில் தாங்கிச் செல்லும் திறந்த பல்லக்கு. சப்பரம் உருளியின்றி ஒற்றைத்தட்டுள்ள சப்பைத் தேர்.*

*சிவிகை என்பது சிபிக்கா என்றும், பல்லக்கு என்பது பர்யங்க என்றும், வடமொழியில் திரியும். சப்பரம் இன்று தெய்வப்படிமையைக் கொண்டு செல்லவே பயன்படுத்தப்பெறும்.*

*வண்டி இவை சகடம் என்பது கூடாரப்பண்டி, கொல்லாப் பண்டி, வையம், பாண்டில், வங்கம், தேர் என்பன. சகடம் பொதுவகையான மாட்டு வண்டி; கூடாரப் பண்டி; கூண்டு வண்டி; கொல்லாப் பண்டி சிறந்த காளைகள் பூட்டப்பெற்றதும் பெருமக்கள் ஏறிச் செல்வதுமான நாகரிகக்*

*கூண்டு வண்டி; வையம் என்பது இரு குதிரை பூண்டிழுக்கும் தேர் போன்ற வண்டி; பாண்டில் என்பது ஈருருளியுள்ள குதிரைவண்டி; வங்கம் பள்ளியோட வண்டி. அது பள்ளியோடம் போன்றது. தேர் இக்காலத் தேர்போற் சிறியது. விலங்கு : காளை, குதிரை, கோவேறு கழுதை, யானை, ஒட்டகம் என்பன நிலவழிப் போக்குவரத்து உயிரினங்கள்.*

*தமிழ்நாட்டிலும் வடநாடுகளிலுமுள்ள பேரூர்கட்கும் கோ நகர்கட்கும், தரைவழி என்னும் பெருஞ்சாலைகள் சென்றன. இச்சாலைகள் காடுகளில் கூடும் கவர்த்த இடங்களில் அவ்வந் நாட்டு வேந்தனின் விற்படைகள், வணிகச் சாத்துகட்கு வழிப்பறிக்கும் கள்வராலும் கொள்ளைக்காரராலும் பொருட்சேதமும் ஆட்சேதமும் நேராவாறு இரவும் பகலும் காத்து நின்றன.*

**உடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்**

**. . . . . . . . . . . . . . . . . . . . . ..**

**அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**

**உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்**

**வில்லுடை வைப்பின் வியன்காட் டியலின்** (பெரும். **76-82**)

*என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டை நாட்டைப் பற்றிக் கூறுதல் கருதத்தக்கது.*

**இந்தியச் சாலைகள்**

*நிலப்போக்குவரவில் தொன்மையானவை சாலைகள். ஒரு நாட்டின் முன்னேற்றத்தை அதன் சாலைகளைக் கொண்டே அறியலாம். ஏனெனில் ஒரு சமூகத்தில் பயன்படுகிற பொருள்களும், அதன் உற்பத்தியும், அதன் பண்பாட்டுக்கும் வளர்ச்சிக்கும் வழி உண்டாக்கும் கொள்கைகளும், சாலைகளின் வழியாகவே செல்லவேண்டும். 'சாலை போகாத இடத்தில் வளர்ச்சியில்லை; பண்பாடு இல்லை.'*

*சாலைகளைப் பல வகையாகப் பிரிக்கலாம். அவற்றைத் திண்மையைப் பொறுத்து, ஆண்டு முழுதும் பயன்படுவன* (all-weather

roads), *மழையில் உதவாதன* (fair-weather roads) *என்றும், அமைப்பைப் பொறுத்து மண்சாலைகள்* (country road), *கல் வேய்ந்தவை* (metalled road) *தார் வேய்ந்தவை* (bitumenous road), *கற்காரைச் சாலைகள்* (concrete roads) *என்றும் பிரிக்கலாம். இன்றைய இந்திய சாலைகள் நிர்வாக அமைப்பைப் பொறுத்து நாட்டுப் பெருஞ்சாலைகள்* (National Highways), *மாநிலப் பெருஞ்சாலைகள்* (State highways), *வட்டத்தின் முதன்மைச் சாலைகள்* (district roads), *கிராமச் சாலைகள்* (village roads) *எனப் பகுக்கப்படுகின்றன.*

**பண்டைய இந்தியச் சாலைகள்**

*பண்டைய இந்தியர்கள் சாலை அமைப்பில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தனர். மொகஞ்சதாரோ, ஹராப்பா போன்ற இடங்களில் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன் இருந்த நகர்களில் அகன்ற சாலைகள் அமைக்கப்பட்டிருப்பதைப் புதைபொருள் ஆராய்ச்சியினர் கண்டுபிடித்துள்ளனர். கி.மு. 300 இல் சாணக்கியரால் எழுதப்பட்ட அர்த்தசாஸ்திரத்தில் தோட்டச்சாலைகளும் தேர்ச்சாலைகளும் 24 அடி அகலமும், படைவீடுகளுக்குச் செல்லும் சாலைகள் 48 அடி அகலமும் ஒற்றையடிப் பாதைகளும் யானைக் காட்டுப்பாதைகளும் மூன்றடி அகலமும் இருக்க வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.*[21]

*சந்திரகுப்த மௌரியன் காலத்தில் பாடலிபுரத்திலிருந்து (பாட்னா) இந்தியாவின் வடமேற்கு எல்லைக்கு ஒரு நெடுஞ்சாலையும் பல பெரிய சாலைகள் இருந்ததாகவும் சாலை மேற்பார்வைக்கு என ஒரு தனித்துறை நிறுவப் பட்டிருந்ததாகவும் தெரிகிறது. அக்காலத்திய சாலைகள் பெரும்பாலும் நடுவில் உயரமாகவும் மழைநீர் வடிய இருபுறமும் சரிவாகவும் அமைந்திருந்தன. பல சாலைகள் கல்வேயப்பட்டிருந்தன. இருமருங்கிலும் ஆலும் பிற நிழல்தரும் மரங்களும் அமைந்த பல சாலைகளைக் கட்டி வழிநெடுகச் சத்திரங்களையும் கிணறுகளையும் மாந்தோட்டங்களையும் வழிப்போக்கருக்குப் பயன்பட அசோகர் அமைத்தார். இவர்கள் காலத்தில் பாரத நாட்டுக்கு வந்த கிரேக்க, சீனப் பெரியோர் அச்சாலைகளை மிகவும் புகழ்ந்துள்ளனர்.*

*பண்டைய தென்னிந்தியாவில் 24 அடி அகலமுள்ள வண்டிகள் போகும் பெருவழிகளும் நடப்பவருக்காக அகன்ற வழிகளும் என இரு வகைச் சாலைகள் இருந்தன. அப்பெருவழிகளில் சில தென்னாட்டு அரசுகளை ஒன்றோடொன்று இணைத்தன. கிராம அமைப்புகளால் சாலைகள் பாதுகாக்கப்பட்டன என்றும் சில சமயம் சாலை அமைப்புக்காக மக்கள் தம் உழைப்பினை ஊதியமின்றித் தந்தனர் என்றும் தெரிகிறது.*

*பண்டைய இந்தியச் சாலைகள் பெருமழையில் பயன்படக்கூடியவை அல்ல. நதிகளும் கானாறுகளும் குறுக்கிட்ட இடங்களில் பரிசல்களில் படகுகளும் விடப்பட்டன. பாலம் கட்டும் கலை வளர்ச்சி பெறவில்லை. பண்டைய சாலைகளில் வனவிலங்குகளாலும் வழிப்பறியாலும் பயணிகள் மிகவும் துன்பப்பட்டதாகவும் தெரிகிறது.*

**முகமதியர் அரசாட்சி**

*முகமதியர் அரசாட்சியில் இந்தியச் சாலைகள் மேலும் முன்னேறின. ஷர்ஷா, முகம்மது துக்ளக் போன்ற அரசர்கள் சாலை அமைப்பில் மிகவும் கவனம் செலுத்தினர். பஞ்சாபிலிருந்து வங்காளத்துக்கும், ஆக்ராவிலிருந்து பர்ஹாம்பூர், ஜோத்பூர், சித்தூர் நகரங்களுக்கும் சத்திரங்கள் அமைந்த சாலைகளை ஷர்ஷா கட்டுவித்தார். 18-ஆம் நூற்றாண்டில் மொகலாயச் சாலைகள் செல்லாத நகரங்களே வடஇந்தியாவில் இல்லை. ஆனால், முகமதிய அரசர்கள் காலத்தில் பெருஞ்சாலைகள் பெற்ற சலுகைகள் சிறுசாலைகளுக்குக் கிடைக்கவில்லை. கிராமப் போக்குவரவு மிகவும் சீர்கெட்ட நிலையில் இருந்தது.*

**ஆங்கிலேயர் அரசாட்சி**

*நாட்டைப் பாதுகாக்கவும் உள்நாட்டுக் குழப்பங்களை அடக்கவும் சிறந்த சாலைகள் தேவை என்பதை உணர்ந்த ஆங்கிலேயர்கள் முதன்மையான பல சாலைகளைப் புதுப்பித்தனர். சென்ற நூற்றாண்டின் இடையில் இருப்புப் பாதைகள் இந்தியாவில் தோன்றியதும் சாலைகளின் பயன்பாடு குறைந்துவிட்டது. எனினும் இக்காலச் சாலை வல்லுநர்கள்*

இந்தியாவை இணைக்கும் வகையில் வட்டச் சாலைகளையும், புறவழிச் சாலைகளையும் உருவாக்கிப் பெருமையடைந்துள்ளனர்.

**தொகுப்புரை**

- பொருள் உற்பத்தியும் விற்பனை உற்பத்தியும் நிலவழியான உள்நாட்டு ஊர்திப் போக்குவரத்துக்குப் பெருமளவில் துணைபுரிந்துள்ளன.
- தமிழரும் பிறநாட்டினரும் கலந்துபேசும் பக்குவமும் பண்பாடும் வளர்வதற்குத் தரைவழி ஊர்திகள் பயன்பட்டமையைச் சங்க நூல்கள் உறுதிசெய்கின்றன.
- விலங்கினங்களில் குதிரை, போர்க்களத்தில் செயல்பட்டபோது போர்க்கருவிகள் சுமந்து செல்லும் வண்டிகளை இழுக்கவும் துணை செய்துள்ளன. பொதுவாகப் பொதி சுமக்கவும், வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளவும் குதிரை பயன்படுத்தப்படவில்லை. பெரும்பாலும் மனிதர் ஊர்ந்து செல்லும் வகையிலேயே குதிரைக்கு மதிப்பளிக்கப்பட்டிருந்தது.
- கோவேறு கழுதை 'அத்திரி' என்னும் பெயர் உடையது. இதனை 'இராச வாகனம்' எனவும் குறித்தனர். மதுரை வையையாற்றில் நிகழ்ந்த நீராட்டு விழாவில் அத்திரி ஊர்ந்து வந்தமையைச் சங்க இலக்கியமான பரிபாடல் சுட்டுகிறது.
- எருதுகளைப் பூட்டி வணிடிகளில் பொருள்களை ஏற்றிச் சென்று விற்பனை செய்த கூட்டுறவு முயற்சி, சங்க காலப் பண்பாட்டுப் பின்னணியாகப் பதிவு செய்யத்தக்கது.
- தமிழகத்திலிருந்து வடநாடுகளுக்கு வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளச் சென்ற தமிழர் அப்பகுதியிலும் தம் நாகரிகத்தை விதைத்துள்ளனர்.
- தமிழர், பிற மொழியைக் கற்றுக்கொள்ளப் பெரிதும் வாய்ப்பளித்தது தரைவழி வணிகமேயாகும். கலிங்க நாட்டில் தமிழர் நிகழ்த்திய

வணிகம் பற்றிய வரலாறு, தென்னிந்தியத் தொல்லியல் ஆய்வுகளில் புலனாகிறது.

- தமிழகத்தில் உரோமாபுரி மக்கள் கலந்து வாழ்ந்தனர். அந்நிலையில் ஊர்தியூர்ந்து பண்டங்களை விற்பனை செய்த தமிழர்களோடு நெருங்கிப் பழகும் நாகரிகம் வளர்ந்தது.
- தமிழகத்தில் விளைந்த கரும்பு அயல்நாடுகளுக்குப் பரவக் காரணமாக அமைந்தது வணிகப் போக்குவரத்தின் முதன்மையைக் காட்டுகிறது.
- பழந்தமிழர், வெண்ணெய் உருக்கிப் பெற்ற நெய்க்கு மாற்றாகப் பொன் கட்டிகளைப் பெறாமல் எருமை, பசு, கன்று ஆகியவற்றை வாங்கியுள்ளனர்.
- தென்னை, பனை மரங்களிலிருந்து இறக்கப்பட்ட கள், தானியங்களான நெல், தினையிலிருந்து பெறப்பட்ட கள் முதலியன ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்குச் செல்ல நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டுள்ளன.
- பணம் என்பது மக்கள் தங்களுக்கு இடையே பொருள்கள், சேவைகள் முதலியவற்றைப் பரிமாறிக் கொள்ள ஈடான மதிப்புடையதாகத் திகழ்ந்தது. பணத் தேவைக்காகப் பொருள்களை விற்பனை செய்து உள்நாட்டின் பல பகுதிக்கும் செல்லத் தரைவழி ஊர்திகள் பெரிதும் துணைபுரிந்துள்ளன.
- தரை வழியாகவே காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்திற்கு மிளகு மூட்டைகள் படகுகளில் ஏற்றப்பட்டுக் கழிகளின் வழியே ஆற்றில் செலுத்தப்பட்டு துறைமுகத்தில் தங்கியிருந்த அயல்நாட்டுக் கப்பல்களில் ஏற்றப்பட்டன.
- பருத்தியைப் பயிரிடும் தொழிலும் பதப்படுத்தும் தொழிலும் தமிழகத்தில் சிறப்புற்றிருந்தமையால் நெசவுத் தொழிலும், வணிகத் தொழிலும் மேலோங்கின. இப்பணிக்கு முதன்மை ஊடகமாக நிலவழி ஊர்திகள் திகழ்ந்தன.

- *உப்பு வணிகர் மாட்டு வண்டிகளில் நெல்லை ஏற்றிக்கொண்டு சென்றனர். நெல்லுக்கு மாற்றிய உப்பை வண்டிகளில் ஏற்றி அவர்கள் ஊர் ஊராகச் சென்றமைக்கான குறிப்புகள் சங்கப் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.*
- *சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும், சங்கு வளைகளை விற்கும் தொழிலும் செவ்வனே நிகழ்ந்தன. இத்தொழில்முறைக்கு நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டன. கடல்வழிப் பயணம் செல்ல வேண்டிய பொருள்கள், தொடக்கத்தில் நிலம் வழியாகவே துறைமுகத்திற்குச் சென்றன என்பது சங்க நூல்களில் தெளிவாகிறது.*
- *பிற்காலச் சேரர் காலத்தல் எண்ணிறந்து கோவில்களுக்குச் செப்புத் திருமேனிகளும் பித்தளைத் திருமேனிகளும் படிமங்களும் தேவைப் பட்டன. இவற்றைக் கோயில்தோறும் கொண்டு சென்று சேர்க்கும் பணியில் நில ஊர்திகள் ஈடுபடுத்தப்பட்டன.*
- *காவிரி பாய்ந்த மருதவளநாடு தமிழகத்தின் நெற்களஞ்சியமாகவும் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற இடமாகவும் அமைந்தது. இச்சமுதாய வாழ்விற்கு நிலவழி ஊர்திகள் அரண்செய்துள்ளன.*

**சான்றெண் விளக்கம்**

1. *சாமி. சிதம்பரனார்,* **தமிழர் வாழ்வும் பண்பாடும்**, *ப. 185.*
2. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்**, *ப. 28.*
3. *பா.வேலம்மாள் (பதிப்.),* **தமிழிலக்கியங்களில் பன்முக ஆளுமை**, *ப.197.*
4. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்**, *ப. 31.*
5. *பா.வேலம்மாள் (பதிப்.),* **தமிழிலக்கியங்களில் பன்முக ஆளுமை**, *ப.841.*
6. S.Paranavatana, **Tamil House Holder's Terrace Anuradhapura**, pp. 13-14.
7. S.Paranavatana (Ed.), **Inscriptions of Ceylon**, Vol. I, p. 28.

8. *ச.மெ.மீனாட்சிசுந்தரம்,* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம், தொகுதி-1**, *ப. 87.*
9. *மேலது, தொகுதி-3, ப. 334.*
10. *மேலது, ப. 337.*
11. *நிகமம், ப. 26.*
12. *ச.வே.சுப்பிரமணியன் (பதிப்.),* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம், தொகுதி-1**, *ப. 105.*
13. *மேலது, ப. 109.*
14. *ஐ.சங்கரமணி,* **சங்க கால ஆடைகளும் சாலியரும்**, *ப. 71.*
15. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்**, *ப. 125.*
16. *பா.வேலம்மாள் (பதிப்.),* **தமிழிலக்கியங்களில் பன்முக ஆளுமை**, *ப.199.*
17. *மா.இராசமாணிக்கனார்,* **தமிழக வரலாறும் பண்பாடும்**, *ப. 461.*
18. *மேலது, ப. 462.*
19. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்**, *ப. 145.*
20. *மயிலை சீனி. வேங்கசாமி,* **தெ.பொ.மீ. மணிவிழா மலர்**, *பக். 493-494.*
21. *கீ.சீ.இராமசாமி,* **இந்தியாவில் போக்குவரவு**, *ப. 88.*

## இயல் – 4

## சங்க இலக்கியத்தில் நீர்வழி ஊர்திகள்

தமிழ் நூல்களிலே மிகவும் பழமை வாய்ந்ததும் பெருமை வாய்ந்ததுமான தொல்காப்பியம், தமிழ் மக்கள் ஓரிடத்திலிருந்து பிறிதோர் இடத்திற்குச் செல்ல நிலவழி மற்றும் நீர்வழி எனும் இருவகை வழிகளைக் கையாண்டனர் எனும் செய்தியினைத் தருகின்றது.

**இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்**
**உரியதாகும் என்மனார் புலவர் (தொல். பொருள். அகத். 13)**

எனும் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் இருவகைப் பிரிவு என்பதற்குக் கால் வழியும் (தரைவழி) கடல்வழியும் என விளக்கம் கூறியுள்ளதைக் காணஇயலும். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் சென்றுவரவும், பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதிசெய்யவும் கடல்வழிப் போக்குவரத்து பயன்பட்டது. ஆகவே சங்க இலக்கியத்தில் காணப்படும் நீர்வழி ஊர்திகளைப் பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

பண்டைத் தமிழர்கள் நிலவழிக்கு எருமை, கழுதை, குதிரை, யானை, தேர் வண்டி போன்றவற்றையும், நீர்வழிக்கு மரக்கலம், அம்பி, தோணி, நாவாய், வங்கம் முதலியவற்றையும் பயன்படுத்தினர். வணிக வளர்ச்சிக்கு இவ்விரண்டுவழிப் போக்குவரத்தும் இன்றியமையாதவையாகின்றன. தொழில்புரிய உதவும் மூலப்பொருள்களை உற்பத்தி செய்துகொண்டு வருவதுவும் உற்பத்தி செய்த பொருள்களைப் பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்பதும் பொருளாதார மேம்பாட்டிற்கு அடிப்படையானவை. இப்பணிகளைப் பண்டைத் தமிழர்கள் நீர் நிலவழிப் போக்குவரத்தின் வாயிலாகச் செய்து வந்தனர். தமிழர்களின் உள்நாட்டு அயல்நாட்டு

*வாணிப வளர்ச்சிக்குப் பெரிதும் துணையாக அமைந்தது கடல்வழிப் போக்குவரத்தேயாகும்.*[1]

*பண்டைத் தமிழரின் கடற்பயணம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்ட பாரம்பரியம் மிக்கது. சங்க இலக்கியங்களும் பின்னர் உருவான இலக்கியங்களும் இதற்குச் சான்று தருகின்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் பண்டைத் தமிழர்கள் கடல்வழிப் பயணத்திற்கும் மீன்பிடி தொழிலுக்கும் வாணிபம் மேற்கொள்ளவும் பல்வேறு மரங்களால் செய்யப்பட்ட கலங்களைப் பயன்படுத்தினர் எனும் செய்திகள் கிடைக்கின்றன.*

*அவர்கள் அரேபியா, சாவகம், இலங்கை, கிரேக்கம், உரோம் போன்ற நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்குத் தொல்லியல் சான்றுகளும் வெளிநாட்டவர் குறிப்புகளும் சான்றாகின்றன. கடல் கடந்து நடந்த வாணிபத்தின்வழி பண்டைத் தமிழர் செல்வச் செழிப்புடன் திகழ்ந்தமைக்கு அவர்கள் கடல்வழிப் பயணத்திற்குப் பயன்படுத்திய கலங்களே முதன்மைக் காரணம் எனலாம். நீரைக் கடந்து செல்லப் பயன்பட்ட நீர் ஊர்திகளின் வகைகளைச் சங்க இலக்கியங்களின் வழிக் கீழ்வருமாறு காட்டலாம். அவை: 1. மிதவை, 2. புணை, 3. தெப்பம், 4.கட்டுமரம், 5. தோணி, 6. படகு, 7. ஓடம், 8. பரிசில், 9. வள்ளம், 10. சோங்கு, 11.அம்பி, 12. திமில், 13. நாவாய், 14. வங்கம், 15. கலம், 16. மதலை, 17. கப்பல், 18.பஃறி என்பவையாகும்.*[2]

*இக்கலப் பெயர்கள் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் பயின்று வந்துள்ளன. இவ்வகைக் கலங்களில் சிலவற்றை ஆறுகளிலும் ஏரிகளிலும் கடல்கடந்து செல்லவும் தமிழர் பயன்படுத்தினர். தமிழ் மக்கள் கடல் கடந்து செல்வதற்குக் கலத்திற் பிரிவு என்பர். 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்பது பண்டைத் தமிழர் பண்பாடுகளுள் ஒன்று. கடல் தாண்டிச் செல்வதற்குக் கப்பல்களையும், ஓடங்களையும் கட்டுமரங்களையும் பயன்படுத்தியுள்ளனர். தமிழ் இலக்கியங்களிலும், நிகண்டுகளிலும் அகராதிகளிலும் ஏறத்தாழ 400 கலங்களின் பெயர்கள் குறிப்பிடப்*

*பட்டிருக்கின்றன. சங்க இலக்கியங்களில் காணப்படும் 10 கலங்களை அவற்றின் பயன் அடிப்படையில் மூன்று வகையாகப் பிரிப்பர்.[3] அவற்றில் குறிக்கத்தக்கவை வருமாறு:*

*அ. மிதவை : புணை*

*ஆ. சிறிய மரக்கலம் : பஃறி, ஓடம், திமில், அம்பி, நீரணிமாடம், தோணி.*

*இ. பெரிய மரக்கலம் : நாவாய், கலம், மரக்கலம், வங்கம்.*

**அ. மிதவை**

*மனிதன் முதன்முதலில் நீரைக் கடக்கப் பயன்படுத்திய ஊடகம் மிதவையாகும். நீரில் மரங்கள் மிதப்பதைக் கண்ட தமிழர் அவற்றில் ஏறி நீரைக் கடக்க முயன்றான். பின்னர் தன் திறமையால் மரங்களைச் சீர்செய்து மூன்று அல்லது நான்கு மரங்களை ஒன்றாக இணைத்துக் கட்டுமரம் போன்ற அமைப்பை உருவாக்கினான்.*

*மிதவை என்பதற்கு மிதக்கக்கூடியது என்று பொருள். நிகண்டுகளில் மிதவை என்பதற்குத் தெப்பம் என்றே பொருள் கூறப்பட்டுள்ளது. தெப்பமும் மிதவையும் ஒன்றேயாகும். ஆனால் வட இந்தியாவில் இன்று காணப்படும் மிதவை தெப்பங்களைவிட வசதியுள்ளதாகக் கட்டப்பட்டிருக்கிறது. இந்த மிதவைகள் குளங்களில் மீன் பிடிப்பதற்கு மட்டுமே வசதியானவை எனத் தெரிகிறது. மிதவை, தெப்பத்தைப் போல் பல மரங்களை ஒன்றையொட்டி ஒன்றாக வரிசையாக வைத்துக் கட்டித் தட்டையாக இருக்கும்படி கயிறுகளால் பிணைக்கப்பட்டிருக்கும். அதன் மேலுள்ள தங்குமிடம் தெப்பத்தினின்று முற்றிலும் வேறுபட்டிருக்கும். வெயில், மழை, காற்று முதலியவை தாக்கா வண்ணம் இருக்கவும், படுத்துக் கொள்ளவும், பண்டங்களை வைத்துக் கொள்ளவும் மூங்கில் கம்புகளை வரிசையாக வைத்துக் கட்டி மேலே பாயால் மூடி வண்டிக் கூண்டுகளைப் போல்அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது. நான்கு கூண்டுகள் உள்ள பெரிய மிதவைகளும் உள்ளன. அவை*

***கைம்மான் எருத்தர் கலிமட மாவினர்***
***நெய்ம் மாண் சிவிறியர் நீர் மணக் கோட்டினர்***

**வெண் கிடை மிதவையர் நன் கிடைத் தேரினர்   (பரி. 6:33-35)**

*என்று பரிபாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன.*

**புணை**

*மிதவை வகையைச் சார்ந்த புணை, கட்டுமரம் போன்ற அமைப்புடன் காணப்படுகிறது. 'புணை' என்ற சொல்லுக்குத் தெப்பம், கால் விலங்கு, மூங்கில் ஆகிய மூன்று பொருள்கள் உண்டு. முதன்முதலாக ஆற்றின் ஓரமாக வளர்ந்த மூங்கில்கள் கொண்டு புணைகள் அமைக்கப்பட்ட காரணத்தாலும் மூங்கில் என்று கொண்ட புணை என்ற சொல் மரக்கலத்தின் பெயராக அமைந்திருக்கின்றது.[4]*

*சங்க இலக்கியத்தில் 'புணை' என்னும் சொல் 38 இடங்களில் வருகிறது. இக்கலம் பெரும்பாலும் ஆறுகளில் புனல் விளையாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டதாகக் கூறப்படுகிறது. வைகை ஆற்றில் பெண்கள் புனல் விளையாட்டிற்குச் செல்லும்போது வெள்ளை நெட்டியால் அமைந்த மிதவை, பலகையாலான புணை முதலியவற்றைக் கொண்டு செல்வர் எனப் பரிபாடல் குறிப்பதால் புணை என்பது சிறிய மிதவை என்று பொருள் கொள்ள முடிகின்றது.*

**புனை புணை ஏறத் தாழ்த்ததை தளிர் இவை**
**நீரின் துவண்ட சேஎய் குன்றம் காமர்**
**பெருக்கு அன்றோ வையை வரவு   (பரி. 6:68-70)**

*மேலும் உயிர் காக்கும் படகாக விளங்கியதை,*

**கரை காணாப் பெளவத்து கலம்சிதைந்து ஆழ்பவன்**
**திரை தரப் புணை பெற்று தீது இன்றி உய்த்தாங்கு**

**(கலி. 134:24-25)**

*என்பதால் பெறலாம். பெண்கள் புனல் விளையாட்டிற்குப் போகும் பொழுது வெள்ளை நெட்டியால் கட்டப்பட்ட மிதக்கும் பலகையான புணை முதலியவற்றைக் கொண்டு சென்றுள்ளனர் என்பது புலனாகிறது.*

**காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு**

**நல்லாண்மை என்னும் புணை (குறள். 1134)**

*என்று திருக்குறளில் கூறப்படுகிறது. நாணமும் நல்ல வீரமுமாகிய தெப்பங்களைக் காமம் என்னும் கடுமையான வெள்ளம் அடித்துக் கொண்டு போய்விடுகிறது என்று பொருள் கூறியுள்ளனர். எனவே அக்காலத்தில் நாவாய், மரக்கலம் என்னும் கப்பல்களும் புணை என்னும் தோணிகளும் இருந்தன என்று தெரிகிறது.*

**கொழுங்கோல் வேழத்துப் புணை (அகம். 186:8)**

*இவ்வரிக்கான உரையில் கொழுவிய கோலையுடைய கொறுக்கம் கழியால் செய்யப்பட்ட தெப்பத்தைத் துணையாகக் கொண்டது புணை என்று கூறப்படுகிறது. இதனால் கொறுக்கம் கழியால் தெப்பம் செய்யும் வழக்கம் காணப்பட்டதாகத் தெரிகிறது.*

*"புணை என்னும் கலம் புனல் நீரோட்டத்திற்கு மட்டுமன்றிக் கடலில் மீன் பிடித்தலுக்கும் பயன்பட்டதை,*

**வேழ வெண்புணை (அகம். 6:8)**

*என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

**கரை காணாப் பெளவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்**

**திரைதரப் புணைபெற்றுத் தீதின்றி உய்ந்தாங்கு (கலி. 134:24-25)**

*என்ற மணிமேகலை வரிகள்வழிக் கரை காணாத கடலிலே கப்பல் உடைய விழுந்து மூழ்கியவர், அலை கொண்டு வந்த 'புணை' ஒன்றைப் பற்றிக் கொண்டு உயிர் தப்பினார் என்கிறது. முற்காலத்தில் கட்டுமரங்களையே புணை என்ற பெயரில் அழைத்து வந்துள்ளனர்.*[5]

*கலம் புனல் நீரோட்டத்திற்கு மட்டுமன்றிக் கடலில் மீன் பிடித்தலுக்கும் பயன்பட்டதாக மற்றோர் அகநானூறுப் பாடல் அறிவிக்கிறது.*

**நாம்உறை தேஎம் மரூஉப் பெயர்ந்து அவனொடு**

**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழுந்தும்**

**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும் (அகம். 280)**

*எனப் புணை குறித்த பதிவு இடம்பெற்றுள்ளது. மேலும் இப்பாடலில் பரதவன் மகளைக் காதலிக்கும் காதலன், அவளை அடைய வேண்டுமாயின் ஒரேயொரு வழி உள்ளது என்றும், தன்னுடைய இடத்தில் இருப்பதைத் தவிர்த்து அப்பரதவனோடு பெரிய நீர்ப் பரப்பாகிய கடற்கரையின்கண் உப்புக் குவித்தலில் ஈடுபட்டிருக்கும் அவனோடு கடலில் வேட்டையாடி மீனை அகப்படுத்தியும் அவனுக்கு இரக்கம் வரும்படியும் நடந்து கொண்டால் தன் காதலியை அடையலாம் என்றும் கூறுவதாக அமைந்துள்ளது.*

*வணிகத்தின் பொருட்டுப் பெரிய மரக்கலங்களில் சென்றோர் அம்மரக்கலம் கடலின் பெரிய அலைகளை உடைப்பட்டுப் போகப் புணையாகிய தெப்பத்தில் கரை சேர்ந்ததாக மணிமேகலை கூறுகிறது.*

**ஓங்கிய பௌவத்து உடைகலப் பட்டோன்**

**வான்புணை பெற்றென மற்றவட்கு உரைப்பான் (மணி. 18:64-65)**

*தலைவியும் தோழியும் புனல் விளையாட்டில் ஈடுபட்டமையை,*

**புணைகை விட்டுப் புனலோடு ஒழுகின் (குறு. 222)**

*என்ற பாடல்வழி அறியலாம்.*

*தலைவன் அணைப்பிற்குத் தோள்கள் உதவுவது போலப் புணையும் உதவும் என்பதனை உவமைப்படுத்திக் கூறுவதனை இப்பாடலில் அறிய முடிகிறது.*

**எம்மொடு கொண்மோ எம் தோள் புரை புணையே (ஐங். 78:4)**

*மூங்கில் கழிகளைக் கொண்டு தெப்பம் அமைக்கப்பட்டதனையும் அறியமுடிகிறது. புனல் விளையாட்டிற்கு விட்ட தெப்பத்தைப் போல நுண்ணிய இறைவினையுடைய மூங்கிலின் மென்மையுடைய தோள்களை உடையவன் என்று தலைவனைத் தலைவி உவமைப்படுத்திக் கூறுவதனை,*

**புனற் புணை அன்ன சாய் இறைப் பணைத்தோள் (குறு. 168)**

*எனக் குறுந்தொகைப் பாடல்வழி அறியலாம்.*

*பகற்பொழுதில் ஆரவாரத்தையுடைய மலைநாட்டின் தலைவனுடைய மார்பினில் தெப்பமாகக் கொண்டு விளையாடுவது இனிமையுடையது என்று தலைவி உரைக்கிறாள்.*

**ஆர்கலி வெற்பன் மார்பு புணைஆக**

**கோடு உயர் நெடுவரைக் கவாஅன் பகலே**

**பாடு இன் அருவி ஆடுதல் இனிதே (குறு. 353)**

*மகளிர் விழாக்களின்போது தம்பட்டம் அடித்துத் தெப்பமாக விளையாடுவர்.*

**முழா இமிழ் துணங்கைக்குக் தழூ உப் புணை ஆக (பதிற்று. 52.14)**

*தலைவனுக்குத் தெப்பம் பற்றுக்கோடாகவும் விளங்குகிறது என்று தோழி தலைவனைச் சிறப்பித்துக் கூறுகிறாள்.*

**கிளையுடை மாந்தர்க்குப் புணையுமார் (குறு. 247:3)**

**தெப்பத்தின் அமைப்பு**

*இது மனிதன் மீன்பிடிக்கவும், சிறிய வகை நீர்நிலைகளைக் கடக்கவும் பயன்படுத்திய கருவியாகும். தெப்பம் என்பது கட்டு மரங்களின் தொடர்ந்த வளர்ச்சியாகும். ஏழு அல்லது எட்டுக்கும் மேற்பட்ட மூங்கில் கழிகளையோ சிறிய மரக்கம்புகளையோ வரிசையாக அடுக்கிக் குறுக்காக மூங்கில் அல்லது கம்புகளை வைத்துக் கயிறுகளால் பிணைத்துப் பலவைபோல் தட்டையாகச் செய்யப்பட்ட ஒரு மிதவை 'தெப்பம்' ஆகும்.*

*தெப்பத்தைச் சிறியதாகக் கட்டி அதன் மீது நான்கு கால்களை நாட்டி நாற்புறமும் கம்புகள் வைத்துக் கட்டி அதன் மேற்கூரையாகத் தென்னங் கீற்று அல்லது புற்கள் முதலியவற்றை வேய்ந்து வெயில், மழை தாக்கா-வண்ணம் குடில் கட்டி நீரில் சென்று மீன்பிடித்து வந்துள்ளனர். சிறிய குடிசை போன்று வைத்துக் கொள்ளவும் ஆறு, குளம் போன்றவற்றைக் கடந்து செல்லவும் இவ்வகைக் கட்டுமரங்கள் இக்காலத்தில் பயன்படுத்தப் படுகின்றன.*

**ஆ. சிறிய மரக்கலம்**

*மிதவை வகைக் கலங்களைப் பயன்படுத்தி வந்த மக்கள் மிதவையைத் தவிர மற்ற கலங்களையும் பயன்படுத்தத் தொடங்கினர். அது சிறிய வகை மரக்கலமாகும். மீன்பிடிக்கவும் உல்லாசப் பயணத்திற்கும் உப்புகளை ஏற்றிச் செல்வதற்கும் தங்கள் கலங்களையே பயன்படுத்தி வந்தனர். அவை பஃறி, அம்பி, திமில், ஓடம், நீரணிமாடம், தோணி போன்றவையாகும். இவை சிறிய மரக்கலங்களாகும்.*

**பஃறி**

*உள்நாட்டு வணிகத்திற்குப் பயன்படுத்தப்பட்ட கலத்துக்குச் சங்க இலக்கியங்களில் பஃறி என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது.[6] பஃறி என்னும் கலத்தில் வெள்ளுப்பை ஏற்றிச் சென்று விற்று அதற்குப் பண்டமாற்றாக நெல்லைப் பெற்று வந்தனர். பஃறி என்று குறிக்கப்பட்ட கலங்கள் குதிரைச் சாலையில் நிறுத்தப்பட்டிருக்கும் குதிரைகளைப் போன்று கழி சூழ்ந்த பக்கத்தில் தறிகளில் கட்டப்பட்டிருக்கும் என்பதனைப் பெறமுடிகிறது.*

**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லோடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணை நிலைப் புரவியின் அணைமுதல் பிணிக்கும்**
**கழிசூழ் படப்பைக் கலியாணர் (பட்டினப். 29-32)**

*மேற்கூறிய சான்றுகள் வாயிலாகப் பண்டைத் தமிழர்கள் உள்நாட்டு நீர்நிலைகளில் இக்கலனைச் செலுத்தி வந்தமையை அறியமுடிகிறது.*

**அம்பி**

*அம்பி என்பதற்கு நீர், கடல் என்னும் பொருள்கள் உண்டு. அம்பி என்னும் சொல் சங்க இலக்கியத்தில் பெருமளவிலும் பிற்கால இலக்கியங்களில் அரிதாகவும் காணப்படுகிறது. அம்பி என்னும் கலம் பண்டைக் காலத்தில் பல்வேறு முகத்தோற்றங்களைக் கொண்டதாக விளங்கியமையை இலக்கியங்கள் கூறுகின்றன. சிலப்பதிகாரம் அம்பி என்னும் கலத்தின் முன் பகுதியாகிய அணியத்தின் தோற்றம் குதிரை*

முகமாகவும் (பரிமுகம்), யானை முகமாகவும் (கரிமுகம்), சிங்க முகமாகவும் (அரி முகம்) காணப்பட்டதை எடுத்துக்காட்டுகிறது.

**பரிமுக அம்பியுங் கரிமுக அம்பியும்**
**அரிமுக அம்பியும் மருந்துறை யியக்கும்**
**பெருந்துறை மருங்கிற் பெயரா தாங்கண் (சிலம்பு. 13:176-178)**

மீன்பிடி தொழிலுக்கு அம்பி என்னும் கலம் பயன்படுத்தியதை நற்றிணை,

**வடிக்கதிர் திரித்த வல்ஞாண் பெருவலை**
**இடிக்குரற் புணரிப் பௌவத்து இடுமார்**
**நிறையப் பெய்த அம்பி காழோர்**
**சிறை அருங் களிற்றின் பரதவர் ஒய்யும் (நற். 74:1-4)**

என்கிறது மற்றொரு பாடல் அம்பி என்னும் கலம் கடலில் செலுத்தப்பட்டதை,

**பார்த்துறைப் புணரி அலைத்தலின் புடைகொண்டு**
**முத்து வினை போகிய முரிவாய் அம்பி (நற். 315:2-3)**

என்கிறது.

இலக்கியங்கள் வாயிலாக அம்பி என்னும் கலனை ஆராயும்போது அதன் உருவம் யானைக்கும் எருமைக்கும் ஒப்பிடப்பட்டுள்ளதைப் பெறப்படுகிறது.

**நீர் மருங்கு அறியாது தேர் மருங்கு ஓடி**
**சுறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்**
**உள்ளுநர்ப் பனிக்கும் (அகம். 29:18-20)**

என்ற பாடலின் வாயிலாக உணவு கிடைக்காமல் உடலின் எடை குறைந்து நீர் வேட்கையினால் அலைந்து வழிகளிலே வீழ்ந்து கிடக்கும் யானைகளைப் போன்று தான் செல்லும் ஆற்றில் நீர் வற்றிப் போனதால் அந்த ஆற்று மணலில் கிடந்து உலருகின்ற தோணியைக் குறித்த செய்தியை அறிய முடிகின்றது. அம்பி என்னும் கலன் யானையைப் போன்று காணப்பட்டமையையும் அது ஆற்றுநீரில் பயன்பட்டமையையும் அறியமுடிகிறது.

**பரிமுக அம்பி**

*பரிமுக அம்பி, குதிரை முகம் போன்று காணப்படும். தமிழர்கள் தாம் கண்ட எல்லாப் பொருளிலும் நுண் அறிவைச் செலுத்திக் கலை அழகு பொலியச் செய்தனர். மாலை வேளையில் மன்னர்களோ மக்களோ காதலியரோடு இன்பகரமாகப் பொழுதுபோக்கச் செல்லும் ஓடம் அழகுடையதாய் இருக்க வேண்டும் என்று அதன் நடுவே சிறு மண்டபம் போன்ற ஓர் இருக்கை அமைத்தனர். அதன் நாற்புறமும் அழகிய பூ வேலைப்பாடுகள் அமைந்த திரைச்சீலையைத் தொங்கவிட்டனர். நடுவே ஆணும் பெண்ணும் ஒருங்கமர்ந்து உரையாடுவதற்கென்று நீண்ட ஆசனம் அமைத்தனர். அதன் மீது மெத்தைகளும் பட்டு விரிப்புகளும் விரித்து மன்னர்களின் கொலுமண்டபம் போல் அழகொளிரச் செய்தனர்.*

*அம்பியின் நடுவே மண்டபம் போல் உள்ள அறையில் மன்னர் இருந்ததால் அதன் அடியில் உணவு சமைப்பதற்கென்றும், துணி துவைப்பதற்கென்றும் பணியாளருக்கென்றும் மன்னர் துயில்வதற்கென்றும் தனித்தனி அறைகளை அமைத்ததோடு நீரணிமாடத்தின் முகப்பில் குதிரைத் தலை போன்ற உருவமும் அமைத்து அதனைப் பரிமுக அம்பி என்றனர்.*

*பரிமுக அம்பி என்று குதிரை முக ஓடம் முற்காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகரமாகிய மதுரையை அடுத்துள்ள வையை ஆற்றில் ஓடியது. மேலும் அது காவிரியாற்றிலும் ஓடியது என்பதனை,*

**பரிமுக அம்பியுங் கரிமுக அம்பியும்**
**அரிமுக அம்பியும் மருந்துறை யியக்கும்** **(சிலம்பு. 13:176-177)**

*என்ற சிலப்பதிகார அடிகளாலும்,*

**மறை ஏற்றின் மேல் இருந்து ஆடி துறை அம்பி**
**ஊர்வான் போல் தோன்றுமவன்** **(கலி. 103:38-39)**

*என்ற கலித்தொகைப் பாடலாலும் அறியமுடிகிறது.*

**யானையும் கரியுளை அரிமா னேறும்**
**மானிற் பெடையும் வாள்வரி யுழுவையும்**
**புள்ளு மாக்களும் முள்ளுறுத் தியன்ற**

**நொய்ம்மா நெடும்புணை கைமுதற் றழீஇக்**
**கூறா டாயமொடு குழூஉக் கொன் டீண்டி**
**அறத்துறை அம்பியின் மான மறப்பு இன்று**
**இருங்கோள் ஈராப் பூட்கை**
**கரும்ப லூரன் காதல் மகனே** (**புறம். 381**)

*என்று புறநானூற்றுப் பாடலின் வழியும் இதனை அறியலாம்.*

### கரிமுக அம்பி

*முன்புறம் யானை முகம் அமைந்த தோணியைக் கரிமுக அம்பி என்று அழைத்தனர். கரிமுக அம்பி பெரிதாய் இரண்டு அல்லது மூன்று பாய்மரங்கள் உள்ளதாய் இருக்கும். இது ஏராளமான பண்டங்களையும் மனிதர்களையும் ஏற்றிச் செல்வதற்கு ஏற்றது. இந்தத் தோணி பேராறுகளில் மட்டுமன்றிப் பெருங்கடலிலும் செல்லக்கூடியது. இது மன்னர்களும் வணிகர்களும் தம் குடும்பங்களுடனும் பணியாளர்களுடனும் பயணம் செய்வதற்குரிய வசதி உடையதாகவும், அழகு உடையதாகவும் இருந்தது. காவிரி ஆற்றில் குதிரைமுக அம்பி ஓடியதைச் சிலப்பதிகார ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இது*

**கரிமுக அம்பியும்** (**சிலம்பு. 13:176**)

*என இடம்பெற்றுள்ளது.*

### அரிமுக அம்பி

*முகப்பில் சிங்க முகத்தை அமைத்து அதை அரிமுக அம்பி என்றனர். இந்த அம்பி அதன் பெயருக்கேற்ப மிக உறுதி வாய்ந்ததாய்-ஆழ்கடலிலும் செல்லத்தக்கதாய் இருந்தது. இது காவிரி ஆற்றிலும் வைகை ஆற்றிலும் ஓடியது என்பதை,*

**அரிமுக அம்பியும்** (**சிலம்பு. 13:177**)

*எனச்சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.*

### மயில்முக அம்பி

பரிமுக அம்பி, அரிமுக அம்பி, கரிமுக அம்பி ஆகிய அனைத்தையும் விட அழகுடையதாய் மயில்முக அம்பி இருந்தது. இது பேராறுகளில் உல்லாசமாகப் பொழுதுபோக்காகவும், ஆறுகளைக் கடந்து செல்லவும் துறைமுகப் பட்டினங்களின் அருகே உள்ள தீவுகளுக்கும் திட்டுகளுக்கும் போய்வரவும் ஏற்றதாகும்.

தோணியின் முன்புறம் மயில் முகத்தை அமைத்து அதை மயில்முக அம்பி என்று வழங்கினர். ஏனைய அம்பிகளைப் போல் அத்துணைப் பெரிதாக இல்லாவிட்டாலும் அழகாகவும், வசதியாகவும் இருக்கும். இந்த அம்பியின் நடுவே மண்டபம் போல் எட்டுத் தூண்கள் நிறுத்தப்பட்டு, அழகிய பூ வேலைப்பாடுகள் செய்யப்பட்டு எழில் பெற்று விளங்கியது. கீழே உயர்வான ஆசனங்களும் மெத்தைகளும் விரிப்புகளும் உண்டு. நாற்புறமும் அழகிய பூந்துகிலாற் செய்யப்பட்ட திரைச்சீலைகள் தொங்கவிடப் பட்டிருக்கும். மேற்கூரையில் கொடிகளும், இலைகளும், பூக்களும் ஒளிரும் பட்டுத் துணிகள் கட்டப்பட்டிருக்கும்.

மயில்முக அம்பியை வட இந்தியர்கள் ‘மயிர் பங்கி’ என்று கூறுகின்றனர். வட இந்தியாவில் உள்ள கண்ணகி நதியில் கிளிமுக அம்பியும் ஓடுகிறது. இது மயில்முக அம்பியைவிட பெரியதாகவும் வசதியாகவும் இருக்கிறது.

**அந்தோ! எந்தை அடையாப் பேர் இல்**
**வண்டுபடு நறவின் தண்டா மண்டையொடு**
**வரையாப் பெருஞ் சோற்று முரி வாய் முற்றம்**
**வெற்று யாற்று அம்பியின் ஏற்று** **(புறம். 261:1-4)**

மதுவும் சோறும் வருபவருக்குக் குறையாமல் வழங்கும் வள்ளல் தன்மை, நீரற்ற ஆற்றில் கிடக்கும் அம்பிக்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளதனை அறியலாம்.

**மீன் றொடுத்து நெல் குவைஇ**
**மிசை அம்பியின் மனை மறுக்குந்து** **(புறம். 343:1-2)**

*மீன் விற்று நெல்லைக் குவித்து வைத்த வீடு அம்மிபோல் காட்சி அளித்ததனை இப்பாடலின்வழி அறியலாம்.*

*பெரியவராயினும் சிறியவராயினும் அவர்களிடம் கூலி பெறாமல் அறத்திற்காக அவரை மறுகரை கொண்டு சேர்க்கும் அம்பியைப் போன்றவன் கரும்பனூர் கிழான் என்பதனை,*

**உறுவரும் சிறுவரும் ஊழ்மாறு உய்க்கும்**

**அறத்துறை அம்பியின் மான மறப்பு இன்று (புறம். 381:23-24)**

*என்னும் பாடல்வழி அறியமுடிகிறது.*

*நீர்வற்றிய ஆற்றின்கண் வெயிலில் கிடக்கும் அம்பிபோல வெப்பமிக்க பாலை வழியில் செல்லும் யானை நீரின்றி வாடி அசைவற்றுக் கிடந்ததனை,*

**வெம்மை தண்டா எரிஉகு பறந்தலை**

**கொம்மை வாடிய இயவுள் யானை**

**நீர் மருங்கு அறியாது தேர் மருங்கு ஓடி (அகம். 29:15-17)**

*என்ற பாடல்வழி அறியலாம்.*

*கட்டப்பட்ட எருமை நீரில் மிதக்கும் அம்பிபோலக் காட்சியளிப்பதனையும் அறியமுடிகிறது.*

**தண் புனல் ஆடும் தடங் கோட்டு எருமை**

**திண்பிணி அம்பியின் தோன்றும் ஊரே (ஐங். 98)**

*ஆண்டுகள் பல கழிந்தாலும் கடல் அலைகளால் தாக்கப்பட்டமையால் தொழில் செய்யமுடியாத முரிந்த அம்பியைத் துறையருகே உள்ள புன்னை மரத்தில் வேரடியில் கட்டி வைப்பர்.*

**ஈண்டு பெருந் தெய்வத்து-யாண்டு பல கழிந்தென**

**பார்த் துறைப் புணரி அலைத்தலின் புடை கொண்டு**

**முத்து வினை போகிய முரி வாய் அம்பி (நற். 315:1-3)**

*கடற்கரைச் சோலையில் மணல் முன்றிலில் உள்ள கரிய புன்னையின் அடி மரத்தில் அம்பி கட்டப்பட்டிருப்பதனை,*

**கானல் நண்ணிய வார் மணல் முன்றில்**
**எல்லி அன்ன இருள் நிறப் புன்னை**
**நல் அரை முழுமுதல் அவ் வயின் தொடுத்த**
**தூங்கல் அம்பித் தூவல் அம் சேர்ப்பின் (நற். 354:5-7)**

*என்னும் பாடல்வழியும் அறியலாம்.*

*ஏறுதழுவும்போது காளையின் மேலிருந்து அடங்கிய பின்னர் அதனைத் தழுவிய ஆயர்மகன் நீர்த்துறையில் இருக்கும் அம்பியைப் பொருத்தி அதனைத் தள்ளுகின்றதனைப் போன்று காணப்பட்டமையை,*

**மறை ஏற்றின் மேல் இருந்து ஆடி துறை அம்பி**
**ஊர்வான் போல் தோன்றுமவன் (கலி. 103:38-39)**

*என உவமைப்படுத்திக் கூறப்பட்டதனை அறியமுடிகிறது.*

*கடலிடத்தே அசைந்து தோன்றும் அம்பி போலப் பாலை வழியில் செயலற்று யானை அசைந்து கொண்டிருப்பதை*

**பனைவெளிறு அருந்து பைங்கண் யானை**
**வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி**
**நாள்வேட்டு எழுந்த நயன்இல் பரதவர்**
**வைகுகடல் அம்பியின் தோன்றும் (அகம். 187:18-21)**

*என்பதால் அறிலாம்.*

*கடற்கரையில் உள்ள சிறுவெண்காக்கை துறையின்கண் இருக்கும் அம்பியின் உள் கட்டைக்குள் முட்டையிடும்.*

**பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை**
**துறைபடி அம்பி அகமணை ஈனும் (ஐங். 168:1-2)**

*வலிய கயிற்றினால் பின்னிய பெரிய வலையை ஏற்றிய அம்பியைப் பரதவர் பிணித்துச் செலுத்தும் காட்சி, அடக்குதற்குரிய களிறுபோலத் தோன்றுவதனைச் சங்க நூலில் உணரமுடிகிறது.*

**வடிக் கதிர் திரித்த வல் ஞாண் பெரு வலை**

**இடிக் குரற் புணரிப் பௌவத்து இடுமார்**

**நிறையப் பெய்த அம்பி காழோர்**

**சிறை அருங் களிற்றின் பரதவர் ஒய்யும்** **(நற். 74:3-4)**

*ஏறு தழுவுவோர் காளையை அடக்குகின்றபோது அவற்றின் கொம்புகளிலிருந்து குருதி ஒழுகியது. காளையைப் பிடித்த பிடி நழுவியது. மீண்டும் காளை மீது பாய்ந்த செயல், பரதவர் கடலுள் அம்பியின்மீது ஏறினாற்போல் அமைகிறது.*

**ஏறு, தொட்டதம் புண்வார் குருதியால் கைபிசைந்து மெய்திமிரித்**

**தங்கார்-பொதுவர்-கடலுள் பரதவர்**

**அம்பி ஊர்ந்தாங்கு ஊர்ந்தார்** **(கலி. 106)**

**அம்பி கரவா வழக்கிற்றே ஆங்கு அதை**

**கார் ஒவ்வா வேனில் கலங்கித் தெளிவரல்** **(பரி. 11:71-71)**

*வையை நீர், தேவர் வாழுகின்ற வானத்திலே ஊர்ந்து செல்லும் அம்பியாகிய விமானத்தைக் கரவாமல் காட்டவல்ல தன்மையை உடையது என்பதனை இப்பாடலின்வழி அறியலாம்.*

**திமில்**

*திமில் என்னும் கலமும் ஒரு சிறிய மரக்கல வகையைச் சார்ந்ததாகும். தமிழ்ப் பெருஞ்சொல் அகராதி திமில் என்னும் சொல்லுக்குக் கட்டுமரம், கலம், கப்பல் போன்ற பொருள்களைத் தருகிறது. இலக்கியச் சான்றுகளில் திமில் என்னும் கலம் கட்டுமரத்தையே குறிக்கின்றது. இது மீன்பிடிப்பதற்கே பெரிதும் பயன்படுத்தப்பட்டது.*

**வெந்திறல் இளையவர் வேட்டு எழுந்தாங்கு**

**திமில் மேற்கொண்டு திரைச்சுரம் நீந்தி,**

**வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி,**

**நிணம்பெய் தோணியர் இருமணல் இழிதரும்** **(நற். 111:6-9)**

*கலித்தொகையில்,*

**இவர்திமில் எறிதிரை ஈண்டுவந்து அலைத்தக்கால்**

**உவறுநீர் உயர்எக்கர், அலவன் ஆடு அளைவரி**

**தவல்இல் தண்கழகத்துத் தவிராது வட்டிப்ப** **(136:2-3)**

*என்றும், அகநானூற்றில்,*

**இனிப்புலம் பின்றே கானலும்; நளிகடல்**

**திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்** **(240:4-5)**

*என்றும் திமில் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. திமில் என்னும் கலம் கடலில் மீன்பிடிப்பதற்காக மட்டுமன்றிச் சங்கு எடுப்பதற்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளதை அகநானூறு,*

**இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி,**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்**

**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப, கல்லென,**

**கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்**

**குவவுமணல் நெடுங்கோட்டு ஆங்கண்**

**உவக்காண் தோன்றும் எம்சிறுநல் ஊரே** **(அகம். 350:9-14)**

*என்கிறது. 'திமில்' என்னும் கலனில் விளக்குப் பயன்படுத்தப்பட்டதைப் புறநானூறு,*

**முந்நீர் நாப்பண் திமில்சுடர் போலச்**

**செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்**

**உச்சி நின்ற உவவு மதிகண்டு** **(புறம். 60:1-3)**

*என்கிறது.*

*ஆழ்கடலில் 'திமில்' என்னும் கலனில் மீன்பிடிக்கச் செல்லும் பரதவர் கரைக்குத் திரும்பும்போது தங்கள் கரையை எளிதில் அடையாளம் கண்டு கொள்வதற்குக் கலங்கரைவிளக்கைப் பயன்படுத்தியுள்ளனர்.*

**நெடுங்கால் மாடத்து ஒள்எரி நோக்கி**

**கொடுந்திமில் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்**

**பாடல் ஓர்த்தும் நாடகம் நயந்தும் (பட்டின. 111-113)**

*சீவகசிந்தாமணியில்,*

**கொழுநிதிக் குப்பை எல்லாம் உணர்ந்துதண்**

**மதலை ஏற்றி ஒருப்படுத்து ஊர்க்கு மீள்வான் (சீவக. 505)**

*என்பதனை உணரலாம்.*

*புகழ்மிக்க வேந்தர்களின் மீது கரையை மோதுகின்ற அலைகள் கடலில் செல்லும் தோணியைப் போலப் படையைப் பிளந்துகொண்டு செல்லும்.*

**உரைசால் சிறப்பின் வேந்தர் முன்னர்**

**கரைபொரு முந்நீர்த் திமிலின் போழ்ந்து (புறம். 303:6-7)**

*பரதவர்கள் திமில்களில் மீன் வேட்டையாட காலையில் சென்று மாலையில் திரும்புவர்.*

**இன்னும் வாரார் வருஉம்**

**பல்மீன் வேட்டத்து என்னையர் திமிலே (குறு. 123:4-5)**

*மீன்வேட்டைக்குச் சென்றவர் மீன்களை படகில் நிரப்பிக் கரையை அடைவர்.*

**நிரை திமில்வேட்டுவர் கரைசேர் கம்பலை (மதுரை. 116)**

*கடல் நீரில் வளைந்து செல்லும் சுறாமீனைப் பிடிக்க வளைந்த படகை உடைய படகினைப் பயன்படுத்திப் பரதவர் மீன் பிடிப்பதனை நற்றிணைப் பாடலில் அறியலாம்.*

**கடுஞ் சுறா எறிந்த கொடுந் திமிற் பரதவர் (நற். 199:6)**

*கடலின் நடுவில் உள்ள படகில் வைத்த விளக்கைப்போலச் செவ்வாயின் ஒளி வானத்தில் முழுமதிபோல நின்று தோன்றுவதனை உவமைப்படுத்தியுள்ளார்.*

**திமில் மேற்கொண்டு திரைச் சுரம் நீந்தி (நற். 111:6)**

*பரதவர்கள் மீன்பிடிக்கும் படகுகளின் மேலேறிக் கடலில் புகுந்து சென்றதனை நற்றிணை பாடலின்வழி அறியமுடிகின்றது.*

**நெடுங் கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர் (நற். 175:1)**

*பெரிய கடலிலே சென்று மீன்களைப் பிடித்து வளைத்துக் கொண்டு பரதவர் வந்தனர் என்பதனை நற்றிணையின் வாயிலாக உணரமுடிகிறது.*

**திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப (நற். 331:8)**

*கடல் பரப்பிலே மீன் வேட்டைக்குச் சென்றவர்கள் பக்கத்தில் இருந்த படகுகளை எண்ணியிக்கையிட்டதனை அறியமுடிகின்றது.*

**திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ (நற். 388:4)**

*விரைந்து செல்லும் படகினிலே விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு இரவு நேரத்தில் வேட்டைக்குச் செல்வதனையும், வேட்டையில் கிடைத்த மீன்களை விடியற்காலையில் கொண்டு வருவதனையும் நற்றிணைப் பாடலின்வழி அறியமுடிகிறது.*

**பழத் திமில் கொன்ற புது வலைப் பரதவர்**
**மோட்டு மணல்அடைகரைக் கோட்டு மீன் கெண்டி**
**மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும் (அகம். 10:10-13)**

*காற்றினால் அடித்துக் கடல் அலைகள் மோதிக் கிடக்கும் பழைய படகுகளை ஒதுக்கிவிட்டுப் புதிதாகப் பலருக்கும் கொடுக்கும் பரதவர்களை அறியமுடிகிறது.*

**நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு (அகம். 60:3)**

*நீண்ட படகில் மீன்பிடிக்கும் தொழிலில் தந்தை தங்கியதை அகநானூற்றின் வாயிலாக உணரமுடிகிறது.*

*மீன்பிடிக்கும் பரதவருடைய வளைந்த படகில் விளக்குகள், வானத்தைத் தொட்டு நிற்பதுபோலக் கடலில் காட்சியளிப்பதனை உணரமுடிகிறது.*

**மீன்கொள் பரதவர் கொடுந் திமில் நளி சுடர்** (**அகம். 65:11**)

*பரதவ மக்களுக்கு வளைந்த படகு மீன்வேட்டைக்கு மிகவும் பயன்பட்டது.*

**கொடுந் திமிற் பரதவர்வேட்டம் வாய்த்தென** (**அகம். 70:1**)

*மாலைக்காலத்தில் திமில் வேட்டையாடும் தொழிலில் ஓய்ந்திருப்பதனை அறியலாம்.*

**திரைபாடு அவிய திமில்தொழில் மறப்ப** (**அகம். 260:4**)

*கடலில் திரியும் திமிலின் விளக்கேற்றி மீன்கள் நிறைந்திருக்கும் இடங்களையும், மீன்களைப் பிடிக்கும் முறைகளையும் தந்தையர் தன் மகனுக்கு விளக்குவர்.*

**திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்**
**பல்மீன் கூட்டம் எண்ணையர்க் காட்டிய**
**எந்தையும் செல்லுமார் இரவே அந்தில்** (**அகம். 240**)

*தலைவனின் தேர், மணல் பரப்பிலே சென்று சிறிதுசிறிதாக மறைவது போலப் பெரிய கடலிலே விரைந்த செலவினையுடைய வளைந்த திமில் மறைகின்ற தோற்றத்தை உணரமுடிகிறது.*

**ஆய்கொடிப் பாசடும்பு பாய ஊர்பு இழிபு**
**சிறுகுடிப் பரதவர் பெருங்கடல் மடுத்த**
**கடுஞ்செலல் கொடுந்திமில் போல** (**அகம். 330:15-17**)

*மகளிர் கரைக்கு வரும் படகுகளை எண்ணிக்கையிடுவதனை அறியலாம்.*

**வருதிமில் எண் ம் துறைவனொடு ஊரே** (**அகம். 190:3**)

*பரதவரால் வெட்டப்பட்ட பெரிய மீன் வானவில்லைப் போலப் பாய்ந்து குருதியைப் பெருக்கிக் கடலைக் கலக்கி வலிமை இழந்து வரிசையாக உள்ள திமில்களின் பக்கத்தில் வந்து சேரும்.*

**குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்**
**எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்**
**புண் உமிழ் குருதி, புலவுக்கடல் மறுப்பட**
**விசும்பு அணி வில்லின் போகி பசும்பிசிர்த்**
**திரைபயில் அழுவம் உழக்கி உரன் அழிந்து**
**நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன் (அகம். 210:1-6)**

*வேகம் பொருந்திய வளைந்த திமில்களை உடையவர்கள் பரதவர்கள் என்கிறது குறுந்தொகைப் பாடல்.*

**தாங்கு அரு நீர்ச்சுரத்து எறிந்து வாங்கு விசைக்**
**கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய (குறு. 304:3-4)**

*திண்மையான படகுகளை உடைய மீனவர்கள் விரும்பத்தக்க கள்ளை உண்டு மெல்ல ஆடும் குரவைக்கூத்தின் தாளத்தை ஒத்து அசையும் தன்மையினை உடையவர்கள் போன்று காணப்படுவர்.*

**தெண்கடல் திரை மிசைப் பாயுந்து**
**திண்திமில் வன்பரதவர் (புறம். 24:3-4)**

*திமில்கள் கடலில் செல்வது பாண்டியனின் யானைகள் போர் மேற்செல்வது போல் இருப்பதனையும் அறியமுடிகிறது.*

**நிரைதிமில் களிறாக, திரை ஒலி பறையாக (கலி. 149:1)**

*வையையின் புது வெள்ளத்திலே நீராடி மகளிர் திமிலைத் துணையாகக் கொண்டு கரையேறியதனை பரிபாடல் குறிக்கிறது.*

**புனல் பொருது மெலிந்தார் திமில் விட (பரி. 10:71)**

வையையின் புதுவெள்ளத்தில் நீராடியும் களைப்படையாத ஆடவர் விசையுடன் ஓடும் திமிலின்கண் ஏறி நீரோட்டத்தோடே செல்வர்.

**ஓடம்**

ஓடம் என்னும் கலம் தொன்மையான காலந்தொட்டுத் தமிழகத்தில் இருந்துவரும் நீரைக் கடக்க உதவும் ஊர்தியாகும். வடமொழியில் ஓடக்காரர் 'நாவாயர்' என்று கூறப்படுகிறார். ஓடம் செல்லக்கூடிய ஆறுகள் 'நாவாய்' என்று கூறப்படுகின்றன.[7]

தமிழ் இலக்கியங்களில் ஓடம் என்னும் கலத்தின் பயன்பாடு குறைவாகவே காணப்படுகிறது. நீரில் வேகமாக ஓடுவதால் 'ஓடம்' என்ற பெயர் பெற்றிருக்கிறது. சங்க இலக்கியத்தில் ஒன்றான அகநானூறு 'ஓடம்' பற்றிய செய்தியைக் கூறுகிறது. அகன்ற பெருவானமாகிய கடலினைக் கடக்கும் ஓடம்போலப் பகற்பொழுதில் விண்ணின்று ஒளிர்கின்ற கதிரவன் அகன்ற பரந்த நீரில் காணப்படும் ஓடத்தைப் போன்று காணப்பட்டான்.

**அகல் இரு விசும்பிற்கு ஓடம்போலப்**
**பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று (அகம். 101:12-13)**

பிற்கால இலக்கியமாகிய பெரியபுராணத்திலும் ஓடம் பற்றிய செய்திகள் இடம்பெற்றிருக்கின்றன.

பழங்காலத்தில் பிரம்புகளைப் பின்னி ஓடம் அமைத்தனர். 'பிளினி' காலத்தில் இந்த ஓடங்களே இந்தியாவில் இருந்தனவென்று தெரிகிறது. இதன் பின்னரே மரங்களைத் தோண்டித் தோணியை உருவாக்கினர். பின்பு மரப்பலகைகளை இணைத்துச் செய்யப்படும் 'பிளாவு' உருவாயிற்று. இன்றும் கேரள மாநிலத்தில் காணப்படும் பிளாவு பலாவின் பலகைகளைக் கொண்டே கட்டப்பட்டு வருகிறது. பண்டைக்கால ஆசிய மக்களுடைய தெய்வத்தின் பெயர் ஓடக்கோன் என்று கூறப்படுகிறது. அவர்கள் தமிழகத்தினின்று ஓடங்களில் ஏறிச்சென்று குடியேறி இருக்கலாம் என்றும் ஓடக்காரர்களின் தலைவனை ஓடக்கோன் என்று கூறியிருக்கலாம் என்றும், அவன் இறந்தபின் தெய்வமாகப் போற்றப்பட்டிருக்கலாம் என்றும்

கருதப்படுகிறது. இந்த ஓடங்களின் வளர்ச்சியிலே பள்ளி ஓடம் அரும்பியது.[8]

**பரிசில்**

இது ஆறு, வாய்க்கால், குளம் முதலியவற்றைக் கடக்கவும், மீன்பிடிக்கவும் பயன்படும் சிறிய ஓடமாகும். பண்டுதொட்டுத் தமிழ் மக்கள் ஆழமற்ற நீர்நிலைகளில் மீன்பிடிக்கவும் ஒரு கரையினின்று மற்றோர் கரைக்குச் செல்லவும் இதனைப் பயன்படுத்தி வந்தனர். இன்றும் தாமிரபரணி ஆற்றிலும் காவிரி ஆற்றிலும் பரிசில்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இது மூங்கிலினால் பின்னப்பட்டு அடியில் நீர்புகா வண்ணம் தோலால் மூடப்பட்ட வட்டமான சிறு ஓடமாகும்.

காட்டுப் பிரம்புகளைக் கொண்டு பின்னிக் கட்டித் தோல் போர்த்துத் தைக்கப்பட்ட வட்ட வடிவமான பரிசில் எனும் சிற்றோடம் பிளினிக் காலம் வரையிலும் (முதலாம் நூற்றாண்டு) தமிழகத்தில் பயன்படுத்தப்பட்டு வந்தது என்பதைப் பல மேனாட்டாசிரியர் குறிப்பிட்டுள்ளனர். தமிழ்நாட்டில் எழுந்த எண்ணற்ற ஓடங்களும் நீரைக் கடக்கும் பிற ஊர்திகளும் வழக்கிழந்துவிட்டாலும் பரிசில் மட்டும் அழியாது இருந்து வருவது குறிப்பிடத்தக்கது.

**வள்ளம்**

மாம்பலகைகளைக் கொம்புகளின் மீது அடுக்கடுக்காக வைத்து மர ஆணிகளால் இணைத்து வள்ளம் கட்டுகிறார்கள். பலகைகள் சேரும் இடத்தில் சற்று உயரமாகச் சுருளாக வைத்து ஒரு கொம்பு இருக்கும். பின்பக்கத்தில் ‘ப’ வடிவமாக மூன்று கம்புகளால் செய்யப்பட்ட கொம்பு இருக்கும்.

வள்ளம் முன்பக்கம் சிறுத்து வளைந்தும், பின்பக்கம் சிறிது சாய்வாக உயர்ந்தும் இருக்கும். நடுவில் வண்டிக்கூண்டு போல் பிரம்புகளை வளைத்துக் கட்டி மேலே தென்னங் கீற்றுகளாலோ மூங்கிற் பாயாலோ வேயப்பட்டிருக்கும். இந்தக் கூண்டுகள் பயணம் செய்வோர் வெயில், மழை,

பனி, காற்று முதலானவற்றின் தாக்கத்திற்கு ஆளாகாமல் வசதியாகச் செல்ல உதவும். கேரள உப்பங்கழிகளில் நீண்ட தொலைவு குறைந்த செலவில் பயணம் செய்ய உதவும்.

வள்ளத்தைப் பின்பக்கம் நின்று கொண்டுதான் இயக்க வேண்டும். மச்சுவா, குல்லா ஆகிய கலங்களும் நீண்ட தொலைவுக் கடற்பயணத்திற்குப் பயன்படாததால் அதைவிட வசதியும் பாதுகாப்பும் உயரமும் உடைய கலங்களைச் செய்ய 'ஏரா' என்னும் அடிமரத்தின் மேல் இரு பக்கங்களிலும் பலகைகளை அடித்து இடைவெளிகளில் நீர்புகா வண்ணம் பஞ்சு மற்றும் தார் பூசிப் பெரிய கலங்களை அமைத்தனர். இவ்வகைக் கலங்களைச் செய்ய வங்கு என்னும் சட்டங்கள் மூலக்கருவாகப் பயன்படுத்தப்படுகின்றன.[9]

**நீரணிமாடம்**

நீரணிமாடம் என்பது ஒரு சிறிய படகு ஆகும். இதுவும் அம்பி போன்று உல்லாசப் படகுப் பயணத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனைப் 'பிள்ள ஓடம்' என்றும் கூறுவர். நீரணிமாடம் நடுவே அகன்றும் முன்னும் பின்னும் சுருங்கியும் இருக்கும். இதன் பின்பக்கம் முன்பக்கத்தை விடச் சற்று உயர்ந்து காணப்படும். இதன் நடுவே அமர்வதற்கு ஏற்ற சிறு மண்டபமும் மரத்தால் கட்டப்பட்ட ஒரு மேடையும் அழகாக அமைக்கப்பட்டிருக்கும்.

**நீரணி காண்போர் நிறைமாடம் ஊர்குவோர்**
**பேரணி நிற்போர் பெரும்பூசல் தாக்குவோர்** **(பரி. 10:29-30)**

புனல் விளையாட்டிற்கும் இக்கலம் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிற்கால இலக்கியங்களில் இக்கலம் பற்றிய செய்திகள் பல உள்ளன. பாண்டிய நாட்டில் உள்ள வையை ஆற்றில் மட்டுமன்றிச் சோழ நாட்டில் உள்ள காவிரி ஆற்றிலும் இக்கலம் மிகுதியும் பயன்படுத்தப்பட்டுள்ளது. வைகையில் வெள்ளம் பெருகியதால் ஊர்மக்கள் ஆரவாரம் செய்த அந்த நாளில் போர்புரிவதற்குப் பெண் யானைகள் வரிசையாகச் சென்றதனை அறியலாம்.

**நீர் அணி நீத்தம் இவர்க்கு அணிகொல்? (பரி. 22:33)**

வையையாற்றில் புதுவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதைக் கண்ட ஆடவரும் பெண்டிரும் நீராடுவதற்குப் பொருள்களோடு வையைக்கரை நோக்கி விரைந்ததனை அறியமுடிகிறது.

**தோணி**

தோணி தமிழ்நாட்டில் நீர்ப்போக்குவரத்துக்குக் கப்பலுக்கு அடுத்த படியாக பயன்படுத்தப்பட்டுள்ளது. முற்காலத்தில் நீரைக் கடக்கப் பயன்படுத்தப்பட்ட தோணிகள் இன்று பெருமளவில் மீன்பிடிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. தோணி தோற்றத்தில் கப்பலைப் போலவே இருக்கும். இத்தோணிகளில் ஒரு பாய்மரம் உடைய தோணிகளே இன்றும் தமிழ்நாட்டுக் கடற்கரைப் பகுதிகளில் உள்ள கீழக்கரை, அதிராம்பட்டினம், தொண்டி, நாகப்பட்டினம் போன்ற இடங்களில் உள்ளன. வடநாட்டில் உள்ள தோணிகளுக்கும் தமிழ்நாட்டில் உள்ள தோணிகளுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. இவ்வகைத் தோணிகள் தமிழ் நாட்டில் முற்காலத்திலேயே இருந்துள்ளன. இவற்றில் செய்வதில் பரதவர்கள் கை தேர்ந்தவர்களாக உள்ளனர். கட்டைகளை 'V' வடிவில் இணைத்து வரிசையாக நிறுத்தி அதன் மீது அடியிலிருந்து நுனி வரை வரிசையாகக் கட்டைகளைப் பொருத்து ஆணிகள் வைத்து அடித்து இடைவெளிகளில் அதற்கேற்ப மெழுகுகளைப் பூசிவிடுவர்.

முகப்பிலும் பின்பக்கத்திலும் ஒவ்வொரு மரக்கட்டையை வெளியே தெரியும்படியாக வைத்துப் பக்கவாட்டில் பொருத்துகின்றனர். தோணி 60-70 அடி நீளம் உள்ளதாகக் காணப்படுகிறது. இது முன் பக்கமும் பின் பக்கமும் உயரத்தில் சமமாகக் காணப்படும். தோணியின் முன்பகுதியும், பின்பகுதியும் சிறிது மூடப்பட்டிருக்கும். இதற்குப் 'பால்கா' என்று பெயர். இதன் நடுப்பகுதி திறந்து இருக்கும். இதன் வழியாகத் தோணியில் சரக்குகள் ஏற்றி இறக்கப்படுகின்றன. தோணியின் அடிப்பகுதியில் சரக்குகளை வைத்தவுடன் நடுப்பகுதியையும், முன்பகுதியையும் பால்காப் பலகைகளால்

*மூடிவிடுகின்றனர். இவ்வகைத் தோணிகள் நெல்லை மாவட்டத்தில் உள்ள குலசேகரன்பட்டினத்தில் 40 ஆண்டுகளுக்கு முன் இருந்துள்ளன. தூத்துக்குடியில் கப்பலுக்குச் சரக்குகளை ஏற்றிச் செல்லவும் இறக்கி வரவும் இவ்வகைத் தோணிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.*[10]

*கடல் ஒலி அடங்கியபோதும், தோணி கடலிற் செல்லாது ஒழிந்த நேரத்தும், மிகுந்த நீரினையுடைய பெரிய உப்பங்கழியில் சுறா முதலிய கொடிய மீன்கள் செருகிக் காணப்படும்.*

**கடல்பாடு அவிந்து, தோணி நீங்கி**
**நெடுநீர் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும் (அகம். 50)**

*சாந்தைத் தன்னிடத்தே கொண்ட தோணியும், குளிர்ந்த மண்மாலை கொண்ட தோணியும், பூவேலை செய்த ஆடை நிறைந்த தோணியும், அணிகலம் கொண்ட தோணியும், கடலில் கலங்கள் போல தம்மில் தாக்கித் திரியும் என்பதைச் சீவகசிந்தாமணி குறிக்கிறது.*

**சாந்தக நிறைந்த தோணி தண்மலர் மாலைத் தோணி**
**பூந்து கிலார்ந்த தோணி புனைகலம் பெய்த தோணி**
**கூந்தன் மாமகளிர் மைந்தர் கொண்டெறிய வோடித்**
**தாந்திரை கலங்கள் போலத் தாக்குபு திரியு மன்றே (சீவக. 967)**

*கலங்கள் கொணர்ந்த பொன்னையும் பொருளையும் தோணிகள் கரைக்கு ஏற்றிக் கொணர்ந்து சேர்க்கவும், அம்பியும், தோணியும் ஆள்களைக் கரைகடத்துவதற்கும் பயன்படுத்தப்பட்டன என்பதைப் பின்வரும் புறநானூற்று அடிகளால் அறியமுடிகிறது.*

**கலந் தந்த பொற் பரிசும்**
**கழித் தோணியான் கரை சேர்க்குந்து (புறம். 343:5-6)**

*மற்றொரு புறநானூற்றுப் பாடலில் பகைவருடைய படையினை ஊடுருவிச் செல்லும் குதிரைக்குக் கடல்நீரைக் கிழித்துச் செல்லும் தோணி உவமையாகக் கூறப்பட்டுள்ளது.*

**உழுத்ததர் உண்ட ஓய் நடைப் புரவி**
**கடல்மண்டு தோணியின் படை முகம் போழ**
**நெய்ம்மிதி அருந்திய (புறம். 299:2-4)**

**பெருந்திரை முழக்கமொடு இயக்கு அவிந்திருந்த**
**கொண்டல் இரவின் இருங்கடல் மடுத்த**
**கொழு மீன் கொள்பவர் இருள் நீங்கு ஒண் சுடர் (அகம். 100:5-7)**

**கைம்மாண் தோணி கடுப்ப, பையென (அகம். 344:5)**

*எனத் தோணியின் பயன்பாட்டை அகநானூற்றில் அறியமுடிகிறது.*

**பிற கலங்கள்**

*சிறிய மரக்கல வகையில் படகு, சோங்கு போன்ற கலங்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதை இடைக்கால இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. திருவிளையாடற் புராணம் தோணியைப் போன்ற 'படகு' என்னும் கலம் சுறாமீனைப் பிடிக்கப் பயன்படுத்தப்பட்டதையும், சோங்கு என்னும் கலம் சரக்குக் கப்பலாகப் பயன்படுத்தப்பட்டதையும் உணர்த்துகிறது என்பர்.*[11]

*சோங்கு என்ற சொல்லும் படகினைக் குறிக்கும் சொல்லாகும். இதனை,*

**தட்டும் சோங்கினை .... முட்டும் (திருவிளை. 34)**
**விசைத்தொகு சோங்கின் இடைபுகுந்து (திருவிளை. 37)**

*எனத் திருவிளையாடற்புராணம் பதிவு செய்துள்ளது.*

**பெரியமரக்கலம்**

*நாவாய், கலம், வங்கம் ஆகியவை பெரிய மரக்கல வகையைச் சார்ந்தவையாகும். இவை பெரும்பாலும் வணிகத்திற்கு மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இலக்கிய ஆசிரியர்கள் நாவாய், கலம், வங்கம் போன்றன ஆழ் கடலில் அஞ்சாமல் உலகைச் சுற்றிவரும் திறன் படைத்தவையாதலால் இதனைப் பெரிய மரக்கல வகையைச் சார்ந்தவை என்று கூறுகின்றனர். நாவாய், கலம், வங்கம் போன்றவை கீழை*

*நாட்டிலுள்ள மணிபல்லவம் என்னும் தீவில் தங்கியிருந்து நேராகச் சாவகம், கடாரம், மலையம் போன்ற நாடுகளுக்குச் சென்றுவந்தன என்பதை மணிமேகலைவழி அறியமுடிகிறது என்பர்.*[12]

**நாவாய்**

*நாவாய் என்னும் தமிழ்ச்சொல் இலத்தீனில்* Navis, Navia *என்றும், ஆங்கிலத்தில்* Navy *என்றும், கிரேக்க மொழியில்* Naus *என்றும் வழங்கப்பட்டு வருகிறது.*[13] *பெருங்கடலில் ஓடும்பெரிய கலத்துக்கு 'நாவாய்' என்று பெயர்.*[14] *நாவாய் என்பதை மரக்கலம், இரேவதி, நாள், தோணி, நெய்தல் நிலப்பறை என்று அகராதி குறிப்பிடுகிறது.*[15]

*நாவாய் என்னும் கலம் பண்டைத் தமிழர்களால் கடல் வாணிபத்திற்கு மட்டும் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.*[16] *காற்றின் உதவியால் நாவாய்கள் செலுத்தப்பட்டன என்றும் அவை வாணிபத்திற்காகப் பல்வேறு நாடுகளுக்குச் சென்று வந்தன என்றும் அறிய முடிகிறது.*

*பெருங்கடலில் ஓடும் பெரிய கலத்துக்கு நாவாய் என்று பெயர். புகார்த் துறைமுகத்தில் நிறுத்தப்பட்ட நாவாய்கள் அசைந்து செல்லும். அவற்றில் நாட்டப்பட்டுள்ள பாய்மரத்தின் கம்பங்களின் உச்சியில் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். அசையாத கட்டுத்தறியை அசைக்கும் யானையைப் போல கடல் அலைகளில் மரக்கலங்கள் அசைந்த வண்ணம் காணப்படும்.*

**தீம்புகார்த் திரைமுன்துறை**
**தூங்கு நாவாய் துவன்று இருக்கை**
**மிசைக் கூம்பின் நசைக் கொடியும்** **(பட்டின. 173-175)**

*மன்னன் அமர்ந்த யானை கடல் நடுவே செல்லும் மரக்கலம் போலவும், விண்மீன்களிடையே செல்லும் நிலவினைப் போலவும் விளங்கியது.*

**களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்**

**பல்மீன் நாப்பண் திங்கள் போலவும் (புறம். 13:5-6)**

*நீர் செறிந்த பெரிய கடலிடத்தே மரக்கலம் செலுத்தியும் அது அசையாதபோது காற்றினை ஏவல்கொண்டு அமைந்த வலிமையை உடையவனின் வழித்தோன்றலே கரிகாலன் ஆவான்.*

**நளி இரு முந்நீர் நாவாய் ஓட்டி**

**வளி தொழில் ஆண்ட உரவோன் மருக (புறம். 66:1-2)**

*சினம்மிக்க படையுடைய சேரன் மேலைக் கடலில் பொன்னைத் தரும் மரக்கலம் (கப்பல்) செலுத்துமிடத்து இடையில் வேறு சிலர் மரக்கலத்தைச் செலுத்த முடியாது.*

**சினம்மிகு தானை வானவன் குடகடல்**

**பொலம்தரு நாவாய் ஓட்டிய அவ்வழி**

**பிறகலம் செல்கலாது அனையேம் அத்தை (புறம். 126:14-16)**

*மேற்கண்ட சான்றுகள்வழி நாவாய் என்னும் கலம் பண்டைக் காலத்தில் காற்றின் துணையினால் செலுத்தப்பட்ட ஒரு பாய்மரக் கப்பலாக இருந்துள்ளமையை அறியமுடிகிறது.*

*நாவாய்கள் மேற்குத் திசையிலிருந்து வெண்மையான குதிரைகளையும், வடநாட்டின்கண் உள்ள நுகர்பொருள்களையும் கொண்டு வந்து தருகின்ற மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கும் பெருமையையுடைய கடற்கரையாகும் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.*

**வால்உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்**

**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை (பெரும். 320-321)**

*நாவாய்களின் இனிய ஓசையையுடைய முரசம் முழங்கும் பொன் மிகுதற்குக் காரணமாகிய சிறந்த பொருள்களை நாட்டில் உள்ளவர்கள் நுகருமாறு வாணிகம் நன்கு நிலைபெற அந்நாவாய்கள் கரையை அடையும். நெடிய கொடிகள் பாய்மரத்தின் மேல்ஆடும் இயல்புடையனவாய் அம்மரக்கலங்கள் விளங்கும். கரு மேகங்கள் சூழ்ந்த மலை போல அம்மரக்கலங்கள் கடற்பரப்பில் அசையும்.*

**பொன் மலிந்த விழுப்பண்டம்**
**நாடு ஆர நன்கு இழிதரும்**
**ஆடு இயற்பெரு நாவாய்**
**மழை முற்றிய மலை புரையத்**
**துறை முற்றிய துளங்கு இருக்கை (மதுரை. 81-85)**

*கொழுவிய மீன்களை அறுத்த துடியின் கண்போல் அமைந்துள்ள உருண்டைத் துண்டுகள் ஆகிய இவற்றை ஏற்றிய சீரிய மரக்கலங்களைப் பெருநீராகிய கடலில் செலுத்துவர்.*

**கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்,**
**விழுமிய நாவாய் பெருநீர் ஒச்சுநர்**
**நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார் (மதுரை. 320-322)**

*வலிமையுடைய பாய்களைக் கட்டிய கயிற்றை அறுத்துப் பாய்களைக் கிழித்து, பாய்மரத்தின் அடிப்பகுதி முறியும்படி அடித்துக் கடிய காற்று நாற்றிசையிலும் சினந்து வீசுவதால் நங்கூரங்கள் கயிற்றுடன் மோதி அசைந்து நெடிய சுழியில் அகப்பட்டு மரக்கலம் சுழன்று அசையும். அதுபோல் முன்னும் பின்னும் சங்குகள் ஒலிக்கச் செய்கின்றது.*

**கூம்புமுதல் முருங்க எற்றி, காய்ந்துஉடன்**
**கடுங்காற்று எடுப்ப, கல்பொருது உரைஇ**
**நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல,**
**இருதலைப் பணிலம் ஆர்ப்ப, சினம் சிறந்து (மதுரை. 377-380)**

*வலிய சக்கரங்களையுடைய பெரிய தேர்கள் கடலில் ஓடா. ஆழ் கடலில் அலைமோதும் நீரினைக் கிழித்துக்கொண்டு ஓடும் நாவாய்கள் நிலத்தில் ஓடா என்பதைத் திருவள்ளுவர்,*

**கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடு**
**நாவாயும் ஓடா நிலத்து (குறள். 496)**

*என்கிறார்.*

**வேறுபல் நாட்டுக் கால்தர வந்த**
**பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை (நற். 295:5-6)**

*காற்றின் உதவியால் நாவாய்கள் செலுத்தப்பட்டதையும், அவை வணிகத்தின் பொருட்டுப் பல்வேறு நாடுகளுக்குச் சென்றுவருவதையும் இவ்வரிகளால் அறியமுடிகிறது.*

*தம்மால் விரும்பப்பட்ட துறைமுகப்பட்டினத்தை அடைந்து வணிகம் செய்துகொண்டு மீண்டும் கரையைச் சேர்ந்தனர். தாம் இன்பம் அடைவதற்குக் காரணமான மரக்கலத்தின் வருகையினை விரும்பி எதிர்கொண்டு வரவேற்று மகிழும் வணிகரைப் போன்று தாம் விரும்புகின்ற வையையாற்றின் புதுநீரை எதிர்கொண்டு வரவேற்கும்நிலை சங்கநூலில் சுட்டப்படுகிறது.*

**தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்**
**ஏமுறு நாவாய் வரவு எதிர்கொள்வார் போல்**
**யாம் வேண்டும் வையைப் புனல் எதிர்கொள் கூடல்**

**(பரி. 10:38-40)**

**மரக்கலம்**

*தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்துவருவது மரக்கலமாகும். தமிழகத்தில் பலவகையான மரக்கலங்கள் இருந்துள்ளன. அவை மரக்கலம், கலம், நாவாய், வங்கம் முதலியனவாகும். இவற்றின் வடிவத்தைத் தெளிவாக அறியமுடியவில்லை. ஆனால் இலக்கியங்களில் மரக்கலம், நாவாய், கலம், வங்கம் போன்றவை ஆழ்கடலில் அஞ்சாமல் உலகைச் சுற்றி வருபவையாகக் காட்டப்படுகின்றன. இவை பெரிய மரக்கல வகையைச் சார்ந்தவை என்றும்*

கூறுகின்றனர். வங்கம், மரக்கலம், நாவாய், கலம் போன்றவை கீழ் நாட்டிலுள்ள மணிபல்லவம் என்னும் தீவில் தங்கி அங்கிருந்து நேராகச் சாவகம் கடாரம் மலையம் போன்ற தொலைகிழக்கு நாடுகளுக்குச் சென்று வந்தன என்பதை அறியமுடிகிறது.

கலம், மரக்கலம் என்ற பெயர்கள் ஒரே சொல்லைக் குறிக்கின்றன. சிலப்பதிகாரம், அகநானூறு, புறநானூறு, மதுரைக்காஞ்சி போன்ற நூல்களில் கலம், மரக்கலம் என்ற சொற்கள் மிகுதியும் பயன்படுத்தப் படுகின்றன. தமிழர்கள் நீரைக் கடக்க முதன்முதலில் கண்ட ஊர்திக்குக் கலம் என்ற பெயர் தோன்றியிருக்கலாம். அதற்குப் பிறகுதான் மரக்கலம் தோன்றியுள்ளது. பின்னர் வெவ்வேறு விதமான கலங்கள் தோன்றியபோது நாவாய், வங்கம், கப்பல் போன்ற பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

கலங்களைச் செய்பவர்களும் பழுது பார்ப்பவர்களும் முற்காலத்தில் இருந்தனர். கலங்களைப் பழுது பார்ப்பவர் ‘கம்மியர்’ என்று குறிக்கப் பட்டனர். இவருக்கு ஓடாவி என்ற பெயரும் உண்டு.

**கலம்**

கலம் என்னும் சொல் பாத்திரம், அணிகள், கப்பல் முதலியவற்றைக் குறிக்கிறது. முற்காலத்தில் பெரிய பாய்மரக் கப்பல்கள் மரப் பலகையால் செய்யப்பட்டிருந்தன. அவற்றை மரக்கலம் என்றனர். நீரைக் கடக்கப் பயன்படுத்திய ‘மரக்கலம்’ நாளடைவில் ‘கலம்’ என்னும் பொதுப்பெயரில் வழங்கப்பட்டது.

ஓடாவி என்னும் பெயர் தமிழகத்தின் மேலைக் கடற்கரைப் பகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ளது.[17] பெரிய கப்பல்களாகிய கலங்களை நாவாய், வங்கம் என்னும் பெயர்களில் குறித்தனர். கலம் என்னும் பெயரிலும் தமிழர்கள் குறித்துள்ளனர். இதற்கு இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன.

*கடலில் ஆழ்கின்ற மரக்கலத்தைப் போலத் தோன்றி மாலைக் காலத்தில் மறையும் என்பதைக் குறுந்தொகை*

**கடல் ஆழ் கலத்தின் தோன்றி**

**மாலை மறையும் அவர் மணி நெடுங் குன்றே (குறு. 240:6-7)**

*என்கிறது.*

*சங்குகள் கடற்கரைக்கண் வந்து உலவக் கடலில் அலைகள் எழுந்து ஆரவாரிப்ப ஒலி மிகுந்து குளிர்ந்த துறையின்கண் கலங்கள் ஓடுமாறு செலுத்தினர் என்பதை ஐங்குறுநூறு,*

**கோடு புலம் கொட்ப, கடல் எழுந்து முழங்க**

**பாடு இமிழ் பனித்துறை ஓடுகலம் உகைக்கும் (ஐங். 192:1-2)**

*என்கிறது.*

*கலம் என்னும் படகும் கடல் வணிகத்திற்கும் பயன்படுத்தப் பட்டுள்ளதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பிற நாடுகளிலுள்ள அரிய ஆபரணங்களைத் தரும் பொருட்டுக் கடல்நீரில் உயர்ந்து செல்லும் பெரிய ஆரவாரத்தையுடைய கப்பல் தான் செல்லும் திசைகளிலே திரிந்தாற் போல இருக்கும் என்பதைப் பதிற்றுப்பத்து*

**அருங்கலம் தரீஇயர், நீர்மிசை நிவக்கும்**

**பெருங்கலி வங்கம் திசை திரிந்தாங்கு (பதிற்று. 52:3-4)**

*என்கிறது.*

*பெரிய கடலில் நீந்திய மரக்கலத்தைப் பழுதுபார்த்து அதற்கு வலிமையைச் சேர்க்கும் பண்டங்களை விலைக்கு விற்கின்றதைப் பதிற்றுப்பத்து,*

**பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும்**

**பண்ணிய விலைஞர் போல புண்ஒரீஇ (பதிற்று. 76:4-5)**

*என்கிறது.*

*ஓடும் பாய்மரக் கப்பலை ஓட்டுதற்குரிய பசைப் பொருளைக் கொண்டு சீர்திருத்தி அக்கலத்தினுள் இருப்போர் அச்சத்தைப் போக்கும் திசையறிந்து கலத்தைச் செலுத்தும் வல்லமையுடைய நீகானுடைய செயலைப் பரிபாடல் உரைக்கிறது.*

**இதையும் கயிறும் பிணையும் இரியச்**
**சிதையும் கலத்தைப் பயினான் திருத்தும்**
**திசை அறி நீகானும் போன்ம் (பரி. 10:53-55)**

*தாம் சென்ற இடங்களில் தமக்குக் கேடு ஏதுமின்றிச் செயலும் வாய்த்துச் சிறப்பெய்தியபின் மரக்கலங்கள் பலவும் துறையிடத்தே நெருங்கியிருக்கும் தெளிந்த கடலை உடைய தண்ணிய சேர்ப்பன் பற்றிக் கலித்தொகையில் காணலாம்.*

**சிதைவு இன்றிச் சென்றுழிச் சிறப்பு எய்தி, வினை வாய்த்து**
**துறைய கலம் வாய்சூழும் துணிகடல் தண் சேர்ப்ப (கலி. 132:6-7)**

*யவனர் கொண்டு வந்த நல்ல மரக்கலம், பொன்னைக் கொண்டு வந்து விலையாகக் கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச் சென்றது.*

**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும் (அகம். 149:11-12)**

*ஒலிக்கின்ற நீர்ப்பரப்பினையுடைய கானலம் பெருந்துறை என்னும் பட்டினத்துக்கு உரியவன், அப்பட்டினத்தில் செல்வத்தைக் கொண்டு வந்து தரும் நல்ல மரக்கலம் உடையுமாறு கூட்டமாகத் திரண்டு வந்து தாக்கும் இறால் மீன் போல் திரண்ட படையுடன் வந்து தாக்குகின்றவன்.*

**இரக்குநீர்ப் பரப்பின் கானல்அம் பெருந்துறை**
**தனம் தரு நன்கலம் சிதையத் தாக்கும்**
**சிறுவெள் இறவின்குப்பை அன்ன (அகம். 152:6-8)**

*மரக்கலம் ஏற்றுமதி இறக்குமதி நடந்தமையையும், மரக்கலத்தைப் படையுடன் வந்து தாக்கியுள்ளமையையும் உணரமுடிகிறது.*

*பெரிய கடலில் மிகுந்த ஆழமுடைய பரப்பிடத்தில் காற்றால் செலுத்தப்பட்ட மரக்கலம் நீரை விலக்கி முன்னேறும். அதுபோல ஆண் யானை போர் மேல் சென்று போர்க்களத்தின் இடத்தை அகலமாக்கும்.*

**நளிகடல் இரும் குட்டத்து**
**வளி புடைத்த கலம் போலக்**
**களிறு சென்று களன் அகற்றவும் (புறம். 26:1-3)**

*'கூம்பு மேல் விரிக்கப்பட்ட பாயை மாற்றாமல் அதன் சுமையையும் குறைக்காமல் ஆற்றின் கழிமுகப் பகுதியில் பெரிய மரக்கலம் வந்தது.*

**ஒளித்த துப்பினை ஆதலின் வெளிப்பட**
**யாங்ஙனம் பாடுவர் புலவர்? கூம்பொடு**
**மீப்பாய் களையாது, மிசைப்பரம் தோண்டாது (புறம். 30:10-13)**

*கரையில் பிணிக்கப்பட்டு உலர்ந்து காணப்படும் மரக்கலம் கடல் போலக் காட்சி அளிக்கும் என்னும் புறநானூற்றுப் பாடல் வாயிலாகவும் பெரிய கலன்கள் கலம் என்னும் பெயரில் வழங்கப்பட்டிருந்தன என்பதை அறியலாம்.*

**பிணங்கு கதிர்க்கழனி நாப்பண் ஏமுற்**
**றுணங்கு கலன் ஆழியிற் றோன்றும் (புறம். 338:10-11)**

*இரவு நேரத்தில் கொளுத்திய விளக்குச்சுடர் திசைத் தப்பிப் பெருங் கடற் பரப்பிலே ஓடும் மரக்கலங்களை அழைக்கும். நீர்ப்பாயல் துறைமுகம் பின்னை கிடக்க அங்கிருந்தும் செல்லும்.*

**இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**
**உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்**
**துறைபிறக்கு ஒழியப் போகி (பெரும். 349-351:4-6)**

*மேலைநாட்டுக் குதிரைகள் மரக்கலங்களில் வந்து இறங்குதல் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.*

**நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்**

**புணர்ந்து, உடன்கொணர்ந்த புரவியொடு அனைத்தும்**

**(மதுரை. 322-323)**

*ஒல்லென எழும் ஓசையைப் போல கட்டத்தினின்றும் பண்டங்கள் வருகின்ற மரக்கலங்களில் ஏற்றும் ஓசை மிகுந்திருக்கும்.*

**ஒல்லென இமிழ் இசைமான, கல்லென**

**நனந்தலை வினைஞர் கலம் கொண்டு மறுக (மதுரை. 538-539)**

**வங்கம்-அமைப்பு**

*'வங்கம்' என்று குறிக்கப்படும் கலமும் ஒரு பெரிய மரக்கல வகையைச் சாரும். தமிழ்ப் பெருஞ்சொல் அகராதி வங்கத்திற்குப் பெரிய கப்பல் என்றும் 'அலை', 'கடல்' என்றும் பொருள் தருகிறது. நாவாய், கலம் போன்று வங்கத்திற்கும் இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன. வங்கம் பற்றிய சான்றுகள் மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற காப்பியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன. வங்குக் கால்களால் கட்டப்பட்ட பெரிய மரக்கலத்துக்கு 'வங்கம்' என்ற பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. பிற்காலத்தில் வங்குக் கால்கள் வைத்துக் கட்டப்பட்ட பிற பெரிய மரக்கலங்களுக்கு வெவ்வேறு பெயர்கள் தோன்றியுள்ளன.*

*"வங்கம் என்று அழைக்கப்பட்ட கலம் பூம்புகார்ப் பட்டினத்திலிருந்து மக்களை ஏற்றிக்கொண்டு மணிபல்லவத் தீவில் தங்கிப் பழுதுபார்க்கப்பட்டுப் பின் சாவகம் போய் மீண்டதாக மணிமேகலை குறிப்பிட்டிருப்பதன் வாயிலாக நீர்வழிப் போக்குவரத்திற்கு வங்கம் பயன்பட்டதாகத் தெரிகிறது*

**வங்கம் கட்டும் முறை**

*வங்கம் என்பது தமிழகத்தில் முற்காலத்தில் இருந்த ஒரு மரக்-கலமாகும். இது நாவாயைவிடச் சிறிய மரக்கலம் என்றும், ஆனால் நாவாயைவிட விரைந்து செல்லக்கூடியது என்றும் கூறுவர். வங்கம் என்ற சொல் சிலப்பதிகாரம், மணிமேகலை, பதிற்றுப்பத்து, நற்றிணை, மதுரைக் காஞ்சி போன்ற இலக்கியங்களில் காணப்படுகிறது. வங்க நாட்டுப் பாணியில் கட்டப்பட்ட கலமாக இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர்.*

*ஆனால் தமிழ்நாட்டுப் பரதவர்கள் தமிழ்நாட்டிலே தமிழர் பாணியிலே கட்டப்பட்ட விரைந்தோடும் ஒரு அழகிய மரக்கலம் இதைக் கூறுகின்றனர்.[18]*

*தமிழகத்தில் வள்ளம், ஓடம், தோணி, நாவாய் போன்றவை நீரைக் கடக்கும் ஊர்திகளைக் கட்ட 'வங்கு' என்ற சட்டங்கள் மூலக்கருவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. மரக்கலங்களை நீளம், அகலம், உயரம், நீரின் எடையைத் தாங்கும் ஆற்றல் ஆகியவற்றுக்கு ஏற்ப உருவாக்குகின்றனர். நான்கு பக்கமும் சதுரமாகச் செதுக்கப்பட்ட நீளத்தடிகள் இரண்டின் அடிப்பகுதியை ஆணி வைத்து அடித்து இரு நுனிப் பக்கங்களையும், வேண்டிய அகலத்திற்கு ஏற்ப விரித்து நிலத்தில் வைக்கின்றனர். வங்கு என்ற இந்தக் கவட்டை மரக்கொம்பை அடுத்தடுத்து வரிசையாக அணியம் முதல் (முன்பக்கம்) பின்தலை வரை (பின்பக்கம்) வைக்கின்றனர். பின்னர் அதன் வெளிப்பக்கமாகக் கனத்த மரப் பலகைகளை அடி முதல் நுனி வரை இரு பக்கமும் அடித்துக் கப்பலை உருவாக்குகின்றனர்.*

*வங்கம் கட்டும் வேலை வங்காள விரிகுடாப் பகுதியில் உள்ள கடல் ஓரங்களிலும் தமிழகத்தில் கொற்கை, காயல்பட்டினம் குலசேகரன்பட்டினம் பூம்புகார் போன்ற பகுதிகளிலும் நடைபெற்று வந்தது.[19]*

*கங்கைப் பெருநதியைக் கடப்பதற்கு வேண்டுவனவாகிய மிகுதியான ஓடங்களை அமைத்தனர்என்பதைச் சிலப்பதிகாரம்,*

**கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன**

**வங்கப் பெருநிரை செய்க தாமெனா (சிலம்பு. 26:164-165)**

*என்கிறது.*

*நூற்றுவர் கன்னரிடம் பெற்ற மரக்கலத் திரள்கள் கங்கைப் பெருநதியின் வடகரையில் அமைந்திருந்தன.*

**கங்கைப்பே ரியாற்றுக் கன்னரிற் பெற்ற**

**வங்கப் பரப்பின் வடமருங் கெய்தி (சிலம்பு. 26:175-176)**

*மேற்கண்ட பாடல்களின்வழி வங்கம் என்னும் கலம் கங்கை ஆற்றில் மக்களை ஏற்றிச்செல்லப் பயன்படுத்தப்பட்ட செய்தியைப் புலப்படுத்துகின்றது.*

*கடலில் செல்லாது தங்கிய கப்பலில் அமைந்த பாய்மரத்தில் சென்று தங்கும் வங்கம் என்னும் கலமும் பாய்மரத்தினால் கடலில் செலுத்தப்பட்ட ஒரு கலமாகும்.*

**தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்**
**மருங்கூர்ப் பட்டினத்து அன்ன, இவள் (நற். 258:9-10)**

*காற்றின் துணையுடன் செலுத்தப்பட்ட காலமாகிய வங்கத்தில் பிற நாடுகளிலிருந்து அரிய பொருள்கள் கொண்டு வரப்பட்டன.*

**பெருங்கலி வங்கம் திசை திரிந்தாங்கு (பதிற்று. 52:4)**

*பிறநாட்டு மரக்கலங்கள் தாங்கள் கொண்டு வந்த பொருள்களை இறக்குதலும், இந்நாட்டுப் பொருள்களைப் பிறநாட்டு மரக்கலங்களில் எடுத்துச் செல்லுதலும், பதிற்றுப்பத்திலும், மதுரைக்காஞ்சியிலும் இடம் பெறுகின்றன.*

**வால் இதை எடுத்த வளிதரு வங்கம்**
**பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து (மதுரை. 536-537)**

*உலகமே கிளர்ந்து எழுந்தாற் போன்ற அச்சம் பொருந்திய நாவாய் வேகமாக வீசும் இயல்பினதாய்க் காற்று அசைத்துச் செலுத்தஇரவு பகலாக ஓரிடத்தும் தங்காது புலால் நாறும் அலைகளையுடைய பெரிய கடலின் நீர்ப்பரப்பைக் கிழித்துக் கொண்டு சென்றது. நாவாய் ஓட்டியும் கரை உயர்ந்த மணல் செறிந்த துறையிடத்தே ஒளி பொருந்திய விளக்கினால் செல்லும் இடமறிந்து சேருகிறான் தலைவன் என்ற செய்தியை அகநானூறு உரைக்கிறது.*

**உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீர்இடைப்போழ,**
**இரவும் எல்லையும் அசைவு இன்று ஆகி,**

**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட,**
**கோடுஉயர் திணிமணல் அகன்துறை, நீகான்**
**மாட ஒள்எரி மருங்கு அறிந்து ஒய்ய** (அகம். **255:1-6**)

*போர்ப் படைகளில் குதிரைகள் இறந்து காற்றில் அசைவு இல்லாமல் கிடக்கும் மரக்கலம் போல மிதப்பதனை அறியலாம்.*

**வளிவழக்கு அறுத்த வங்கம் போல** (புறம். **368:9**)

**திண்தேர்ப் புரவி வங்கம் பூட்டவும்**
**வங்கப் பாண்டியில் திண்தேர் ஊரவும்** (பரி. **20:16-17**)

**இருங்கழி இழிதரு கலி வங்கம்** (புறம். **400:20**)

*என்பதையும் சங்க நூலில் அறியமுடிகிறது.*

*இறாமீனைக் கவர்ந்துண்ட காக்கை கடலில் செல்லாமல் இருந்த கப்பலில் அமைந்த பாய்மரத்தில் சென்று தங்குவதனை அறியலாம்.*

**தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்** (நற். **258:9**)
**கங்கை வங்கம் போகுவர் கொல்லோ** (நற். **189:5**)
**வணங்கு காழ் வங்கம் புகும்** (கலி. **92:47**)

**பிற்காலக் கலங்களும் அமைப்பும்**
**பிளாவு**

*பிளாவு கேரள நாட்டில் ஓடும் ஒரு சிறிய படகு ஆகும். இது மிக உறுதி வாய்ந்தது. இதற்கு உள்ளே எளிதில் நீர் புகுந்துவிடாது. மரத்தின் நடுவில் நீளமாகப் பள்ளந்தோண்டி பிளவு செய்யப்பட்டது. மரத்தைப் பிளப்பது போன்று தோண்டி எடுத்துச் செய்யப்பட்டதால் இதைப் பிளாவு என்று கூறுகின்றனர். பிற்காலத்தில் மரப்பலகைகளைப் பொருத்திப் பிளாவு என்னும் படகு செய்யப்பட்டது.*

*கால்டுவெல் என்னும் அறிஞர் தென்னிந்தியக் கரையோரங்களில் செல்லும் ஓடும், பிளாவு போன்ற சிறிய மரக்கலங்கள் இருந்தன என்றும், அவை இலங்கைத் தீவிற்கு அப்பால் செல்லவில்லை என்றும் கூறியுள்ளார்.*

**மச்சுவா**

*மச்சுவா, வள்ளத்தைப் போன்று நீண்ட தோற்றமுடையதாய் இருக்கின்றது. ஆனால் இது கனமான பலகைகளை ஒன்றோடொன்று பொருத்திக் கட்டப்பட்டுள்ளது. இதில் பொருள்கள் மட்டும் ஏற்றிச் செல்லப்படுவதில்லை. கடற்பயணத்திற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. பல காலமாகத் தமிழகத்தில் சென்றுவரும் ஓடும் என்று இதனைக் கூறுவர்.*[20]

**டிங்கி**

*டிங்கி வள்ளத்தைவிடப் பெரியதாக இருக்கும். பின்பக்கம் விரிந்தும், தாழ்ந்தும், முன்பக்கம் ஒடுங்கி உயர்ந்தும், முன்பலகை இணைப்புத் தடிபோன்று வளைந்தும் இருக்கும். பாய் கட்டிப் பாய்ந்து ஓடும்பொழுது பாய் சாயும் பகுதியின் வெளிப்புலப் பலகையை ஒட்டிச் சுமார் 16 அடிப் பலகையை தண்ணீருக்குள் நாட்டியிருப்பர். இதன் நுனிப்பகுதி நீருக்குள் 8 முதல் 10 அடி நீளம் தாழ்ந்து இருக்கும். டிங்கி, காற்றை எதிர்த்துச் சாய்ந்து நீரோட்டத்தோடு வழிந்து போகாமலும் கவிழ்ந்து விடாமலும் பாதுகாக்கும். டிங்கி இடத்திற்கு இடம் தோற்றத்தில் மாறுபட்டுக் காணப்படும். இந்த டிங்கி கப்பலுக்குப் பொருள்களை ஏற்றவும், கப்பலில் இருந்து பொருள்களை இறக்கவும் தூத்துக்குடியில் பயன்படுத்தப்படுகிறது. கங்கை, பிரம்மபுத்திரா போன்ற பெரிய ஆறுகளில் கப்பல் போக்குவரத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது.*

**மசுலா**

*மசுலா தோணியினின்று வளர்ச்சியடைந்த ஊர்தியாகும். மசுலாவின் அடிப்படையிலேயே கப்பல்கள் கட்டப்பட்டன. பசுலா இன்றும் தூத்துக்குடியில் ஓட்டப்படுகிறது. மசுலாவின் உள்பக்கம் பண்டங்களை வைக்கவும், அமர்ந்திருக்கவும், பிற தேவைகளுக்கும் பயன்படுத்தப் பட்டுள்ளது.*

*மசுலாவின் மீது பாய் கட்டி இயங்கும்படி செய்வர். காற்று இல்லாத போது பக்கத்திற்கு அறுவர் இருந்து மசுலாவை ஓட்டுகின்றனர். இது மசூலிப்பட்டினத்தில் தோன்றியிருக்கலாம் என்றும், இதனால் 'மசூலா'*

என்ற பெயர் பெற்றிருக்கலாம் என்றும் கூறுவர். இது மக்களின் போக்குவரத்திற்கும் பொருள்களை ஏற்றிச் செல்வதற்கும் பயன்படுத்தப் பட்டுள்ளது. மசுலாவின் முன் பகுதியும் பின்பகுதியும் அழகிய வேலைப்பாடுகளைக் கொண்டிருக்கும். இதன்பின் பகுதி உயரம் குறைவாகக் காணப்படும். இதில் மாடி வீடு போன்ற சிறிய பலகைகளான அறைகளும் இருப்பதுண்டு. இதனை ஓட்டுபவர் நின்றுகொண்டு மசுலாவின் போக்கு, காற்றின் போக்கு, கடற்கரையின் தொலைவு முதலியவற்றை அறிந்து கொள்வர்.

**வத்தை**

வத்தையின் அடிப்பகுதி தோணியைப் போன்று காணப்படும். இதன் மேற்பகுதி முழுவதும் தட்டையாகக் கனத்த பலகையால் மூடப்பட்டிருக்கும். வத்தை தோணியைவிட உயரத்தில் குறைந்து காணப்படும். தோணியின் அளவுக்குச் சரக்குகளை இதில் ஏற்றமுடியும். இது உப்பங்கழிகளிலும் கடல் ஓரப் பகுதிகளிலும் பயன்படுகின்றது. இதற்குப் பாய்மரமோ பாயோ கிடையா. உந்து கம்புகளாலும் இயக்கி வருகின்றனர். வத்தை இப்பொழுது கேரளத்திலும், இலங்கையிலும் பெரிதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இங்குள்ள சரக்குகளை ஏற்றிச் செல்லும் எல்லாச் சிறு படகுகளும் வத்தை என்றே வழங்கப்படுகின்றன.

**உரு**

உரு என்பதைப் பாய்க்கப்பல் என்று கூறுகின்றனர். உருவில் மூன்று கூம்புகள் (பாய் மரங்கள்) இருக்கும். பாய்மரங்கள் சாய்ந்துவிடாமல் இருப்பதற்கு ஏராளமான கயிறுகளை நான்கு பக்கமும் கட்டியிருப்பர். மூன்று பாய்மரங்களின் நடுவில் நிற்கும் பாய்மரம் மிக உயர்ந்து இருக்கும். முன்னும் பின்னுமுள்ள பாய்மரங்கள் சற்றுச் சிறியனவாக இருக்கும். நடுவில் நிற்கும் பெரிய பாய்மரத்தில் பெரிதும் சிறிதுமான இரண்டு பாய்கள் இருக்கும். முன்பகுதியில் அணியத்தின் முன்பு பாய்க்கம்பு ஒன்றைச் சாய்வாகப் பாய்மர வடத்தோடு கட்டி பாய் ஒன்றையும் அதன்மீது கட்டி விடுவர். பின்பகுதியிலும் கம்பு ஒன்றைச் சாய்வாகக் கயிற்றோடு கட்டிச்

*சுக்கான் பாய் ஒன்றையும் கட்டுவர். இதேபோல் மூன்று பாய்மரத்தின் நுனிப்பகுதியிலிருந்து நான்கு புறமும் பாய்க் கப்பலோடு இழுத்துக் கட்டியிருக்கும் பலமான கயிறுகளில் ஏராளமான சிறுசிறு பாய்கள் கட்டப்பட்டிருக்கும். உரு என்பது சரக்கு ஏற்றும் கப்பலாகும். இதில் மிகுதியான மக்கள் பயணம் செய்யமுடியாது. இவ்வகைக் கப்பல் முற்காலத்தில் தமிழகத்தில் இருந்ததாகக் குறிப்பு இல்லை.*[21]

**கப்பல்**

*தமிழர்கள் புதிய முறையில் கப்பல்கள் கட்டியுள்ளனர். அவர்கள் கப்பல் கட்டுவதற்கு இலக்கணமும் கண்டனர். கப்பல்களின் மேலே மரக்கட்டைகள் அடித்திருப்பதுபோல, உட்புறமும் வரிசையாக மரக்கட்டைகளை இணைத்து மெழுகு பூசித் தண்ணீர்க் கசிவுகள் ஏற்படாதவாறு செய்திருந்தனர். மற்றச் செயல்களுக்குத் தனியாகக் கப்பல் கட்டியிருந்தனர். வணிகர்கள் பயன்படுத்துவற்குச் சரக்குக் கப்பல்கள் மக்கள் பயணம் செய்வதற்குப் பிரயாணக் கப்பல்கள், மன்னர்கள் செல்வதற்கு அலங்காரங்களுடன் கூடிய கப்பல்கள் போன்றவையும் இருந்தன. ஒவ்வொரு வகைக் கப்பலுக்கும் தனியாக வண்ணங்கள் தீட்டப்பட்டு இருந்தது. கப்பலின் வசதிக்கு ஏற்பப் பல்வேறு அறைகளும் காணப்பட்டன.*[22]

*முதன்முதலில் தமிழர்கள் தங்கள் நாட்டுப் பாணியில் கலங்களை அமைக்காமல் வங்க நாட்டுப் பாணியிலும் ஆந்திரநாட்டு முறையிலும் கட்டினர். வங்க நாட்டு முறையில் கட்டப்பட்ட கலத்திற்கு 'வங்கம்' என்றும், ஆந்திர நாட்டு முறையில் கட்டப்பட்ட கலத்திற்குக் 'கப்பல்' என்றும் பெயரிட்டனர். முற்காலத்தில் கப்பல் நீரைக் கடக்க மட்டும் பயன்படுத்தப்பட்டது. ஆனால் இப்பொழுது நீரைக் கடக்கவும் சரக்குகளை ஏற்றிச் செல்லவும் பிற தேவைகளுக்கும் இவ்வகைக் கலங்கள் பயன்பட்டு வருகின்றன.*

*தமிழகத்தில் பெரிய கலமாகிய கப்பல்கள் பல இருந்தன என்பதற்குத் தமிழ்ச் சான்றுகள் பல உள்ளன. கலம், மரக்கலம், நாவாய், வங்கம், உரு*

என்ற சொற்களைவிட கப்பல் என்ற சொல்லைத் தமிழர்கள் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர்.

**கப்பல் கட்டும் முறை**

கப்பல் கட்டும் தொழிலை ஒரு கலையாகவே வளர்த்துவிட்ட பெருமை பழந்தமிழர்களுக்கு உண்டு. 'கப்பல் சாத்திரம்' என்னும் நூலின் முன்னுரைப் பகுதியில் 'கப்பல் தொழில்' என்ற தலைப்பில் தி.பொ. பழனியப்பப் பிள்ளை என்பவர் சில அரிய விளக்கங்களைத் தெரிவித்துள்ளார்.

தமிழர்கள் எங்ஙனம் பல வகையான மரக்கலங்கள் செய்து வாணிகத் தொடர்புவழி நாட்டின் பொருள் வளம் பெருகத் துணைபுரிந்தனர் என்பதை அவர் தெளிவுபடுத்தியுள்ளார். முதன்முதலில் தெப்பம், மிதவை போன்றவற்றைத் தமிழர்கள் அமைத்தனர். கிளிஞ்சல், சங்கு முதலிய உட்குழிவுள்ள பொருள்கள் நீரில் மிதந்து நிற்பதையும், உட்குடைவுள்ள மரங்கள் நீரோட்டத்தில் மிதந்து வருதலையும் அவற்றில் பறவை முதலியவை தங்கிச் செல்லுதலையும் கண்ணுற்றுக் கட்டுமரங்கள் தவிர மரங்களை உட்குடைந்து ஓடங்களைச் செய்து நீரில் மிதக்கவிட்டனர்.

ஐரோப்பிய மொழிகளில் ship, skip முதலிய சொற்கள் மரம் உட்குடையப்பட்ட தன்மையைப் புலப்படுத்துகின்றன. தமிழில் மிகப் பழைய வழக்குச் சொல்லாக உள்ள 'தோணி' என்பது வடமொழியில் 'த்தோணி' என வழங்கப்படுகிறது.[23]

தொல்காப்பியம் மக்கள் பொருள் ஈட்டும் முயற்சியில் தம்முடைய இல்லத்தை விட்டுச் செல்லும்போது காலாலும் கலத்தாலும் சென்று வந்தனர் என்ற பழமையான வழக்கத்தைத் தெரிவிக்கின்றது.

**இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்**
**உரிய தாகுமென் மனார் புலவர் (தொல். பொருள். அகத். 11)**

*இதனால் காலிற் பிரிவு, கலத்திற் பிரிவுகள் தோன்றின என்பர் உரைகாரர்கள். கால் என்பது வட்டை வண்டியாகும். கலம் என்பது மரக்கலம் ஆகும். இது தமிழகத்து மக்களின் பழைய நடப்பினைக் காட்டுகின்றது.*

**முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை (தொல். பொருள். அகத். 37)**

*என்ற தொல்காப்பிய வரியில் இது பழமையான வழக்கத்தினைக் குறிப்பிட்டுள்ளமையைக் 'கப்பல் சாத்திரம்' என்னும் நூல் உணர்த்துகிறது.*

*கடலில் செல்லும் மரக்கலத்திற்கு மிகப் பழமையான சொற்கள் வழக்கத்தில் இருந்துள்ளன. சேந்தன் திவாகரம் மரக்கலத்தின் பெயர்களைக் குறிப்பிடுகின்றது. இதனை,*

**வங்கம் பாதை தோணி யானம்**
**மதலை திமில்பாறு அம்பி**
**பஃறி சதா பாரதி நவ்வு**
**போதகம் தொள்ளை நாவாய் (திவாகரம். 6:1280)**

*என்னும் நூற்பாவால் உணரமுடிகிறது. மேலும் தோணியின் பெயர்களையும் இந்நூல் குறிப்பிட்டுள்ளது.*

**பகடு பஃறி யம்பி யோடம்**
**திமிலை தோணி யெனச் செப்பினரே (திவாகரம். 6:1282)**

**பகடு பட்டிகை யானம் அம்பி**
**படுவை தொள்ளம் புணை மிதவை தெப்பம்**

*எனக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.*

*எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய நூல்கள் தமிழர்கள் கடல் வழியாகக் கப்பல் செலுத்தினர் என்ற செய்தியைக் கூறுகின்றன. கப்பல் கட்டும் தொழில் பற்றிய குறிப்பும் பழந்தமிழர் நூல்கள் வாயிலாகப் புலனாகிறது.*

ஓடும் பாய்மரக் கப்பலை ஓட்டுவதற்குரிய பசைபொருளைக் கொண்டு சீர்திருத்தி அக்கலத்தினுள் இருப்போர் அச்சத்தைப் போக்கும் திசையறிந்து கலத்தைச் செலுத்தும் வல்லமையுடைய நீகானுடைய செயலை ஒத்திருந்தது என்பதைப் பரிபாடல் உணர்த்துகிறது.

**இதையும் கயிறும் பிணையும் இரியச்**
**சிதையும் கலத்தைப் பயினான் திருத்தும்**
**திசைஅறி நீகானும் போன்ம்** **(பரி. 10:53-55)**

**கப்பல் கட்டும் முறை**

கப்பல் கட்டுதல் என்பது சிக்கலான தொழில். கட்ட வேண்டிய கப்பலின் நீளம், அகலம், ஆழம், எடை, இயக்கும் கருவி, வேகம் முதலானவை முதலில் திட்டமிடப்படுகின்றன. கப்பல் கட்டவேண்டிய பல்வேறு பொருள்களின் அளவு, விலை முதலியவற்றை மதிப்பீடு செய்து அமைப்புப் படங்கள் வரையப்படுகின்றன. தேவையான எஃகுத் தகடுகள், பலகை முதலான பொருள்கள் வாங்குவதற்கு மற்றொரு பிரிவு தனியாகச் செயல்படுகிறது. வரையப்பட்ட அமைப்புப் படங்கள் அந்தந்தப் பகுதிக்கு அனுப்பி வைக்கப்படும். கரும்பலகையைப் போல் கறுப்பு நிறம் பூசப்பட்ட தரையின் மீது கப்பலின் அமைப்பை உண்மையான அளவுப்படி காட்டும் அமைப்புப் படங்கள் வரையப்படுகின்றன.

தட்டையான மரப்பலகைகளைக் கொண்டு கப்பலின் மாதிரி உரு அமைக்கப்படுகிறது. இம்மாதிரி உருவில் கப்பலில் இருக்க வேண்டிய எஃகுத் தகடுகளின் வடிவம், அகலம் முதலியன விளக்கமாகக் காட்டப்பட்டிருக்கும். கப்பல் கட்டுவதற்குத் தேவையான அனைத்து விவரங்கள் இதில் குறிப்பிடப்பட்டிருக்கும். இம்மாதிரி உருவை வைத்து எஃகுப் பொருள்களைப் பொருத்திக் கப்பலின் உடற்பகுதி அமைக்கப்படுகின்றது. மாதிரி உருவத்தை மரத்தில் செய்து பார்த்துப் பின் எஃகினால் கப்பல் கட்டுவதால் பற்பல வடிவான பகுதிகளைச் சரியாகப் பிணைக்கமுடிகிறது.

எந்திரத்தின் உதவியால் எஃகுத் தகடுகளைப் பயன்படுத்திக் கப்பலின் உடற்பகுதி கட்டப்படுகின்றது.

கப்பலின் பின்புறம் சாய்தள வழியின் கீழ்ப்பகுதி அதாவது கடல் பக்கமாகவும் கப்பலின் முன்புறம் சாய்தள வழியின் மேற்பகுதி இருக்குமாறும் கப்பலின் அடிக்கட்டைகள் முதலில் அமைக்கப்படும். இதுவே கப்பல் கட்டுதலின் முதற்படியாகும். பின்னர் உடற்பகுதிக்குரிய பகுதிகள், சிறிது சிறிதாகக் கொண்டு வரப்பட்டு, அமைப்புப் படத்தில் குறித்தபடியே ஆணியால் இறுக்கப்பட்டோ பற்றவைக்கப்பட்டோ பொருத்தப்படும். கப்பலின் உடற்பகுதி கட்டி முடிந்தபின் சாய்தள வழியிலிருந்து நகர்த்தப்படுகிறது.

நாவான், நாவாய் ஆகிய சொற்கள் கப்பல் என்ற பொருளில் வரும். இவ்விரண்டும் கப்பல்கட்டும் கலை பற்றியும், கப்பல் செலுத்தும் முறை பற்றியும் குறிப்பிடுகின்றன. நாவாய் சாத்திரம் என்னும் நூலில் 198 பாடல்கள் உள்ளன. ஆனால்நாவான் சாத்திரச் சுவடியில் 81 பாடல்கள் மட்டுமே உள்ளன. இருப்பினும் இரண்டு நூல்களும் முழுமை பெற்றுள்ளன. இவ்விரண்டு நூல்களின் ஆசிரியர்களும் வேறு வேறானவர்களா ஒருவரா என்பது தெளிவாகவில்லை. சுவடியை எழுதியவர் சீவரத்தினக் கவிராயர் என்று தெரிகிறது. இவரே நாவாய் சரித்திரம் எழுதினாரா என்பதும் விளங்கவில்லை. இவ்விரு நூல்களிலும் 49 பாடல்கள் அப்படியே கையாளப்பட்டு இருக்கின்றன.

**கப்பலின் சிறப்பு**

தமிழர்கள் மிகுதியாகக் கடற்பயணம் செய்தனர். பயணக் காலங்களில் மாலுமிகள் விண்மீன்களையும், திங்களையும் நோக்கித் திசையறிந்து மரக்கலங்களைச் செலுத்தினர். வானத்தை நோக்கி நேரம் அறிந்து கொள்ளவும் பயின்றிருந்தனர். இவ்வகைச் சாத்திரங்கள் ஆராய்ந்து கப்பலைக் கட்டத் தொடங்குகின்றனர்.

**கப்பல் செய்வதற்கு ஏற்ற காலம்**

*நல்ல நாள், நல்ல நேரம், திதி, சந்திரன் (நட்சத்திரம்) இவற்றின் சேர்க்கை, மகரம் முதலிய ஆறு சர லக்னங்கள் மற்றும் 7 நட்சத்திரங்களில் கப்பலைச் செலுத்துகின்றனர். மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இந்நான்கு இராசிகளிலும் கப்பலைச் செலுத்தமுடியாது என்பது கருதத்தக்கது.*

*நல்லநேரம், நாள் பார்த்துக் கப்பல் செய்வர். கப்பலை உடனடியாகச் செய்ய முடியாது. அதனுடைய ஒவ்வொரு பலகை வைப்பதற்கும் நல்ல நாள் பார்த்துச் செய்கின்றனர். அப்பொழுதுதான் கப்பல் முழுமையாக உடையாமல் இருக்கும் என்று நம்புகின்றனர். நல்லநாள் பார்த்துச் செய்யும் கப்பலே சிறப்பாகக் கடலில் சென்று வரும். கப்பல் மட்டுமின்றி மரக்கலம் செய்வதற்கும் நல்ல நாள் பார்ப்பர்.*

**சூலமொன் பாணில் நிற்கச்**
**சேர்ந்தனாள் பிறனாள்த் தானும்**
**வாலிபந் தாள மொன்று**
**வயங்குட னிரண்டும் முன்னே**
**யேலவே யிருபத்தொட்டு** **(நாவா. சாத். 2)**

*கப்பல் செய்வதற்கு முன் அந்த மரத்தைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள வேண்டும். மரம் வெட்டும்போது கறுப்பாக இருந்தால் பாம்பு வாழ்வதாகவும், மயில் போல் இருந்தால் தேள் வாழ்வதாகவும், பல நிறங்கள் கொண்டு காணப்பட்டால் தவளை வாழ்வதாகவும், வாழ் சிவப்பாகக் காணப்பட்டால் பல்லி வாழ்வதாகவும் சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன.*

**தெள்ளிய ஒற்றை யாகிற்**
**றிருந்திய நன்மை யாகும்**
**முள்ளதி விரட்டை யாகி**
**லுண்மையாய்க் கேடே யாகும்**
**தெள்ளிய வியாழம் நிற்கில்**
**தீமைகள் திறப்புண் டோடும்**
**வள்ளிய பிண்டி நாதர்**

**மரம்பல தொடாதென் றாரே** **(நாவா. சாத். 31)**

*கறுப்பு நிறம் கொண்ட மரக்கலம் தீமை ஏற்படுத்தும் என்றும், வெள்ளை நிறம் கொண்ட மரக்கலம் நன்மை விளைவிக்கும் என்றும் குறிப்பிடுவர். கப்பல் கட்டுவதற்கு முன் மரத்தை வாங்குபவர்கள் அந்த மரத்தில் எந்தவிதமான ஓட்டையும் இருக்கக்கூடாது என்றும், ஓட்டை உள்ள மரத்தை வாங்கினால் அவர்களுக்குத் துன்பம் ஏற்படும் என்றும் நாவான் சாத்திரம் குறிப்பிடுகின்றது.*

**குன்றிடுஞ் செல்வந் தானும்**
**கொடியதோர் மரத்தின் கொத்தி**
**மிண்டிய துளைகள் கொள்ளில்**
**மேதினி தன்னில் கேடாம்**
**மெண்டிசை தனிலெப் போது**
**மியல்விடா தேரை வைப்பே** **(நாவா. சாத். 30)**

*மரத்தை இரண்டாக வெட்டி அதையே மூன்று துண்டாகப் போடுகின்றனர். அதில் முன் பகுதியும், பின்பகுதியும் நன்மை தரும் என்றும், ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது துண்டுகளாக இருந்தால் கப்பல் செய்யப் பயன்படாது என்றும், நான்கு, ஐந்து துண்டாக இருந்தால் கப்பல் செய்யலாம் என்றும், பத்துத் துண்டாகக் கப்பல் செய்தால் மரணம் ஏற்படும் என்றும் சாத்திரம் கூறுகின்றது (17).*

### கப்பலின் அடிப்பகுதி

*கப்பலின் அடிப்பகுதிதான் மிகவும் அடிப்படையானது. அதைத் தவறாகச் செய்தால் உடைப்பு ஏற்பட்டு நீருக்குள் மூழ்கிடும். இதனால் கப்பலின் அடிப்பகுதி செய்யும்போது நல்லநாள் பார்ப்பர். அடிமரத்தின் நீளத்தை அளந்து ஒரு முழத்துக்கு 24 அங்குலமாகப் பெருக்கி வந்த தொகையை 27-இல் கழித்து அசுவினி நாளில் கப்பல் செய்ய முற்படுவர் (17).*

*மரத்தினுடைய அடிப்பகுதியை அளந்து எட்டு பகுதியாக மடக்கி அதில் ஆறு மடிப்பு விட்டு, அதையே இரண்டு மடங்காக எடுத்து அதை மூன்று பகுதியாக அமைத்து அதில் இரண்டு பகுதி விட்டு ஒரு பகுதியைப் பாய்மரத்தின் அடிப்பலகையாக நடுப்பகுதியில் கூட்டி முட்டுக் கொடுக்கின்றனர். மரத்தை வெட்டுவது பாவம் என்று கருதுவதால் பஞ்ச பூதங்களை ஒன்றுசேர்த்து வெட்டினால் பாவங்கள் விலகும் எனக் கொள்வர் (44).*

*கப்பலைக் கட்டுவதற்கான செலவுகளைப் பற்றியும் இந்நூல் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூல் கப்பல் கட்டுவது மட்டுமன்றிக் கடலில் மீன் பிடிப்பவர்களுக்கு ஏற்படும் விளைவுகள் பற்றியும், சரக்கு ஏற்றிச் செல்லும் கப்பல்கள் நல்ல நாள் பார்த்துச் செல்லவேண்டும் என்பது பற்றியும், கிரகநிலை பற்றியும் குறிப்பிடுகிறது. கடலில் மீன்பிடிக்கச் செல்பவர்கள் நல்ல நாள், நட்சத்திரம் பார்த்துச் செல்ல வேண்டும். பார்க்காமல் செல்பவருக்குக் கடலிலே பேரிடர் ஏற்படும் என்று கூறுகிறது.*

*கப்பல் கட்டுவதற்கு முன் முதலில் தோணியில் பலகை செய்து கடலில் மிதக்க விடுகின்றனர். அதற்குப் பிறகு கப்பல் கட்டுதல், கப்பல் ஓட்டும் கருவி போன்றவற்றைச் செய்கின்றனர். ரேவதி, ரிஷபம், அவிட்டம் இவை மூன்று நாழிகை இருக்கும்போது கப்பல் செய்தால் பின்பக்கம் உடைப்பு ஏற்பட்டு நீரில் மூழ்கிவிடும் என்று நூல் குறிப்பிடுகிறது (30).*

**கிரகநிலை**

*கிரகநிலை பார்த்துக் கப்பல் கட்டத் தொடங்குகின்றனர். அவை சனி திசைப் பலன், செவ்வாய் திசைப் பலன், சூரிய திசைப்பலன் போன்றவையாகும்.*

**சனி திசைப் பலன்கள்**

*சனி 1ஆம் இடம் இருந்தால் நீருக்குள் மூழ்கும். 4ஆம் இடத்தில் உச்ச நிலையில் இருந்தால் கப்பல் உடையும். 6ஆம் இடம் இருந்தால் காற்று மழையால் பாதிப்பு ஏற்படும். 8-ஆம் இடத்தில் இருந்தால் பொருள்கள்*

*அழியும். 10-ஆம் இடம் இருந்தால் காற்று அடித்துக் கப்பல் செல்லாமல் நிற்கும்.*

**செவ்வாய் திசைப்பலன்**

*செவ்வாய் 1ஆம் இடம், 5ஆம்இடம் இருக்குமானால் கடற்கரையிலேயே உடைப்பு ஏற்படும்.*

**சூரிய திசைப்பலன்**

*சூரியன் 3, 6, 7 இடங்களில் இருக்குமானால் கப்பல் ஓட்டும் கருவி உடைப்பு ஏற்படும் என்றும், 11ம் இடம் இருப்பின் கரையைச் சேராது என்றும் நாவான் சாத்திரம் கூறுகிறது.*

**ராகு திசைப்பலன்**

*ராகு 5ஆம் இடம் 8ஆம் இடம் இருக்குமானால் கடலில் கப்பலைச் செலுத்த முடியும். கப்பல் மட்டுமன்றி தோணி, வங்கம், நாவாய் இவற்றைச் செய்வதற்கும் நல்ல நாள் பார்ப்பர். இல்லையெனில் இதனுடைய பாய்மரம் சிதைவு பெற்றுவிடும். சரியான அளவு எடுத்துக்கொண்டு கப்பல் கட்டினால் தான் சிறப்பாக இருக்கும் என்கிறது இந்நூல்.*

**ராகு தானப் பலன்**

**மேடத்தில் அஞ்ச தாகு**
**மிடபத்தி லேழே முக்கால்**
**நாடுகற் கடகம் அஞ்சாம்**
**நல்லதோர் சிங்கம் நாலாம்**
**நீடுகொல் நாலே அரைக்கால்**
**நிட்செய மகர மூன்று**
**காடொற்ற ராசி தானுங்**
**கரைதனில் சேரு மென்றார் (நாவா. சாத். 35)**

*கப்பல் ஓட்டுபவர் நல்லநாள் நேரம் பார்த்து ஓட்டினால் எந்தவிதப் பாதிப்பும் இல்லாமல் கரைசேர முடியும் என்பது பற்றியும் குறிப்பிடுகிறது (44).*

**கப்பலில் பயணம் செய்வதற்கு உரிய காலம்**

*மேஷம், ரிஷபம், கடகம், சிம்மம், விருச்சிகம், துலாம், மகரம், தனுசு ஆகிய சுப லக்னங்களிலும் நல்ல திதி, வாரம், நட்சத்திரம் இவற்றின் சம்பந்தத்தால் ஏற்படுகிற நல்ல யோகம், நல்ல நாளில் படகில் பயணம் செய்தால் நன்மைகள் ஏற்படும்.*

**மரக்கலம் வைக்க ஆகாத நாள்**

*உத்திரட்டாதி, அஸ்தம், உத்திரம், மூலம், பூரம் ஆகிய நட்சத்திரங்களில் நாவாய் செலுத்தினால் நாவாய் முறிந்து விடும் என்கிறது இந்நூல் (55).*

*கப்பல் சாத்திரம் என்னும் நூலில் இல்லாத செய்திகள் சிலவற்றை அங்கிருந்த முதியவர் ஒருவர் மூலமாக அறிந்து கொண்டதாக திரு தி.பொ. பழனியப்பப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார். பெரிய பாய்மரம் திருக்கசைத்தி மரம், காணபாய்மரம், கோசுபாய்மரம் என்று பாய்மர வகைகளையும், ஆஞ்சான் கயிறு, தாம்பாங் கயிறு, வேடாங்கயிறு, பளிங்கைக் கயிறு, மூட்டங் கயிறு, இளங்கயிறு என்று கயிறு வகைகளையும் குறிப்பிட்டுள்ளார்.*

**கப்பல் கட்டுவதற்குரிய மரங்கள்**

*வேம்பு, இருப்பை, புன்னை, நாவல் போன்றவை நீர்மட்ட வைப்புக்கு ஏற்றவையாகும். பக்கவங்குக் கால்களுக்கு வெண்தேக்கு, தேக்கு உரியனவாகும். மேலை நாட்டிலும் பதினெட்டாம் நூற்றாண்டு வரை இந்தியக் கப்பல்கள் போன்று பழமையான காற்றோட்டத்தில் செல்லும் கப்பல்கள் இருந்தன.*[24]

*'யுக்தி கல்பதரு' என்னும்வடமொழி நூல் 272 வகையான கப்பல்கள் பற்றிக் குறிப்பிடுகின்றது. ஆனால் தமிழ்நாட்டிலோ பல நூற்றுக்கணக்கான*

*கப்பல்கள் இருந்துள்ளன என்பதற்குச் சான்றுகள் உள்ளன. துடுப்பால் உந்தித் தள்ளும் படகுகளில் பலவகை இருந்தன. இரண்டு துடுப்பு முதல் நூற்றுக்கணக்கான துடுப்புகள் வரையுள்ள பெரிய கப்பல்களும் பல்வேறு விதமான பாய்கள் கட்டி ஓடும் பாய்மரக் கப்பல்களும் இருந்தன. கப்பல் கட்டுவதற்குச் சில இடங்களில் கருவை மரங்களும் பயன்படுத்தப் பட்டுள்ளன.*[25]

*'கப்பல் சாத்திரம்' என்னும் நூல் கப்பலை ஓட்டும் முதன்மை உறுப்பாகிய சுக்கானைப் பற்றியும் கப்பலை ஓரிடத்தில் நிறுத்தி வைக்கும் கருவியாகிய நங்கூரத்தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளது.*

**கப்பல் செலுத்தும் முறை**

*தமிழ்மொழியில் மிகப் பழைய நூல்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் தமிழர் கடல்வழிக் கப்பல் செலுத்திய செய்திகள் பலவாறு எடுத்துக் கூறப்பட்டுள்ளன.*

*தமிழர் கலம் செலுத்திக் கடல் கடந்து பிறநாட்டுப் பொருள் ஈட்டும் முயற்சியினை,*

**உலகுகிளர்ந்த தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீர் இடைப்போழ**
**இரவும் எல்லையும் அசைவு இன்று ஆகி**
**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட**
**கோடு உயர் திணிமணல் அகன்துறை, நீகான்**
**மாட ஒள்எரி மருங்கு அறிந்து ஒய்ய (அகம். 255:1-6)**

*என்று அகநானூறு சுட்டுகிறது.*

*இதன்வழி அக்காலத்துத் தமிழ்நாட்டு மரக்கலம் உருவத்தால் மிகப் பெரியதாகவும் பெருந்திரளான மக்களையும் பொருள்களையும் தாங்கிச் செல்லும் பரப்பினை உடையதும் இது கடல் நீரினைப் பிளந்து விரைந்து செல்லும் தன்மையையும் வேகமாக வீசும் இயல்பினதாய் காற்று அசைத்துச் செலுத்த அதனைச் செலுத்தும் 'நீகான்' என்ற கப்பலோட்டி கடற்கரையில் உயர்ந்து தோன்றும் மணல்மேடுகளின் தன்மையையும் இரவின்கண்*

*கரையிடத்துள்ள பெருவீடுகளின் மேலுள்ள விளக்கின் துணைகொண்டு கரைசேரும் தன்மையையும் உணர்ந்துகொள்ள முடிகிறது.*

*சங்க நூலான புறநானூறு கப்பல் வணிகத்தில் ஈடுபட்டிருந்ததைக் குறிப்பிடுகின்றது. பலவகையான பொருள்களைக் கொண்டு செல்லும் இயல்புடைய கலங்களும் அவற்றை இறக்குமதி செய்வதற்குப் புகார்த் துறைமுகத்தை அடைந்தன என்றும், கூம்பு, பாய் முதலியவை கப்பலிலேயே காணப்பட்டன என்றும் இதில் கூறப்பட்டுள்ளது.*[26]

*கப்பலை முழுவதுமாகக் கட்டிமுடித்தபின் சாய்தள வழியிலிருந்து நகர்த்தப்படும். இவ்வாறு பரப்புவதால் கப்பல் எளிதில் வழுக்கிச் சென்று கடல்நீரில் மிதக்க முடியும். கடல் நீர் உயர்ந்த மட்டத்திலிருக்கும்போது பொத்தானை அழுத்தினால் கப்பல் சாய்தள வழியிலிருந்து மெதுவாக வழுக்கிச் சென்று கடைசியில் கடலில் மிதக்கும். மிதக்கவிட்டபின் கப்பல் துறையில் இழுத்து நிறுத்தப்பட்டு இயங்கும் எந்திரங்கள் கப்பலில் அமைக்கப்படும். கப்பலில் இருக்க வேண்டிய எல்லவிதமான வசதிகளும் அமைக்கப்பட்டபின் உலர் துறைக்கு* (dry dock) *கப்பல் கொண்டு செல்லப்படும். உலர் துறையிலிருந்து தண்ணீரை அகற்றியபின் பல மாதங்கள் தேங்கிய நீரில் மூழ்கியிருந்தமையால் பாதிக்கப்பட்டிருக்கும் கப்பலின் அடிப்பகுதியில் உயர்ந்த வகை வர்ணம் பூசப்படுகின்றது. பயணத்திற்கு ஆயத்தமாகிவிட்ட இக்கப்பலைக் கடலில் சிறிது தொலைவு ஓட்டிச்சென்று குறைபாடுகள் இருந்தால் அவற்றைச் சரிசெய்கின்றனர்.*[27]

**நாணயத்தில் கப்பல் உருவம்**

*முற்காலத்தில் கப்பற்கலை வளர்ச்சிபெற்ற வரலாற்றை நிலைநாட்டப் பழங்காலத்தில் கிடைத்த நாணயத்தில் கலம் இடம்பெற்றுள்ளது. முன்னோர் வெளியிட்ட காசுகளில் பல்வேறு உருவங்களைப் பொறித்துள்ளனர். யானை, காளை, புலி, சிங்கம், மயில், கருடன், புறா, குருவி, யாழ், வீணை, கப்பல், தாமரை போன்ற உருவங்களைப் பொறித்துக் காசுகளை வெளியிட்டுள்ளனர்.*

*ஒரு காசில் ஒரு பாய்மரத்தோடு விளங்கும்படகு உருவம் பொறிக்கப்பட்ட காசுகளை ஆந்திரர்கள் வெளியிட்டதாகக் குறிப்பிடுகின்றனர். படகு உருவம் தீட்டிய பல்லவர்கள் காசும் அக்காலத்தில் இருந்தன என்றும் இவை இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே இந்தியக் கப்பல்கலை வளர்ச்சி பெற்றதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன என்றும், படகு உருவம் பொறிக்கப்பட்ட பழங்காசு கி.பி. 2ஆம் நூற்றாண்டில் 'சதகர்ணி' என்னும் மன்னனால் வெளியிடப்பட்டது என்றும் கூறுவர்.*

*கப்பல் உருவந் தீட்டப்பட்ட மூன்று காசுகள் பூனா நகரில் கிடைத்துள்ளன எனக் கூறப்பட்டுள்ளது. இந்தக் காசுகளின் முன்பக்கம் இரண்டு பாய்கள் கட்டிய கப்பலும் வலப்பக்கம் ஒரு மீனும் இடப்பக்கம் சங்கும் கீழே எழுத்தும் பொறிக்கப்பட்டுள்ளன என்றும் கூறுவர்.*

**கோயில்களின் கப்பல் உருவம்**

*கோயிற் சிற்பங்களிலும் கப்பல் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. பூரி செகநாதர் கோயிலில் (ஒரிசா) ஓர் அரிய கப்பல் சிற்பம் உள்ளது. இந்தச் சிற்பம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு செதுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. கி.பி. 14ஆம் நூற்றாண்டில் அபு என்னும் மலையில் பொறிக்கப்பட்ட சமணர்களின் கப்பல் சிற்பம் ஒன்று உள்ளது. இதில் ஓர் அழகிய கப்பல் சிற்பம் காணப்படுகிறது.[28] வங்கச் சிற்பம் அமராவதிச் சிற்பம், சாவக நாட்டுக் கப்பல் சிற்பம் போன்றவை உரிய எடுத்துக்காட்டுகளாகும்.*

**தொகுப்புரை**

- *நெய்தல் நில மக்கள் தம் வாழ்வாதாரமாகக் கடலையே நம்பி வாழ்ந்தனர். கடல் அலைவாயினுள் ஓடியாடி நீந்தித் திரியும் பெரிய மீன்களைக் கண்ட அவர்கள், தாமும் அவற்றைப் போலவே நீந்துவதற்கு வசதி கண்டு இயற்கையைப் பொருத்தமாக்கிக் கொள்ள முற்பட்டனர். அதில் வெற்றியும் பெற்றனர். இம்முயற்சியில் அவர்கள்*

கண்டுபிடித்த ஊர்திகளைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் நிரம்பச் செய்திகள் காணப்படுகின்றன.

- பண்டைக்காலம் தொடங்கி வாணிபப் போக்குவரத்திற்கும் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கும் நீர்வழி ஊர்திகள் பயன்பட்டன. வாணிபம் செய்வதற்குக் கட்டுமரங்களை உருவாக்கியுள்ளனர். கட்டுமரங்களின் படிப்படியான வளர்ச்சியையும் அவை கடல் வாணிபத்திற்கு மட்டுமன்றி மீன்பிடிப்பதற்கும், கடல் பயணத்திற்கும் நீர்நிலை விளையாட்டிற்கும் பயன்பட்டமையையும் சங்க இலக்கியங்களின்வழி உணரமுடிகிறது.

- கப்பல் கட்டும் முறையையும் அவற்றிற்குப் பொருத்தமான மரங்கள் பயன்படுத்தியதையும் உணரமுடிகிறது. கப்பலைக் கடலில் செலுத்தும்போது அவற்றின் நாழிகை, நட்சத்திரம் ஆகியவற்றைக் கண்டறிந்து பயணம் செய்ததை உணரமுடிகிறது.

- அக்கால மக்கள் பயணம் செய்யும்போது இயற்கை உதவிக்கூறுகளின் துணைகொண்டு இயங்கிய கலம் பாய்மரக் கப்பல் என்பதனை அறியலாம்.

- பாய்மரங்களில் இருந்து வெளிநாடுகளிலிருந்து பண்டங்கள் இறக்கப்பட்டதனை உணரலாம். பழங்காலத்தில் காற்றின் துணை கொண்டு இயங்கிய கலம் பாய்மரக்கப்பலே என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

- கப்பலின் உதவியினால் பிற நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட முத்து, பவளம், ஆரம், சங்கு போன்றவற்றைக் கலங்கள் ஏற்றிக் கொண்டு வந்ததனை இலக்கியங்களின்வழி உணரலாம்.

- சங்க காலத்தில் பண்டமாற்று முறைகள் நடைபெற்றதையும் பஃறி என்ற ஓடத்தில் வெள்ளுப்பை ஏற்றிச்சென்று விற்றதனையும் பண்ட மாற்றாக நெல்லைப் பெற்று வந்ததையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. சங்க காலத்தில் மிதவை, புணை, தெப்பம், அம்பி, கட்டுமரம், தோணி, படகு, ஓடம், பரிசில், வள்ளம், சோங்கு, வள்ளம்,

*திமில், நாவாய், வங்கம், கலம், மிதவை, கப்பல், பஃறி என்று பதினெட்டு வகையான கலன்களைத் தமிழர்கள் கண்டிருந்தனர். இதனைத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவதிலிருந்து பழந்தமிழர்கள் கலன் அமைப்பதில் புலமையைப் பெற்றிருந்தமை விளங்குகிறது.*

- *சங்க காலத்தில் உள்நாட்டு வாணிகமும் நன்கு வளர்ச்சி அடைந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. தமிழக ஒட்டுமொத்த வரலாற்றில் சங்க காலம் ஒரு திருப்புமுனையாக இருந்தமையால் கடல்சார் நடவடிக்கைகளிலும் வளர்ச்சி நிலையைப் பெற்றதை உணரமுடிகிறது. அவற்றை விளக்கும் வகையிலான செய்திகள் சங்க இலக்கியங்களில் பலவாறு காணப்படுகின்றன.*

**சான்றெண் விளக்கம்**

1. *ஞா.விக்டர் ராசமாணிக்கம், (பதிப்.),* **சங்க இலக்கியத்தில் கலங்கள்**, *ப.4.*
2. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *ப. 19.*
3. *ஞா.விக்டர் ராசமாணிக்கம், (பதிப்.),* **சங்க இலக்கியத்தில் கலங்கள்**, *ப.18.*
4. *மேலது, பக். 19-20.*
5. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *ப. 156.*
6. *ஞா.விக்டர் ராசமாணிக்கம் (பதிப்.),* **சங்க இலக்கியத்தில் கலங்கள்**, *ப.22.*
7. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *ப. 157.*
8. *மேலது, ப. 108.*
9. *மேலது, ப. 160.*
10. *மேலது, பக். 160-163.*
11. *மேலது, ப. 29.*
12. *ஆறுமுகநாவலர் (உரை.),* **திருவிளையாடற் புராணம்**, *பா. 34.*
13. *ஞா.விக்டர் ராசமாணிக்கம், (பதிப்.),* **சங்க இலக்கியத்தில் கலங்கள்**, *ப.30.*
14. *ஆறுமுக நாவலர், (உரை.),* **திருவிளையாடற் புராணம்**, *பா. 37.*
15. **மதுரைத் தமிழ்ப் பேரகராதி**, *தொகுதி-3, ப. 210.*

16. *ஞா.விக்டர் ராசமாணிக்கம், (பதிப்.),* **சங்க இலக்கியத்தில் கலங்கள்**, *ப.32.*
17. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *ப. 32.*
18. *மேலது, பக். 35-36.*
19. *மேலது, பக். 168-172.*
20. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *ப. 159.*
21. *மேலது, பக். 164-166.*
22. *தி.வ.பழனியப்பப் பிள்ளை,* **கப்பல் சாத்திரம்**, *பக். 15-16.*
23. **கலைக்களஞ்சியம்** *தொகுதி-3, பக். 202-203.*
24. *தி.வ. பழனியப்பப்பிள்ளை,* **கப்பல் சாத்திரம்**, *ப. 1012.*
25. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *பக். 54-55.*
26. *தி.வ.பழனியப்பப் பிள்ளை,* **கப்பல் சாத்திரம்**, *பக். 107-108.*
27. **கலைக்களஞ்சியம்**, *தொகுதி-6, பக். 203-204.*
28. *அ.இராகவன்,* **நம் நாட்டுக் கப்பற்கலை**, *பக். 53-59.*

# முடிவுரை

- *சங்க இலக்கியம் என்பது தமிழரின் வாழ்வினை எடுத்துக் காட்டும் அரிய பதிவாக விளங்குகின்றன. தாம் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் வழி உருவாகிய உணர்ச்சிப் பாடல்களே சங்க இலக்கியமாகும்.*

- *பல்வேறு காலப் பரிணாம வளர்ச்சி பற்றியும் விளக்குவது சமூகம் ஆகும். மனிதன் தோன்றிய காலம் முதல் சமூக வாழ்க்கையே மேற்கொண்டிருந்தான் என்பதையும் பழங்காலத்தில் வில்லும் அம்பும் ஆயுதமாகப் பயன்பட்டதையும், பிறகு காட்டில் விலங்கின் இறைச்சியை வாடிக்கையான உணவாக மேற்கொண்டதனையும் அவற்றை ஒன்றுகூடி உண்ணும் நிலை ஒரு தனிச்சிறப்பாகவும் கருதப்பட்டமையைச் சங்கநூல் வாயிலாக அறியலாம்.*

- *பண்டைக்காலத்தில் ஏர் மட்டுமல்லாது மண்வெட்டி போன்ற கருவிகளும் பயன்படுத்தப்பட்டிருந்தன என்பதனையும் தானியங்களை விளைவித்து உண்ணும் சமூகத்தில் வேளாண்மை ஓர் உயரிய கூட்டுத்தொழிலாக இருந்தது என்பதையும் பெறமுடிகிறது.*

- *தச்சர், குயவர், கல்தச்சர் போன்றோர் உருவானமையால் உற்பத்தி நிலைகளில் சேமித்து வைக்கும் சமூகமாகச் சங்க காலம் மாறியிருந்தமையை உணரலாம்.*

- *சங்க காலத்தில் எல்லைகள் பரந்துவிரிந்த சில அமைப்புகளைக் கொண்டு விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.*

- *சங்க இலக்கியம், தமிழக எல்லைகளை வரையறுத்த பாங்கை பாடல்கள் கொண்டு மதிப்பிட முடிகிறது.*

- *மனித சமுதாயங்களிடையே இணக்கமான உறவை ஏற்படுத்துவன குடும்ப உறவுமுறை, சாதி, மதம், கல்வி, சட்டம் என்பதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.*

- சமூகம் தோன்றலும், வளர்தலும், அழிதலும் ஆகிய இச்செயல்கள் நாகரிகத்தின் வளர்ச்சி வரலாற்றில் நிகழ்ந்து கொண்டே உள்ளமையைச் சங்க இலக்கியச் சமூகக் கட்டமைப்புத் தெளிவு படுத்துகிறது.

- ஐவகை நிலப்பகுப்பிலும் சங்கத் தமிழர்கள், இயற்கையான, இயல்பான, செம்மாந்த வாழ்க்கையைத் திறம்பட நிகழ்த்தியுள்ளனர் என்பதற்கான அழுத்தமான சான்றுகள் கிடைக்கின்றன. இதனால் பல வழிகளிலும் பயணம் மேற்கொண்டு புதிய வாழ்வாதார முயற்சிகளைத் தமிழர் மேற்கொண்டமையும் புலனாகிறது.

- ஐந்நிலப் பாகுபாட்டிலும் மக்கள் பெயர்கள், பழக்க வழக்கங்கள், உணவு முறைகள், உறைவிட உருவாக்கங்கள், ஆடை அணிகள் போன்றவற்றில் குறிக்கத்தக்க வேறுபாடுகள் தென்படுகின்றன. அக வாழ்வில் உரியபொருள் நோக்கில் ஒன்றுபட்டிருந்த தமிழர்கள் புறவாழ்விலும் தனித்தன்மையும் நிலத்திற்கேற்ப வாழ்ந்தமை தெளிவாகிறது.

- வீரத்திற்குப் பெயர்பெற்ற முல்லையும், முயற்சிக்குப் புகழ் எய்திய குறிஞ்சியும், உழைப்புக்குக் குறியீடாகத் திகழ்ந்த மருதமும், பொருளீட்டலுக்காகத் துணைவே துணையாகி நின்ற நெய்தலும் பழந்தமிழரின் இன அடையாளங்களாகச் சங்க நூல்களில் பதிவாகியுள்ளன.

- பண்டமாற்று முறை என்பது போக்குவரத்தின் தோற்றுவாயை உருவாக்கியுள்ளமையை உணரமுடிகிறது. ஏற்றுமதி-இறக்குமதி நிகழ்ந்தபோது முகிழ்த்துள்ள அக்காலத் தொழில்நுட்பங்கள் போக்குவரத்தில் பழந்தமிழர் கொண்டிருந்த ஈடுபாட்டை முன்னிலைப்படுத்துகின்றன.

- பண்டத்தைத் தந்து நாணயத்தை மாற்றிக் கொண்ட பெருந் தன்மையும் நாணயத்தைத் தந்து பண்டத்தைப் பெற்றுக் கொண்ட வாணிப நுட்பமும் பட்டினப்பாலை போன்ற நூல்கள்வழி வெளிப்படுகின்றன. பொறுமையும் துணிவும் நேர்மையும்

பின்புலமாகத் திகழ்ந்தமையால் போக்குவரத்துப் பதிவில் வணிகப் பண்டமாற்று நாகரிகம் சிறப்பிடம் பெறுகிறது.

- நெல்லுக்கு உப்பும், உப்புக்கு நெல்லும் என அவரவர் மிகையாக இருப்பு வைத்திருந்த பண்டங்கள் தட்டுப்பாடின்றி அனைவருக்கும் கிடைத்திட ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவு முயற்சிக்குப் போக்குவரத்தே அடிகோலியுள்ளது.

- வண்டிகளிலும் கலங்களிலும் கொண்டு செல்லப்பட்ட பொருள்களும், அப்பொருள்களுக்கு மாற்றாகத் தமிழர்களும், அயலவர்களும் ஒருமைப்பாட்டுணர்வுடன் செய்துகொண்ட வாய்மொழி ஒப்பந்தங்களும் உயர்வாணிப நாகரிகத்தை உணர்த்துகின்றன.

- பொன்னும், மிளகும், உப்பும், நெல்லும் மாற்றிக் கொள்ளப்பட்ட நிறைவு நிலையில் போக்குவரத்துப் பல சிறந்த படிநிலைகளைப் பெற்றமைகிறது. தமிழினம் வந்தாரை வரவேற்கும் மனப்பான்மையும், அனைவரையும் ஓரினத்தாராகக் கருதும் பக்குவநெறியும் மிக்கவர்கள் என்பதைப் போக்குவரத்தின் இன்றியமையாமை எடுத்துக் காட்டுகிறது.

- சங்க காலத் துறைமுகங்கள் நிலவழிப் போக்குவரத்து மேம்படவும், நீர்வழிப் போக்குவரத்துச் செழிக்கவும் உறுதுணைபுரிந்தமையைச் சங்க நூல் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

- இயற்கை அரண்களாக விளங்கிய நிலப்பெருவழிகளும், நீர்க் கருவி வழிகளும் பழந்தமிழரின் பண்பாட்டுப் பதிவாகவும், போக்குவரத்து வளர்ச்சிக் காரணியாகவும் கொள்வதற்குச் சான்றளிக்கின்றன.

- பொருள் உற்பத்தியும் விற்பனை உற்பத்தியும் நிலவழியான உள்நாட்டு ஊர்திப் போக்குவரத்துக்குப் பெருமளவில் துணைபுரிந்துள்ளன.

- தமிழரும் பிறநாட்டினரும் கலந்துபேசும் பக்குவமும் பண்பாடும் வளர்வதற்குத் தரைவழி ஊர்திகள் பயன்பட்டமையைச் சங்க நூல்கள் உறுதிசெய்கின்றன.

- விலங்கினங்களில் குதிரை, போர்க்களத்தில் செயல்பட்டபோது போர்க்கருவிகள் சுமந்து செல்லும் வண்டிகளை இழுக்கவும் துணை செய்துள்ளன. பொதுவாகப் பொதி சுமக்கவும், வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளவும் குதிரை பயன்படுத்தப்படவில்லை. பெரும்பாலும் மனிதர் ஊர்ந்து செல்லும் வகையிலேயே குதிரைக்கு மதிப்பளிக்கப்பட்டிருந்தது.

- கோவேறு கழுதை 'அத்திரி' என்னும் பெயர் உடையது. இதனை 'இராச வாகனம்' எனவும் குறித்தனர். மதுரை வையையாற்றில் நிகழ்ந்த நீராட்டு விழாவில் அத்திரி ஊர்ந்து வந்தமையைச் சங்க இலக்கியமான பரிபாடல் சுட்டுகிறது.

- எருதுகளைப் பூட்டி வண்டிகளில் பொருள்களை ஏற்றிச் சென்று விற்பனை செய்த கூட்டுறவு முயற்சி, சங்க காலப் பண்பாட்டுப் பின்னணியாகப் பதிவு செய்யத்தக்கது.

- தமிழகத்திலிருந்து வடநாடுகளுக்கு வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளச் சென்ற தமிழர் அப்பகுதியிலும் தம் நாகரிகத்தை விதைத்துள்ளனர்.

- தமிழர், பிற மொழியைக் கற்றுக்கொள்ளப் பெரிதும் வாய்ப்பளித்தது தரைவழி வணிகமேயாகும். கலிங்க நாட்டில் தமிழர் நிகழ்த்திய வணிகம் பற்றிய வரலாறு, தென்னிந்தியத் தொல்லியல் ஆய்வுகளில் புலனாகிறது.

- தமிழகத்தில் உரோமாபுரி மக்கள் கலந்து வாழ்ந்தனர். அந்நிலையில் ஊர்தியூர்ந்து பண்டங்களை விற்பனை செய்த தமிழர்களோடு நெருங்கிப் பழகும் நாகரிகம் வளர்ந்தது.

- தமிழகத்தில் விளைந்த கரும்பு அயல்நாடுகளுக்குப் பரவக் காரணமாக அமைந்தது வணிகப் போக்குவரத்தின் முதன்மையைக் காட்டுகிறது.

- பழந்தமிழர், வெண்ணெய் உருக்கிப் பெற்ற நெய்க்கு மாற்றாகப் பொன் கட்டிகளைப் பெறாமல் எருமை, பசு, கன்று ஆகியவற்றை வாங்கியுள்ளனர்.

- தென்னை, பனை மரங்களிலிருந்து இறக்கப்பட்ட கள், தானியங்களான நெல், தினையிலிருந்து பெறப்பட்ட கள் முதலியன ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்குச் செல்ல நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டுள்ளன.

- பணம் என்பது மக்கள் தங்களுக்கு இடையே பொருள்கள், சேவைகள் முதலியவற்றைப் பரிமாறிக் கொள்ள ஈடான மதிப்புடையதாகத் திகழ்ந்தது. பணத் தேவைக்காகப் பொருள்களை விற்பனை செய்து உள்நாட்டின் பல பகுதிக்கும் செல்லத் தரைவழி ஊர்திகள் பெரிதும் துணைபுரிந்துள்ளன.

- தரை வழியாகவே காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்திற்கு மிளகு மூட்டைகள் படகுகளில் ஏற்றப்பட்டுக் கழிகளின் வழியே ஆற்றில் செலுத்தப்பட்டு துறைமுகத்தில் தங்கியிருந்த அயல்நாட்டுக் கப்பல்களில் ஏற்றப்பட்டன.

- பருத்தியைப் பயிரிடும் தொழிலும் பதப்படுத்தும் தொழிலும் தமிழகத்தில் சிறப்புற்றிருந்தமையால் நெசவுத் தொழிலும், வணிகத் தொழிலும் மேலோங்கின. இப்பணிக்கு முதன்மை ஊடகமாக நிலவழி ஊர்திகள் திகழ்ந்தன.

- உப்பு வணிகர் மாட்டு வண்டிகளில் நெல்லை ஏற்றிக்கொண்டு சென்றனர். நெல்லுக்கு மாற்றிய உப்பை வண்டிகளில் ஏற்றி அவர்கள் ஊர் ஊராகச் சென்றமைக்கான குறிப்புகள் சங்கப் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.

- சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும், சங்கு வளைகளை விற்கும் தொழிலும் செவ்வனே நிகழ்ந்தன. இத்தொழில்முறைக்கு நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டன. கடல்வழிப் பயணம்

செல்ல வேண்டிய பொருள்கள், தொடக்கத்தில் நிலம் வழியாகவே துறைமுகத்திற்குச் சென்றன என்பது சங்க நூல்களில் தெளிவாகிறது.

- பிற்காலச் சேரர் காலத்தில் எண்ணிறந்து கோவில்களுக்குச் செப்புத் திருமேனிகளும் பித்தளைத் திருமேனிகளும் படிமங்களும் தேவைப் பட்டன. இவற்றைக் கோயில்தோறும் கொண்டு சென்று சேர்க்கும் பணியில் நில ஊர்திகள் ஈடுபடுத்தப்பட்டன.
- காவிரி பாய்ந்த மருதவளநாடு தமிழகத்தின் நெற்களஞ்சியமாகவும் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற இடமாகவும் அமைந்தது. இச்சமுதாய வாழ்விற்கு நிலவழி ஊர்திகள் அரண்செய்துள்ளன.
- நெய்தல் நில மக்கள் தம் வாழ்வாதாரமாகக் கடலையே நம்பி வாழ்ந்தனர். கடல் அலைவாயினுள் ஓடியாடி நீந்தித் திரியும் பெரிய மீன்களைக் கண்ட அவர்கள், தாமும் அவற்றைப் போலவே நீந்துவதற்கு வசதி கண்டு இயற்கையைப் பொருத்தமாக்கிக் கொள்ள முற்பட்டனர். அதில் வெற்றியும் பெற்றனர். இம்முயற்சியில் அவர்கள் கண்டுபிடித்த ஊர்திகளைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் நிரம்பச் செய்திகள் காணப்படுகின்றன.
- பண்டைக்காலம் தொடங்கி வாணிபப் போக்குவரத்திற்கும் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கும் நீர்வழி ஊர்திகள் பயன்பட்டன. வாணிபம் செய்வதற்குக் கட்டுமரங்களை உருவாக்கியுள்ளனர். கட்டுமரங்களின் படிப்படியான வளர்ச்சியையும் அவை கடல் வாணிபத்திற்கு மட்டுமன்றி மீன்பிடிப்பதற்கும், கடல் பயணத்திற்கும் நீர்நிலை விளையாட்டிற்கும் பயன்பட்டமையையும் சங்க இலக்கியங்களின்வழி உணரமுடிகிறது.
- கப்பல் கட்டும் முறையையும் அவற்றிற்குப் பொருத்தமான மரங்கள் பயன்படுத்தியதையும் உணரமுடிகிறது. கப்பலைக் கடலில் செலுத்தும்போது அவற்றின் நாழிகை, நட்சத்திரம் ஆகியவற்றைக் கண்டறிந்து பயணம் செய்ததை உணரமுடிகிறது.
- அக்கால மக்கள் பயணம் செய்யும்போது இயற்கை உதவிக்கூறுகளின் துணைகொண்டு இயங்கிய கலம் பாய்மரக் கப்பல் என்பதனை அறியலாம்.

- பாய்மரங்களில் இருந்து வெளிநாடுகளிலிருந்து பண்டங்கள் இறக்கப்பட்டதனை உணரலாம். பழங்காலத்தில் காற்றின் துணை கொண்டு இயங்கிய கலம் பாய்மரக்கப்பலே என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

- கப்பலின் உதவியினால் பிற நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட முத்து, பவளம், ஆரம், சங்கு போன்றவற்றைக் கலங்கள் ஏற்றிக் கொண்டு வந்ததனை இலக்கியங்களின்வழி உணரலாம்.

- சங்க காலத்தில் பண்டமாற்று முறைகள் நடைபெற்றதையும் பஃறி என்ற ஓடத்தில் வெள்ளுப்பை ஏற்றிச்சென்று விற்றதனையும் பண்ட மாற்றாக நெல்லைப் பெற்று வந்ததையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. சங்க காலத்தில் மிதவை, புணை, தெப்பம், அம்பி, கட்டுமரம், தோணி, படகு, ஓடம், பரிசில், வள்ளம், சோங்கு, வள்ளம், திமில், நாவாய், வங்கம், கலம், மிதவை, கப்பல், பஃறி என்று பதினெட்டு வகையான கலன்களைத் தமிழர்கள் கண்டிருந்தனர். இதனைத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவதிலிருந்து பழந்தமிழர்கள் கலன் அமைப்பதில் புலமையைப் பெற்றிருந்தமை விளங்குகிறது.

- சங்க காலத்தில் உள்நாட்டு வாணிகமும் நன்கு வளர்ச்சி அடைந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. தமிழக ஒட்டு மொத்த வரலாற்றில் சங்க காலம் ஒரு திருப்புமுனையாக இருந்தமையால் கடல்சார் நடவடிக்கைகளிலும் வளர்ச்சி நிலையைப் பெற்றதை உணரமுடிகிறது. அவற்றை விளக்கும் வகையிலான செய்திகள் சங்க இலக்கியங்களில் பலவாறு காணப்படுகின்றன.

சங்க இலக்கியத் தொகுப்பு முழுதும் இடம்பெறும் ஊர்திகள் பற்றி ஆராய முயன்றுள்ளது இவ்வாய்வு. சங்க நூல்களின் ஒவ்வோர் இலக்கியத்திலும் பயின்றுவரும் ஊர்திகளைப் பற்றிய தரவுகளை விரிவாகத் தனித்தனியே ஆராய்தலும், சங்க இலக்கியத் தொடர்ச்சியான காப்பிய இலக்கியத்தில் இடம்பெறும் ஊர்திகளைச் சங்க நூல்களோடு ஒப்பிட்டு மெய்ம்மைகளைப் பெறுவதும் சுட்டத்தக்க ஆய்வுப்பரப்புக்கு இடமளிக்கும்.

## துணைநூற்பட்டியல்

**முதன்மை நூல்**

*பதிப்பாசிரியர்கள் பலர்* **சங்க இலக்கியம் முழுவதும்**
*(மூலம் மற்றும் உரையுடன்)*
*என்.சி.பி.எச்.,*
*சென்னை.*
*2007*

**துணைமை நூல்கள்**

*அப்பாத்துரைப் பிள்ளை, கா.* **சங்க இலக்கிய மாண்பு**
*அலமேலு நிலையம்,*
*சென்னை.*
*1980*

*அனுமந்தன், கி.ர.* **பண்டைக்கால நாகரிகங்களின் வரலாறு**
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,*
*சென்னை.*
*மறுபதிப்பு 1985*

*ஆறுமுக நாவலர் (உரை.)* **திருவிளையாடற் புராணம்**
*முல்லை நிலையம்,*
*சென்னை.*
*1997*

*இராகவன், அ.* **நம் நாட்டுக் கப்பற்கலை**
*தமிழ்ப் புத்தகாலயம்,*
*சென்னை.*
*1968*

*இராசமாணிக்கனார், மா.* **தமிழ்மொழி இலக்கிய வரலாறு**
*பாரி நிலையம்,*
*சென்னை.*
*1969*

| | |
|---|---|
| *இராசமாணிக்கனார், மா.* | **தமிழக வரலாறும் பண்பாடும்**<br>*சாரதா பதிப்பகம்,*<br>*சென்னை.*<br>*2011* |
| *இராசமாணிக்கனார், மா.* | **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**<br>*சாகித்திய அகாதெமி,*<br>*புதுதில்லி.*<br>*2012* |
| *இராமசாமி, கீ.சி.* | **இந்தியாவில் போக்குவரவு**<br>*அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்.,*<br>*சென்னை.*<br>*1958* |
| *இராசரெத்தினம், கு.* | **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**<br>*குகன் பதிப்பகம்,*<br>*வடுவூர்,*<br>*திருவாரூர் மாவட்டம்.*<br>*2004* |
| *இலக்குவனார், சி.* | **இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்**<br>*பாரி நிலையம்,*<br>*சென்னை.*<br>*1969* |
| எங்கெல்ஸ் | **டூரிங்கிற்கு மறுப்பு**<br>*முன்னேற்றப் பதிப்பகம்,*<br>*மாஸ்கோ.*<br>*1969* |
| *எங்கெல்ஸ் (மூ.நூ.)*<br>*நா.தர்மராஜன் (மொ.பெ.)* | **குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்**<br>*முன்னேற்றப் பதிப்பகம்,*<br>*மாஸ்கோ.*<br>*மறுபதிப்பு 1973* |

*எர்னஸ்ட் பார்க்கர், (மோ. (மூ.நூ.) வள்ளுவன் கிளாரன்சு (மொ.பெ.)*

**சமூக அரசியல் கொள்கையின் அடிப்படைகள்**
*தமிழ் வெளியீட்டுக் கழகம்,*
*சென்னை.*
*1968*

*ஓலைச்சுவடித் துறை*

**நாவான் சாத்திரம்**
*சுவடி எண் 718*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்.*

*ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உரை.)*

**சங்க இலக்கியம்-புறநானூறு**
*கழகம்,*
*சென்னை.*
*1968*

*கடிகாசலம், ந.*

**சங்க இலக்கியம்-கவிதையியல் நோக்கில் சிந்தனைப் பின்புல மதிப்பீடு**
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை.*
*1998*

*கந்தசாமி, சோ.ந.*

**தமிழிலக்கியச் செல்வம்-தொகுதி-1**
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்.*
*2003*

*கோசாம்பி, டி.டி. (மூ.நூ.) எஸ்.ஆர்.என்.சத்யா (மொ.பெ.)*

**பண்டைய இந்தியா-அதன் பண்பாடும் நாகரிகமும்**
*இந்திய வரலாற்று ஆய்வு அமைப்பு*
*புதுதில்லி.*
*1989*

*சங்கரமணி, ஐ.*

**சங்க கால ஆடைகளும் சாலியரும்**
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சென்னை.*
*2009*

*சங்கரவீரபுத்திரன், கோ.* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம்-** *தொகுதி-2*
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்.*
*2012*

*சிதம்பரனார், சாமி.* **தமிழர் வாழ்வும் பண்பாடும்**
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை.*
*2011*

*சுப்பிரமணிய பிள்ளை, கா.* **பழந்தமிழர் நாகரிகம்**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை.*
*2009*

*சுப்பிரமணியன், கா.* **சங்க காலச் சமுதாயம்**
*என்.சி.பி.எச்.,*
*சென்னை.*
*1993*

*சுப்பிரமணியன், ச.வே. (பதி.)* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம் - தொகுதி-1**
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்.*
*2012*

*சுப்பிரமணியன், ந.* **சங்க கால வாழ்வியல்**
*என்.சி.பி.எச்.,*
*சென்னை.*
*1986*

*சுவாமிநாதன், எ.* **நகர்ப்புறப் புவியியல்**
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை.*
*1989*

*செந்துறை முத்து*
**சங்க காலச் சமுதாயச் சிந்தனைகள்**
*அருண்மொழிப் பதிப்பகம்,*
*சேலம்.*
*1989*

*தட்சிணாமூர்த்தி, அ.*
**தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
*ஐந்திணைப் பதிப்பகம்,*
*சென்னை.*
*1999*

*நக்கீரர் (உரை.)*
**இறையனார் களவியலுரை**
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை.*
*2006*

*நாராயணசாமி ஐயர், அ. (உரை.)*
**நற்றிணை நானூறு**
*ஐந்திணைப் பதிப்பகம்,*
*சென்னை.*
*1971*

*பல்கலைக்கழகத்தார்*
**சமூகவியல் கொள்கைகள்**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*அண்ணாமலைநகர்.*
*1999*

*பழனியப்பப்பிள்ளை, தி.வ.*
**கப்பல் சாத்திரம்**
*அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்,*
*சென்னை.*
*1950*

*பழனிவேலனார், வி.பொ.*
**பண்டைத் தமிழர் வாழ்வியல் வரலாறு**
*தன்மானத் தனித்தமிழ்ப் பதிப்பகம்,*
*மன்னார்குடி.*
*1996*

*மயிலை சீனி.வேங்கடசாமி* **தெ.பொ.மீ. மணிவிழா மலர்**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*அண்ணாமலை நகர்.*
*1971*

*மயிலை சீனி.வேங்கடசாமி* **பழங்காலத் தமிழர் வாணிகம்**
*என்.சி.பி.எச்.,*
*சென்னை.*
*1974*

*மாணிக்கம், வீ.* **கொங்குநாடு - கி.பி. 1400 வரை**
*கொங்குநாடு மக்கள் வெளியீடு,*
*சென்னை.*
*2001*

*மாணிக்கம், வீ.* **தமிழர் வாழ்வியல்**
*ராமு பதிப்பகம்,*
*மதுரை.*
*2010*

*மீனாட்சிசுந்தரம், ச.மெ.* **செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம்- தொகுதி-3**
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்.*
*2012*

*மீனாட்சிசுந்தரம், ச.மெ.* **செவ்வியல் நோக்கில் செம்மொழி இலக்கியங்கள் - தொகுதி-1**
*மெய்யப்பன் பதிப்பகம்,*
*சிதம்பரம்.*
*2008*

*ராகவய்யங்கார், ரா.* **தமிழ் வரலாறு**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*அண்ணாமலைநகர்.*
*1979*

| | |
|---|---|
| *வானமாமலை, நா.* | **மார்க்சிய சமூகவியல் கொள்கை வரலாறு** |
| | *என்.சி.பி.எச்.,* |
| | *சென்னை.* |
| | *1976* |
| *விக்டர் ராசமாணிக்கம் (பதிப்.)* | **சங்க இலக்கியத்தில் கலங்கள்** |
| | *தமிழ்ப் பல்கலைக்கழகம்,* |
| | *தஞ்சாவூர்.* |
| | *1994* |
| *விசுவநாதன், அ. (உரை.)* | **சங்க இலக்கியம் - கலித்தொகை** |
| | *என்.சி.பி.எச்.,* |
| | *சென்னை.* |
| | *மூன்றாம் அச்சு 2007* |
| *வேலுப்பிள்ளை, ஆ.* | **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்** |
| | *பாரி புத்தகப் பண்ணை,* |
| | *சென்னை.* |
| | *1985* |
| *ஜெயக்குமார், பா.* | **தமிழகத் துறைமுகங்கள்** |
| | *தமிழ்ப் பல்கலைக்கழகம்,* |
| | *தஞ்சாவூர்.* |
| | *2001* |
| Hall, K.R. | **Trade and State Craft in the Age of Cholas** |
| | Cambridge University Press, |
| | London. |
| | 1980 |
| John M.Shepherd | **Sociology** |
| | West Publishing Company |
| | New York. |
| | 1990 |

| | |
|---|---|
| Kesavan Veludhat | **Political Structure of Early Medieval South India**<br>New Delhi.<br>1993 |
| Korber, A.K. | **Anthropology**<br>Oxford and IBH Publishing Company,<br>Calcutta.<br>1972 |
| Krishnaswamy Iyengar, S. | **Some Contribution of South India to Indian Culture**<br>Cosmo Publications,<br>New Delhi.<br>1931 |
| Nilakanda Sastri, K. | **A History of South India**<br>Indian Council of Historical Research,<br>New Delhi.<br>1987 |
| Paranavatana, S. (Ed.) | **Inscriptions of Ceylon, Vol. I**<br>Annual Bibliography of Indian Archaeology<br>1970 |
| Paranavatana, S. | **Tamil House Holders' Terrace-Anuradhapura, Vol. 9**<br>Annual Bibliography of Indian Archaeology.<br>1938 |
| Singaravelu | **Social Life of the Tamil**<br>Cosmo Publications,<br>New Delhi.<br>1935 |

Srinivasa Iyengar, P.T. **History of the Tamil**
Asian Educational Services,
New Delhi.
1982

**அகராதி**

**மதுரைத் தமிழ்ப் பேரகராதி**
*மதுரை.*
*1956*

**வீரமாமுனிவர் சதுரகராதி**
*சந்தியா பதிப்பகம்,*
*சென்னை.*
*2005*

**New Webster's Dictionary of English Language**
G.Bell and Sons,
London.
1961

**நிகண்டு**

*திவாகர முனிவர்* **திவாகரநிகண்டு (பெயர்த்தொகுதி)**
*சந்தியா பதிப்பகம்,*
*சென்னை.*
*2004*

**களஞ்சியம்**

**கலைக்களஞ்சியம், தொகுதி-3**
*தமிழ் வளர்ச்சிக்கழகம்,*
*சென்னை.*
*1956*

**கலைக்களஞ்சியம், தொகுதி-6**
*தமிழ் வளர்ச்சிக்கழகம்,*
*சென்னை.*
*1959*

**கலைக்களஞ்சியம், தொகுதி-10**

*தமிழ் வளர்ச்சிக்கழகம்,*

*சென்னை.*

*1963*

**வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-2**

*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*

*தஞ்சாவூர்.*

*1991*

**வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-8**

*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*

*தஞ்சாவூர்.*

*1991*

**Encyclopaedia Britannica, Vol. 5**
Macropaedia Series

The University of Chicago

United States of America.

1981

**Encyclopaedia of Social Science, Vol. XIII**

Macmillan Company Limited

William Benton Press,

Chicago.

1851

**Macmillan Student Encyclopaedia of Sociology**
Macmillan Press,

London.

1983

William Benton (Ed.) **Encyclopaedia Britannica, Vol. 3**

A New Servey of Universal Knowledge,

Chicago.

1967

# முடிவுரை

- சங்க இலக்கியம் என்பது தமிழரின் வாழ்வினை எடுத்துக் காட்டும் அரிய பதிவாக விளங்குகின்றன. தாம் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் வழி உருவாகிய உணர்ச்சிப் பாடல்களே சங்க இலக்கியமாகும்.
- பல்வேறு காலப் பரிணாம வளர்ச்சி பற்றியும் விளக்குவது சமூகம் ஆகும். மனிதன் தோன்றிய காலம் முதல் சமூக வாழ்க்கையே மேற்கொண்டிருந்தான் என்பதையும் பழங்காலத்தில் வில்லும் அம்பும் ஆயுதமாகப் பயன்பட்டதையும், பிறகு காட்டில் விலங்கின் இறைச்சியை வாடிக்கையான உணவாக மேற்கொண்டதனையும் அவற்றை ஒன்றுகூடி உண்ணும் நிலை ஒரு தனிச்சிறப்பாகவும் கருதப்பட்டமையைச் சங்கநூல் வாயிலாக அறியலாம்.
- பண்டைக்காலத்தில் ஏர் மட்டுமல்லாது மண்வெட்டி போன்ற கருவிகளும் பயன்படுத்தப்பட்டிருந்தன என்பதனையும் தானியங்களை விளைவித்து உண்ணும் சமூகத்தில் வேளாண்மை ஓர் உயரிய கூட்டுத்தொழிலாக இருந்தது என்பதையும் பெறமுடிகிறது.
- தச்சர், குயவர், கல்தச்சர் போன்றோர் உருவானமையால் உற்பத்தி நிலைகளில் சேமித்து வைக்கும் சமூகமாகச் சங்க காலம் மாறியிருந்தமையை உணரலாம்.
- சங்க காலத்தில் எல்லைகள் பரந்துவிரிந்த சில அமைப்புகளைக் கொண்டு விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.
- சங்க இலக்கியம், தமிழக எல்லைகளை வரையறுத்த பாங்கை பாடல்கள் கொண்டு மதிப்பிட முடிகிறது.
- மனித சமுதாயங்களிடையே இணக்கமான உறவை ஏற்படுத்துவன குடும்ப உறவுமுறை, சாதி, மதம், கல்வி, சட்டம் என்பதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.

- சமூகம் தோன்றலும், வளர்தலும், அழிதலும் ஆகிய இச்செயல்கள் நாகரிகத்தின் வளர்ச்சி வரலாற்றில் நிகழ்ந்து கொண்டே உள்ளமையைச் சங்க இலக்கியச் சமூகக் கட்டமைப்புத் தெளிவு படுத்துகிறது.

- ஐவகை நிலப்பகுப்பிலும் சங்கத் தமிழர்கள், இயற்கையான, இயல்பான, செம்மாந்த வாழ்க்கையைத் திறம்பட நிகழ்த்தியுள்ளனர் என்பதற்கான அழுத்தமான சான்றுகள் கிடைக்கின்றன. இதனால் பல வழிகளிலும் பயணம் மேற்கொண்டு புதிய வாழ்வாதார முயற்சிகளைத் தமிழர் மேற்கொண்டமையும் புலனாகிறது.

- ஐந்நிலப் பாகுபாட்டிலும் மக்கள் பெயர்கள், பழக்க வழக்கங்கள், உணவு முறைகள், உறைவிட உருவாக்கங்கள், ஆடை அணிகள் போன்றவற்றில் குறிக்கத்தக்க வேறுபாடுகள் தென்படுகின்றன. அக வாழ்வில் உரியபொருள் நோக்கில் ஒன்றுபட்டிருந்த தமிழர்கள் புறவாழ்விலும் தனித்தன்மையும் நிலத்திற்கேற்ப வாழ்ந்தமை தெளிவாகிறது.

- வீரத்திற்குப் பெயர்பெற்ற முல்லையும், முயற்சிக்குப் புகழ் எய்திய குறிஞ்சியும், உழைப்புக்குக் குறியீடாகத் திகழ்ந்த மருதமும், பொருளீட்டலுக்காகத் துணைவே துணையாகி நின்ற நெய்தலும் பழந்தமிழரின் இன அடையாளங்களாகச் சங்க நூல்களில் பதிவாகியுள்ளன.

- பண்டமாற்று முறை என்பது போக்குவரத்தின் தோற்றுவாயை உருவாக்கியுள்ளமையை உணரமுடிகிறது. ஏற்றுமதி-இறக்குமதி நிகழ்ந்தபோது முகிழ்த்துள்ள அக்காலத் தொழில்நுட்பங்கள் போக்குவரத்தில் பழந்தமிழர் கொண்டிருந்த ஈடுபாட்டை முன்னிலைப்படுத்துகின்றன.

- பண்டத்தைத் தந்து நாணயத்தை மாற்றிக் கொண்ட பெருந் தன்மையும் நாணயத்தைத் தந்து பண்டத்தைப் பெற்றுக் கொண்ட வாணிப நுட்பமும் பட்டினப்பாலை போன்ற நூல்கள்வழி வெளிப்படுகின்றன. பொறுமையும் துணிவும் நேர்மையும்

பின்புலமாகத் திகழ்ந்தமையால் போக்குவரத்துப் பதிவில் வணிகப் பண்டமாற்று நாகரிகம் சிறப்பிடம் பெறுகிறது.

- நெல்லுக்கு உப்பும், உப்புக்கு நெல்லும் என அவரவர் மிகையாக இருப்பு வைத்திருந்த பண்டங்கள் தட்டுப்பாடின்றி அனைவருக்கும் கிடைத்திட ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவு முயற்சிக்குப் போக்குவரத்தே அடிகோலியுள்ளது.

- வண்டிகளிலும் கலங்களிலும் கொண்டு செல்லப்பட்ட பொருள்களும், அப்பொருள்களுக்கு மாற்றாகத் தமிழர்களும், அயலவர்களும் ஒருமைப்பாட்டுணர்வுடன் செய்துகொண்ட வாய்மொழி ஒப்பந்தங்களும் உயர்வாணிப நாகரிகத்தை உணர்த்துகின்றன.

- பொன்னும், மிளகும், உப்பும், நெல்லும் மாற்றிக் கொள்ளப்பட்ட நிறைவு நிலையில் போக்குவரத்துப் பல சிறந்த படிநிலைகளைப் பெற்றமைகிறது. தமிழினம் வந்தாரை வரவேற்கும் மனப்பான்மையும், அனைவரையும் ஓரினத்தாராகக் கருதும் பக்குவநெறியும் மிக்கவர்கள் என்பதைப் போக்குவரத்தின் இன்றியமையாமை எடுத்துக் காட்டுகிறது.

- சங்க காலத் துறைமுகங்கள் நிலவழிப் போக்குவரத்து மேம்படவும், நீர்வழிப் போக்குவரத்துச் செழிக்கவும் உறுதுணைபுரிந்தமையைச் சங்க நூல் வரிகள் மெய்ப்பிக்கின்றன.

- இயற்கை அரண்களாக விளங்கிய நிலப்பெருவழிகளும், நீர்க் கருவி வழிகளும் பழந்தமிழரின் பண்பாட்டுப் பதிவாகவும், போக்குவரத்து வளர்ச்சிக் காரணியாகவும் கொள்வதற்குச் சான்றளிக்கின்றன.

- பொருள் உற்பத்தியும் விற்பனை உற்பத்தியும் நிலவழியான உள்நாட்டு ஊர்திப் போக்குவரத்துக்குப் பெருமளவில் துணைபுரிந்துள்ளன.

- தமிழரும் பிறநாட்டினரும் கலந்துபேசும் பக்குவமும் பண்பாடும் வளர்வதற்குத் தரைவழி ஊர்திகள் பயன்பட்டமையைச் சங்க நூல்கள் உறுதிசெய்கின்றன.

- விலங்கினங்களில் குதிரை, போர்க்களத்தில் செயல்பட்டபோது போர்க்கருவிகள் சுமந்து செல்லும் வண்டிகளை இழுக்கவும் துணை செய்துள்ளன. பொதுவாகப் பொதி சுமக்கவும், வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளவும் குதிரை பயன்படுத்தப்படவில்லை. பெரும்பாலும் மனிதர் ஊர்ந்து செல்லும் வகையிலேயே குதிரைக்கு மதிப்பளிக்கப்பட்டிருந்தது.

- கோவேறு கழுதை 'அத்திரி' என்னும் பெயர் உடையது. இதனை 'இராச வாகனம்' எனவும் குறித்தனர். மதுரை வையையாற்றில் நிகழ்ந்த நீராட்டு விழாவில் அத்திரி ஊர்ந்து வந்தமையைச் சங்க இலக்கியமான பரிபாடல் சுட்டுகிறது.

- எருதுகளைப் பூட்டி வண்டிகளில் பொருள்களை ஏற்றிச் சென்று விற்பனை செய்த கூட்டுறவு முயற்சி, சங்க காலப் பண்பாட்டுப் பின்னணியாகப் பதிவு செய்யத்தக்கது.

- தமிழகத்திலிருந்து வடநாடுகளுக்கு வணிகப் போக்குவரத்து மேற்கொள்ளச் சென்ற தமிழர் அப்பகுதியிலும் தம் நாகரிகத்தை விதைத்துள்ளனர்.

- தமிழர், பிற மொழியைக் கற்றுக்கொள்ளப் பெரிதும் வாய்ப்பளித்தது தரைவழி வணிகமேயாகும். கலிங்க நாட்டில் தமிழர் நிகழ்த்திய வணிகம் பற்றிய வரலாறு, தென்னிந்தியத் தொல்லியல் ஆய்வுகளில் புலனாகிறது.

- தமிழகத்தில் உரோமாபுரி மக்கள் கலந்து வாழ்ந்தனர். அந்நிலையில் ஊர்தியூர்ந்து பண்டங்களை விற்பனை செய்த தமிழர்களோடு நெருங்கிப் பழகும் நாகரிகம் வளர்ந்தது.

- தமிழகத்தில் விளைந்த கரும்பு அயல்நாடுகளுக்குப் பரவக் காரணமாக அமைந்தது வணிகப் போக்குவரத்தின் முதன்மையைக் காட்டுகிறது.

- பழந்தமிழர், வெண்ணெய் உருக்கிப் பெற்ற நெய்க்கு மாற்றாகப் பொன் கட்டிகளைப் பெறாமல் எருமை, பசு, கன்று ஆகியவற்றை வாங்கியுள்ளனர்.

- தென்னை, பனை மரங்களிலிருந்து இறக்கப்பட்ட கள், தானியங்களான நெல், தினையிலிருந்து பெறப்பட்ட கள் முதலியன ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்குச் செல்ல நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டுள்ளன.

- பணம் என்பது மக்கள் தங்களுக்கு இடையே பொருள்கள், சேவைகள் முதலியவற்றைப் பரிமாறிக் கொள்ள ஈடான மதிப்புடையதாகத் திகழ்ந்தது. பணத் தேவைக்காகப் பொருள்களை விற்பனை செய்து உள்நாட்டின் பல பகுதிக்கும் செல்லத் தரைவழி ஊர்திகள் பெரிதும் துணைபுரிந்துள்ளன.

- தரை வழியாகவே காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்திற்கு மிளகு மூட்டைகள் படகுகளில் ஏற்றப்பட்டுக் கழிகளின் வழியே ஆற்றில் செலுத்தப்பட்டு துறைமுகத்தில் தங்கியிருந்த அயல்நாட்டுக் கப்பல்களில் ஏற்றப்பட்டன.

- பருத்தியைப் பயிரிடும் தொழிலும் பதப்படுத்தும் தொழிலும் தமிழகத்தில் சிறப்புற்றிருந்தமையால் நெசவுத் தொழிலும், வணிகத் தொழிலும் மேலோங்கின. இப்பணிக்கு முதன்மை ஊடகமாக நிலவழி ஊர்திகள் திகழ்ந்தன.

- உப்பு வணிகர் மாட்டு வண்டிகளில் நெல்லை ஏற்றிக்கொண்டு சென்றனர். நெல்லுக்கு மாற்றிய உப்பை வண்டிகளில் ஏற்றி அவர்கள் ஊர் ஊராகச் சென்றமைக்கான குறிப்புகள் சங்கப் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.

- சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும், சங்கு வளைகளை விற்கும் தொழிலும் செவ்வனே நிகழ்ந்தன. இத்தொழில்முறைக்கு நிலவழி ஊர்திகள் பெரிதும் பயன்பட்டன. கடல்வழிப் பயணம்

செல்ல வேண்டிய பொருள்கள், தொடக்கத்தில் நிலம் வழியாகவே துறைமுகத்திற்குச் சென்றன என்பது சங்க நூல்களில் தெளிவாகிறது.

- பிற்காலச் சேரர் காலத்தில் எண்ணிறந்து கோவில்களுக்குச் செப்புத் திருமேனிகளும் பித்தளைத் திருமேனிகளும் படிமங்களும் தேவைப் பட்டன. இவற்றைக் கோயில்தோறும் கொண்டு சென்று சேர்க்கும் பணியில் நில ஊர்திகள் ஈடுபடுத்தப்பட்டன.
- காவிரி பாய்ந்த மருதவளநாடு தமிழகத்தின் நெற்களஞ்சியமாகவும் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற இடமாகவும் அமைந்தது. இச்சமுதாய வாழ்விற்கு நிலவழி ஊர்திகள் அரண்செய்துள்ளன.
- நெய்தல் நில மக்கள் தம் வாழ்வாதாரமாகக் கடலையே நம்பி வாழ்ந்தனர். கடல் அலைவாயினுள் ஓடியாடி நீந்தித் திரியும் பெரிய மீன்களைக் கண்ட அவர்கள், தாமும் அவற்றைப் போலவே நீந்துவதற்கு வசதி கண்டு இயற்கையைப் பொருத்தமாக்கிக் கொள்ள முற்பட்டனர். அதில் வெற்றியும் பெற்றனர். இம்முயற்சியில் அவர்கள் கண்டுபிடித்த ஊர்திகளைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் நிரம்பச் செய்திகள் காணப்படுகின்றன.
- பண்டைக்காலம் தொடங்கி வாணிபப் போக்குவரத்திற்கும் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கும் நீர்வழி ஊர்திகள் பயன்பட்டன. வாணிபம் செய்வதற்குக் கட்டுமரங்களை உருவாக்கியுள்ளனர். கட்டுமரங்களின் படிப்படியான வளர்ச்சியையும் அவை கடல் வாணிபத்திற்கு மட்டுமன்றி மீன்பிடிப்பதற்கும், கடல் பயணத்திற்கும் நீர்நிலை விளையாட்டிற்கும் பயன்பட்டமையையும் சங்க இலக்கியங்களின்வழி உணரமுடிகிறது.
- கப்பல் கட்டும் முறையையும் அவற்றிற்குப் பொருத்தமான மரங்கள் பயன்படுத்தியதையும் உணரமுடிகிறது. கப்பலைக் கடலில் செலுத்தும்போது அவற்றின் நாழிகை, நட்சத்திரம் ஆகியவற்றைக் கண்டறிந்து பயணம் செய்ததை உணரமுடிகிறது.
- அக்கால மக்கள் பயணம் செய்யும்போது இயற்கை உதவிக்கூறுகளின் துணைகொண்டு இயங்கிய கலம் பாய்மரக் கப்பல் என்பதனை அறியலாம்.

- பாய்மரங்களில் இருந்து வெளிநாடுகளிலிருந்து பண்டங்கள் இறக்கப்பட்டதனை உணரலாம். பழங்காலத்தில் காற்றின் துணை கொண்டு இயங்கிய கலம் பாய்மரக்கப்பலே என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

- கப்பலின் உதவியினால் பிற நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட முத்து, பவளம், ஆரம், சங்கு போன்றவற்றைக் கலங்கள் ஏற்றிக் கொண்டு வந்ததனை இலக்கியங்களின்வழி உணரலாம்.

- சங்க காலத்தில் பண்டமாற்று முறைகள் நடைபெற்றதையும் பஃறி என்ற ஓடத்தில் வெள்ளுப்பை ஏற்றிச்சென்று விற்றதனையும் பண்ட மாற்றாக நெல்லைப் பெற்று வந்ததையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. சங்க காலத்தில் மிதவை, புணை, தெப்பம், அம்பி, கட்டுமரம், தோணி, படகு, ஓடம், பரிசில், வள்ளம், சோங்கு, வள்ளம், திமில், நாவாய், வங்கம், கலம், மிதவை, கப்பல், பஃறி என்று பதினெட்டு வகையான கலன்களைத் தமிழர்கள் கண்டிருந்தனர். இதனைத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவதிலிருந்து பழந்தமிழர்கள் கலன் அமைப்பதில் புலமையைப் பெற்றிருந்தமை விளங்குகிறது.

- சங்க காலத்தில் உள்நாட்டு வாணிகமும் நன்கு வளர்ச்சி அடைந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. தமிழக ஒட்டு மொத்த வரலாற்றில் சங்க காலம் ஒரு திருப்புமுனையாக இருந்தமையால் கடல்சார் நடவடிக்கைகளிலும் வளர்ச்சி நிலையைப் பெற்றதை உணரமுடிகிறது. அவற்றை விளக்கும் வகையிலான செய்திகள் சங்க இலக்கியங்களில் பலவாறு காணப்படுகின்றன.

சங்க இலக்கியத் தொகுப்பு முழுதும் இடம்பெறும் ஊர்திகள் பற்றி ஆராய முயன்றுள்ளது இவ்வாய்வு. சங்க நூல்களின் ஒவ்வோர் இலக்கியத்திலும் பயின்றுவரும் ஊர்திகளைப் பற்றிய தரவுகளை விரிவாகத் தனித்தனியே ஆராய்தலும், சங்க இலக்கியத் தொடர்ச்சியான காப்பிய இலக்கியத்தில் இடம்பெறும் ஊர்திகளைச் சங்க நூல்களோடு ஒப்பிட்டு மெய்ம்மைகளைப் பெறுவதும் சுட்டத்தக்க ஆய்வுப்பரப்புக்கு இடமளிக்கும்.